# ஸ்ரீபுரந்தரோபனிஷத்

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனை நாளான
01-02-2021 அன்று வெளியிடப்பட்டது

தொடர்புக்கு:
‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
8904458276 haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**சலுகை விலையில் இந்தப் புத்தகம் வெளிவருவதற்கு பொருளுதவி புரிந்த ஹரி பக்தர்கள் அனைவருக்கும் நன்றி!!**

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

## பொருளடக்கம்

# ஸ்ரீ புரந்தரோபநிஷத்

## வாழ்த்துரை

ஸ்ரீ புரந்தர தாஸர் நாரதாம்ஸ ஸம்பூதர். கர்நாடக சங்கீதத்தின் பிதாமகர் எனப் போற்றப்படுபவர். நவகோடி நாராயணன் எனப் பிரஸித்தியான வைர வியாபாரியாக இருந்த சீனப்ப நாயக், பாண்டுரங்கனால் ஆட்கொள்ளப்பட்டு, அனைத்தையும் துறந்து, குரு ஸ்ரீ வியாஸராஜரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராகி, தாஸ தீக்ஷை பெற்று "புரந்தர விட்டல" என்னும் அங்கிதத்தில் கன்னடத்தில் ஸாஹித்தியங்களைப் படைத்த மஹானுபாவர் இவர். "தாஸரெந்தரெ புரந்தர தாஸரையா" என ஸ்ரீ வியாஸராஜராலேயே கௌரவிக்கப்பட்டவர். ஸ்ரீ ஹரியினைக் கண்ட அபரோக்ஷ ஞானி. ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ விஜயீந்திரர், ஸ்ரீ கனகதாஸர் போன்றோரின் சம காலத்தவர். பகவானின் லீலைகள், மஹிமைகள், தீர்த்த க்ஷேத்திர யாத்திரை, வேதங்கள், உபநிஷத்துக்கள், புராண இதிஹாச விஷயங்கள், தேவதைகள் மற்றும் குரு மஹனீயர்களின் துதிப்பாடல்கள், அனுஷ்டானங்கள், வைராக்கிய பதங்கள் எனப் பலவற்றை பற்றியும், பதங்கள், உகாபோகங்கள், ஸுளாதிகள் எனப் பலவகைகளிலும், லாலி, தாலாட்டு, ஸுவ்வி, ஊஞ்சல் பாட்டு, ஷோபானே எனும் மங்களப்பாட்டு, தேவர நாமா, நிந்தா ஸ்துதி, தண்டகம், கத்யம் (உரைநடை) எனப் பலவிதங்களிலும் சுமார் 4,75,000 படைப்புகளை அளித்து பக்தியை பரப்பிய மஹனீயர். தியாகராஜர், முத்து ஸ்வாமி தீக்ஷிதர் போன்றவர்களுக்கும், ஸ்ரீ விஜய தாஸர், ஸ்ரீ கோபால தாஸர், ஸ்ரீ ஜகன்னாத தாஸர் போன்றவர்களுக்கும் முன்னோடியாகத் திகழ்ந்தவர். அவரது படைப்புகளே "புரந்தரோபநிஷத்" எனக் கொண்டாடப்படுகிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீ புரந்தர தாஸரின் படைப்புகளைப் பற்றி 'புரந்தரோபநிஷத்' எனத் தொகுத்து பாமரரும் அறியும் வண்ணம் கன்னடத்தில் வழங்கிய திரு.

பன்னஞ்செ கோவிந்தாசாரியார் அவர்களின் படைப்பை 'ஜகன்னாத கேஸவ' திரு.சத்ய நாராயணன் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அவர் சமீப காலத்தில் வெளியிட்டுள்ள இன்னும் பிற தாஸ ஸாஹித்ய படைப்புகளின் நூல் வரிசையிலே, இதுவும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஸ்ரீ புரந்தர தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ விட்டலன் ஆயுள், ஆரோக்யம், ஐஸ்வர்யம் போன்றவற்றை அருளி இன்னும் பல்வேறு நூல்களைத் தொடர்ந்து வெளியிடப் பிரார்த்தனை செய்கிறேன்.

மேடவாக்கம், சென்னை 'பிரஸங்க பூஷணம்',
'பிரவசன பூஷணம்','மத்வரத்னா'

31st December 2021 **S. லக்ஷ்மிபதிராஜா**

# புரந்தரோபனிஷத்

## பகவந்தனுக்கு சுப்ரபாதம்

ஏளய்யா பெளகாயிது ||ப

ஏளு நாராயண ஏளு லட்சுமி ரமணா
ஏளு ஸ்ரீகிரியொடெய வெங்கடேஷா ||அப

தாஸரெல்லரு பந்து தூளிதர்ஷனகொண்டு
லேஸாகி தாள தண்டிகெய பிடிது |
கேஷவனே, நிம்ம ஸிரிநாமவனெ ஸ்மரிஸுதலி
வாஸுதேவனெ, உதயதலி பாடுதிஹரு ||1

காஸித்த ஹாலுகள காவடியெ தும்பிட்டு
லேஸாகி கெனெ மொஸரு பெண்ணெயனெ மெத்து |
சேஷஷயனனெ, ஏளு சமுத்ர மதனவ மாடு
தேஷ கெம்பாயிதேளய்யா ஹரியே ||2

அரளு மல்லிகெ ஜாஜி பரிமளத புஷ்பகள
ஸுரரு தந்திஹரய்ய ஸுஜனரொடெய |
அரவிந்த லோசனனெ, கோளி கூகிது கேளு
புரந்தரவிட்டலனெ பெளகாயிது ||3

பகவந்தனுக்கு விடிகிறது என்று ஏதாவது உண்டா? இரவு ஆனால்தானே விடியல் வரும்? அவனுக்கோ எப்போதும் பகல் / வெளிச்சம்தானே? இரவே இல்லாதவனுக்கு பகல் ஆவது எப்படி? இருட்டில் படுக்காதவனை விடிந்துவிட்டது என்று எப்படி எழுப்ப முடியும்?. ஆனாலும், நாம் எழுந்து, பகவந்தனுக்கு சுப்ரபாதம் சொல்கிறோம். மங்கல கீதையைப் பாடி பகவந்தனை எழுப்புகிறோம்.

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ |
உத்திஷ்ட கமலாகாந்த த்ரைலோக்யம் மங்கலம் குரு ||

ஹே கோவிந்தனே, எழுந்திரு. தூக்கத்திலிருந்து எழுந்திரு. கருட வாகனனே. தூக்கம் போதும் எழுந்திரு. ரமாவின் அரசனே. மூன்று உலகங்களிலும் மங்களத்தை பரப்புவாயாக. இது தொன்று தொட்டு வரும் பழக்கம். தினம்தோறும் பகவந்தனின் மூர்த்தியை இரவில் தொட்டிலில் வைத்து, தாலாட்டு / லாலி பாடி படுக்க வைக்கின்றனர். விடியற்காலையில், 'விடிந்துவிட்டது. எழுந்திரு' என்று எழுப்புகின்றனர். நம்முடைய சிறிய குழந்தையை தட்டி படுக்க வைப்பதைப் போல; தட்டி எழுப்புவதைப் போல. இது பக்தர்களின் பக்தி பரம்பரையில் தொடர்ந்து வந்திருக்கும் ஒரு வாத்ஸல்ய வழக்கம்.

பக்தியுடைய இன்னொரு வகை வாத்ஸல்யம்; மற்றொரு வகை ஸ்ருங்காரம். சிலருடையது சுத்தமான பக்தி என்றால், சிலருடையது வாத்ஸல்ய பக்தி. தேவகி வசுதேவரைப் போல. சிலருடையது ஸ்ருங்கார பக்தி. கோபியரைப் போல - மீராபாய் போல. கணவன் மனைவியரின் ஊடல் பேச்சு, குழந்தைகளுடன் கொஞ்சிப் பேசும் வார்த்தைகள், குழந்தைகளின் குறும்புப் பேச்சுகள், குழந்தைகளை அதட்டும் வார்த்தைகள் - என பக்தர்களின் அனைத்து வித பேச்சுகளுக்கும் பகவந்தனே இலக்கு. அவனே தாய். அவனே தந்தை. அவனே கணவன். அவனே குழந்தை. 'த்வமேவ மாதா ச பிதா த்வமேவ'.

பகவந்தனை விட்டு அவர்களுக்கு வேறு எதுவும் தேவையில்லை. பகவந்தனே அவர்களுக்கு சர்வஸ்வ. 'த்வமேவ ஸர்வம் மம தேவ தேவ'. நம்பியவர்களின் இதயத்தின் தொட்டிலில், பகவந்தன் எப்போதும் இருக்கிறான். அப்படி இருக்கையில், விடிந்துவிட்டது என்றால் அவனை எழுப்ப வேண்டாமா? இது அவனுடைய எழுப்புதல் அல்ல. நம்முடைய அகத்தை எழுப்புதல். பகவந்தனைப் பற்றிய விஷயங்களில் நாம் எப்போதும் விழிப்புடன் இருக்க வேண்டும் என்னும் சிந்தனை. இத்தகைய விழிப்பு வந்தபோது எப்போது வெளிச்சமே. விடியலே. அங்கு இரவு இல்லை. இருட்டு இல்லை.

பக்தர்கள் பகவந்தனை விதம்விதமாக வேண்டுவதுண்டு. இந்த பக்தனை மறக்காதே - என்பர். என்னை கண் திறந்து பார் - என்பர்.

இவ்வாறு சாதாரணமாக பகவந்தனிடம் பேசிக் கொண்டிருப்பர். உபநிஷத்களிலும் இத்தகைய பேச்சுகள் வந்திருக்கின்றன.

ஓம் க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர - யாக்ஞேய மந்த்ரோபநிஷத். ஹே ஞானரூபியான பகவந்தனே, உனக்கு என் நினைவு இருக்கட்டும். நான் செய்த உன் ஆராதனையின் நினைவு இருக்கட்டும் - என்கிறான் வேதத்தின் ரிஷி. நாம் மட்டும் பகவந்தனை நினைத்தால் போதாது. அவனும்கூட நம்மை நினைக்க வேண்டும். நாம் மட்டும் அவனை காண விரும்பினால் போதாது. அவனும் நம்மை கண் திறந்து பார்க்க வேண்டும்.

ஆனால் இது எப்படி? எதையும், எப்போதும் மறக்காதவன், நினைக்க வேண்டும் என்றால் எப்படி? எப்போதும் கண் மூடாதவன், கண் திறக்க வேண்டும் என்றால் எப்படி?. இது பக்தர்களின் பக்தியின் வெளிப்பாடு. இந்தக் குரலை பகவந்தன் அறிகிறான்.

க்ரதோ ஸ்மர - உனக்கு என் நினைவு இருக்கட்டும் என்னும் குரலில் இருக்கும் அர்த்தம் இதுவே. உன் அருள் நிரந்தரமாக என்னில் இருக்கட்டும். நீ அருள்வதாக விரும்பிய பக்தர்களின் பட்டியலில், தயவு செய்து என் பெயரையும் சேர்த்துக் கொள். எத்தகைய அற்புதமான வேண்டுதல் அல்லவா?பூஜை சமயத்தில் நாம் சொல்லும் ஒரு மந்திரத்தின் அர்த்தம் இது.

ஆயதாப்யாம் விஷாலாப்யாம் ஷீதலாப்யாம் க்ருபாநிதே |
கருணாம்ருத பூர்ணாப்யாம் லோசனாப்யாம் விலோகய ||

கருணை ரசம் பொங்கி வழியும், அந்த உன் தாமரை போல மலர்ந்த கண்களால் என்னைப் பார், ஹே கருணைக் கடலே.

எப்போதும் சர்வ-சாக்ஷியான, விஸ்வத:-சக்ஷுவான பகவந்தன், நம்மை பார்க்குமாறு சொல்வதைவிட சிறந்த வேண்டுதல் இருக்க முடியுமா? இதன் அர்த்தம் இவ்வாறு: உன் அருட்பார்வை என்னிடம் இருக்கட்டும். இந்த சிறிய பக்தனையும் அருளும் கருணையை செய். ஆக, பகவந்தனின் அருளைப் பெறுவதற்காக செய்யும் பற்பல விதமான வேண்டுதல்கள் இவை. அந்த பகவந்தனுக்காக பக்தர்கள் பாடும் சுப்ரபாதமும் இந்த வகையே. உனக்கு விடிந்துவிட்டது

என்று அல்ல. நீ தூக்கத்திலிருந்து எழ வேண்டும் என்பது இங்கு முக்கியம் அல்ல. உன் அருளால் இன்றைய காலை, நமக்கு சுப்ரபாதம் ஆகட்டும். இன்றைய நாள் நல்ல நாள் ஆகட்டும். ஒவ்வொரு நாளும் சுப்ரபாதமாகவே, நிரந்தரமாக நல்ல நாளாகவே இருக்கட்டும். என்றைக்கும் நம்மை இருள் சூழாது இருக்கட்டும். அத்தகைய அந்தரங்கத்தின் வெளிச்சத்தின் ஒளி, ஆத்ம சாட்சாத்காரத்தின் சுப்ரபாதம் நமக்கு ஆகட்டும்.

இதுவே சுப்ரபாதத்தின் பின்னணியில் இருக்கும் பாவம். இந்த பின்னணியை அறிந்தபோது, இது அனுபாவ எனப்படுகிறது. இல்லையெனில், இது வெறும் பாட்டு. அவ்வளவே. வேத மந்திரங்கள் இத்தகைய சுப்ரபாதத்தை பிரார்த்திப்பது உண்டு.

மோட்சம் ரமீணாமரிஷ்டம் தனூனாம்
ஸ்வாத்மானம் வாச: ஸுதினத்வமன்ஹாம் || (ருக். 2-21-6)

ஆத்யாத்மத்தின் ஒளி பெருகட்டும். அணையாது இருக்கட்டும். ஒவ்வொரு நாளும் நல்ல நாளாகவே இருக்கட்டும். பின்வரும் மந்திரமும், இந்த ஆத்யாத்மத்தின் ஒளியின் ரகசியத்தை மேலும் விளக்குகிறது.

ஆதேன யாதம் மனஸோ ஜவீயஸா
ரதம் யம் வாம்ருபவஷ்சக்ருரஷ்வினா |
யஸ்ய யோகே துஹிதா ஜாயதே திவ
உபே அஹனீ ஸுதினே விவஸ்வத: ||

கக்ஷிவந்தனின் மகளான கோஷா என்னும் ரிஷி-கன்யை கண்ட இந்த மந்திரத்தின் அர்த்தம் மிகப் பெரியது. தேவதைகள் நிர்மாணித்து, எனக்குக் கொடுத்த இந்த தேகம், பகவந்தனின் ரதம் ஆகும். ஹே பிராணதேவனே. ஹே நாராயணனே. வாருங்கள், இந்த ரதத்தில் அமருங்கள். இந்த ரதத்தின் பயணிகள் நீங்களே தவிர நான் அல்ல. இந்த ரதமானது, மனதைவிட வேகமாக உங்களை அழைத்து வரத்தக்கதாகும்.

மனம், வாக்கு, தேகம் என்னும் இந்த ரதத்தின் த்ரி-கரணங்கள் ஒன்றாக ஒருமுகத்துடன் சேர்ந்தால், உள்ளே இருக்கும் சூரியன்

உதிக்கிறான். அப்போது அபரோக்ஷ ஞானத்தின் அருணோதயம் ஆகிறது. உஷாதேவியின் ஒளி, அகத்தில் (உள்ளே) பரவுகிறது. முக்தியின் ஸு-தினங்கள் அடுத்து வரவிருக்கின்றன. அடுத்து வெறும் ஒளி-வெளிச்ச நாட்களே. வெறும் பகல்களே. இதுவே கடைசியான சூர்யோதயம். ஞானமய சூர்யோதயம். இனி இங்கு சூரியன் அஸ்தமனம் ஆவதில்லை.

நைவ தத்ர நிம்மோசனோதியாய கதாசன

இத்தகைய சுப்ரபாத பாடலை, வேத காலத்திலிருந்து ரிஷிகள் பாடி வந்திருக்கின்றனர். இதே வைதிக பரம்பரையின் வழியில், கன்னடத்தில் 'உபநிஷத்'களைக் கண்ட மகான் புரந்தரதாசரும் இத்தகையதே ஆன ஒரு அந்தரங்கத்தின் சுப்ரபாதத்தை, ஒரு விடியற்காலையில், ஸ்ரீனிவாசனின் முன் நின்று பாடினார்.

ஏளய்யா பெளகாயிது
ஏளு நாராயண ஏளு லட்சுமி ரமணா
ஏளு ஸ்ரீகிரியொடெய வெங்கடேஷ ||

புற கண்களை மட்டும் திறந்தவர்களுக்கு திருப்பதி மலையின் மேல் ஒரு வெளிச்சம் தெரிந்தது. புரந்தரதாசருக்கோ அகக் கண்கள் திறந்தன. ஆகையால், அவருக்கு உள்ளும் புறமும் வெளிச்சம் தெரிந்தது. அவர் தன் அந்தர்யாமியான பிம்பமூர்த்தியை அழைத்து பேசினார். 'ஏளய்யா பெளகாயிது'.

அகத்தில் வெளிச்சம் வந்தது. ஆகையால், ஏளய்யா, எழுந்து இதய குகையிலிருந்து வெளியே வந்து, உன் பிம்பரூபத்தின் சாட்சாத்காரத்தை காட்டுவாயாக.

தாசர், தன் தலைவனை இவ்வாறு அழைக்கிறார். ஏளு நாராயண. ஏளு லட்சுமிரமணா.ஓம்காரத்தின் எட்டு எழுத்துகளைக் கொண்ட அஷ்டாக்ஷரத்தின் மூல மந்திரத்தில் வந்த பெயர் - நாராயண. மூலரூபத்தின் பெயர் - நாராயண. பஞ்சகோஷங்களின் கோட்டைக்குள் இருக்கும் ஜீவனின் கடைசி கோட்டையான ஆனந்தமய கோஷத்தில் இருக்கும் ரூபம் - நாராயண. ஆனந்தத்தின் போகத்தில் நிரம்பியிருக்கும் ரூபம் - நாராயண. ஓம்

ஆனந்தமயனே, எழுந்திரு. உன் பக்தனுக்கும் ஆனந்தத்தின் பிரபஞ்சத்தை திறந்து காட்டுவாயாக.

விஷ்வ ஸ்ருஷ்டிக்கு முன்னர், பிரளய ஜலத்தில் படுத்திருந்தவன், எதுவும் இல்லாத இருட்டில் (தம ஆஸீத்) தானே தானாக ஒருவனே இருந்தான் - அவனே நாராயணன். (நார + அயன = தண்ணீரில் நிலைத்தவன்).

நாராயணாக்ய: பரம:
ஷேதே லக்ஷ்ம்யாऽன்விதோ லயே || (பாக. தாத். 11.6.16)

பரதத்வமான நாராயணன், பிரளய ஜலத்தில் படுத்திருக்கிறான். தன்னவளான லட்சுமியுடன். - என்கிறது இந்த பிரமாண வசனம். இதற்காகவே அடுத்து சொன்னது - ஏளு லட்சுமிரமண. லட்சுமிரமண என்றால் ஸ்ரீனிவாஸ. பத்மாவதியின் ரூபத்திலிருந்து வந்த லட்சுமியை, திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்றே இறங்கி வந்தவன்.

நரர்களின் சமுதாயமே நார. அவர்களின் இதய சமுத்திரத்தில் நிலைத்திருப்பவன் நாராயணன். பிரளய காலத்தில் இருட்டில், பிரளய ஜலத்தில் படுத்திருப்பவனே, ஸ்ருஷ்டி காலத்தில், ஜீவனின் ஹ்ருதய சமுத்திரத்தில் இருக்கும் இருட்டில் அடங்கியவனே. எழுந்திரு. இருட்டு விலகி வெளிச்சம் வந்துவிட்டது. இந்த பக்தனின் ஸ்வரூப உத்தாரத்திற்காக எழுந்து வா. கஜேந்திரனுக்காக எழுந்து வந்ததைப் போல, திரௌபதிக்காக எழுந்து வந்ததைப் போல, த்ருவனுக்காக, பிரகலாதனுக்காக வந்ததைப் போல. நாராயண என்று அஜாமிளன் அழைத்தபோது, அவனது அனைத்து பாவங்களையும் மறந்து, வந்ததைப் போல.

இவ்வாறு அகத்தில் இருந்த பகவந்தனை, தன் எதிரில் இருக்கும் மூர்த்தியிலும் கண்ட தாசர், அடுத்த வரியை இவ்வாறு பாடினார்.

ஏளு ஸ்ரீகிரியொடெய வெங்கடேஷ

ஸ்ரீகிரி என்றால் திருமலை. திருமலை உடையனாக, ஸ்ரீனிவாஸனாக, இந்த மலையின் மேல் நின்ற கருணாளு நீயே

அல்லவா? இந்த மலையின் இன்னொரு பெயரே - வெங்கடகிரி. ஆகவே நீ வெங்கடேசன். உன்னால் இந்த மலைக்கு பெயர். மலையினால் உனக்கும் பெயர். மலையை, வெங்கட, வெங்கள, வேங்கட என்றெல்லாம் அழைக்கிறோம். ஆகையால், நீயும் வெங்கட ஆனாய். வெங்கள ஆனாய். நீயே ஸ்ரீபதி - திருபதி. ஆகையால், மலையும் திருப்பதி ஆயிற்று. மலையின் இன்னொரு பெயர் திருமலை என்றும், நீயும் அதனால் திருமலேஷ ஆனாய். திருமலையப்பன் ஆனாய். திம்மப்பன் ஆனாய். நீ இங்கு வந்து நின்றதாலேயே, இந்த மலைக்கு தனிச்சிறப்பு வந்தது. இது லௌகிக சிந்தனை. இதுவே ஆத்யாத்ம விஷயத்தில் பார்த்தால், பகவந்தன் ஸ்ரீகிரியின் தலைவன். அவனே வெங்கடேசன். ஆத்யாத்மத்தின் யோக சாதனையால் பண்பட்டிருக்கும் பக்தனின் இதயபீடமே ஸ்ரீகிரி. அதன் தலைவனே பகவந்தன்.

ஸ்ரீ என்றால், பஞ்சேந்திரியங்கள். கண், காது, மூக்கு, வாய் மற்றும் மனஸ்.

தா ஏதா: ஸ்ரீர்ஷன் ஸ்ரீய: ஸ்ரீதாஷ்சக்ஷு: ஸ்ரோத்ரம்
மனோ வாக் ப்ராண: || (ஐதரேய 1-6-4)

பகவந்தனின் க்ஷேத்திரங்களை, சிலைகளைக் காணும் கண் ஒரு செல்வம். பகவந்தனின் மகிமைகளை கேட்கும் காது ஒரு செல்வம். பகவந்தனுக்கு அர்ப்பித்த சந்தனத்தை முகரும் மூக்கு ஒரு செல்வம். பகவந்தனின் குணங்களை பாடும் வாய் ஒரு செல்வம். பகவந்தனின் மகிமையையே நிரந்தரமாக சிந்திக்கும் மனஸ் ஒரு செல்வம். இந்த ஐந்து செல்வங்களும் நம் தேகத்திலேயே இருக்கிறது.

ஆகையால், இந்த செல்வங்களை தாங்கிய கிரி - அதாவது, நம் தேகத்தின் தலைப்பாகம். அங்கு சஹஸ்ரார சக்ரத்தில் படுத்திருக்கும் நாராயணனே ஸ்ரீகிரியொடெய - மலையின் தலைவன். பஞ்சேந்திரியங்களால் செல்வத்தைக் கொண்டிருக்கும் இந்த தலையில் படுத்திருக்கும் நாராயணனே, இந்த ஸாத்விக இந்திரியங்கள் என்னும் லட்சுமியின், செல்வத்தின் ரமணனே, சஹஸ்ராரத்தின் கடைசி சக்கரத்தில் என்னை எழுப்பு. அதற்காக

எழுந்திரு. நீ எழுந்து, என்னை எழுப்பினாய் என்றால், நான் எழுந்திருக்கிறேன். இல்லையெனில், என் அஞ்ஞானத்தின் தூக்கத்திற்கு முடிவே இல்லை. அதற்காக நீ வெங்கடேசனாக வரவேண்டும். வ-கார, ஞான சக்தியைக் குறிக்கிறது. இ-கார இச்சா சக்தியைக் குறிக்கிறது. கட - பொழிவது. என்னில், ஞான சக்தி, இச்சா சக்திகளின் மழையைப் பொழிந்து, எனக்குள் அடங்கியிருக்கும் சக்தியை வெளிப்படுத்தி, என்னை அருளும் ஸ்வாமியாக நீ வரவேண்டும். என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றும் தலைவனாக, வேங்கடேசனாக வரவேண்டும்.

இவ்வாறு அகமும் புறமும் பகவந்தனின் ரூபத்தை, ஐக்ய சிந்தனையுடன் கண்ட தாசர், இந்த வாக்குகளால் அழகான சுப்ரபாதத்தை பாடினார்.

இந்த பல்லவி அனுபல்லவிகளில் வெளிப்பட்ட ஆத்யாத்ம அனுசந்தானம், அடுத்த சரணங்களில் எப்படி வந்திருக்கிறது என்பதை பார்ப்போம்.

தாஸரெல்லரு பந்து தூளிதர்ஷனகொண்டு
லேஸாகி தாள தண்டிகெய பிடிது |
கேஷவனே, நிம்ம ஸிரிநாமவனெ ஸ்மரிஸுதலி
வாஸுதேவனெ, உதயதலி பாடுதிஹரு ||1

ஶ்ரீ நாராயணன், உலகிற்கே ஸ்வாமி. நம் ஸ்வாமி. நம் அந்தர்யாமி என்று அறிந்தவர்களே ஹரிதாசர்கள். மம ஸ்வாமி ஹரிர் நித்யம் ஸ்வதந்த்ர: பூர்ணஷட்குண: ||

விடியலில் எழுந்து செய்யும் பிரார்த்தனை இவ்வாறு இருக்கிறது.

ஸ்வாமின் தாஸோऽஸ்மி தே நித்யம் ப்ரியம் தே கரவாண்யஹம்
அப்ரியே பவதோ நாத மாயான்மே மன ஆதிகம் ||

ஹே தலைவனே. என்றைக்கும் நான் உன் சேவகன். என் தேகம் எப்போதும் நீ மெச்சுவதாகவே இருக்கட்டும். என் மனம், வாக்கு, தேகம் ஆகியவை நீ விரும்பாத வழியில் எப்போதும் போகாது இருக்கட்டும், ஹே ஹரியே.

இத்தகைய பக்தர்கள், இத்தகைய தாஸர்கள், பகவந்தனிடம் வந்திருக்கின்றனர். பக்தர் - பகவந்தனின் நடுவே இருக்கும் வேறுபாடே - இருட்டு. அந்த வேறுபாடு களைந்து வருவதே வெளிச்சம்.

தூராத் தூரதரம் யத்து ததேவாந்திகமந்திகாத் |

இருட்டில் நடப்பவர்களுக்கு தூரத்தை விட தூரம் அவன். வெளிச்சத்தில் நின்றவர்களுக்கு மிகவும் அருகில் இருப்பவன் அவன்.

தத் தூரே தத்வந்திகே |
(அது வெகு தூரம் அதுவே இது வெகு அருகில்).

இதில் மேலும் ஸ்வாரசியம் உள்ளது. பகல் ஆயிற்று என்று தாசர் வந்தார். அது மட்டுமல்ல. தாசர் வந்தார் என்று பகல் ஆயிற்று. ஏனெனில், பகவந்தனின் ஸாமீப்யமே உண்மையான வெளிச்சம். பகவந்தனிடமிருந்து தூரமாக இருப்பவன் பகலிலும் இருட்டில் இருக்கிறான். பகவந்தனின் அருகில் இருப்பவன் இருட்டிலும் ஒளியில் வாழ்கிறான். 'யா நிஷா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ' (பகவத் கீதை).

இப்போது தாசர்கள் வந்துவிட்டனர். தூளி தர்ஷனகொண்டு.

இங்கு தூளிதர்ஷன என்பது ஒரு சிறந்த குறியீடு. விஷ்வ தரிசனத்தையே கொடுக்கக்கூடிய சொல் இது. மேலோட்டமாக பார்த்தால் இது ஒரு சகஜமான சொல்லாக தெரிகிறது. க்ஷேத்திரத்திற்கு வந்தவர்கள், தேகத்தில் உள்ள தூசி தட்டும் முன்னர், முகம் கழுவிக் கொள்ளும் முன்னர், பகவந்தனை காணும் விருப்பத்தைக் கொள்கின்றனர்.

த்ருடிர்யுகாயதே த்வாமபஷ்யதாம். (உன்னைக் காணாத ஒரு நொடிகூட ஒரு யுகத்தைப் போன்றது). என்று கூறிய வ்ருந்தாவன கோபிகையைப் போல, 'எப்போது பகவந்தனைப் பார்ப்பேன்' என்னும் ஆர்வத்துடன் நின்ற பக்தனின் தரிசன-ஆர்வமே இந்த 'தூளிதர்ஷன' என்னும் சொல்லில் இருக்கிறது.

இந்த சொல்லின் உள் அர்த்தம் இன்னும் இருக்கிறது. ஆத்யாத்ம பின்னணியில் இதற்கு மேலும் ரகசியமான அர்த்தம் இருக்கிறது. நான் உன் சரண தாசன். எனக்கு தெரிவதெல்லாம் உன் சரணதூளி மட்டுமே.

ராமாயணத்தின் ஒரு சம்பவத்தை இங்கு நினைவில் கொள்ளலாம். ராவணன், சீதையை அபகரித்துக் கொண்டு, ஆகாயத்தில் பறந்து இலங்கைக்கு வந்தபோது, அவள் கீழே எறிந்த ஆபரணங்களை சுக்ரீவன் ஸ்ரீராமனிடம் கொண்டு வந்து காட்டினான். அதே தோள் ஆபரணம், அதே தோடு. அதே கொலுசு. ஸ்ரீராமன் அதனை லட்சுமணனிடம் காட்டி 'இது உன் அண்ணியின் ஆபரணங்கள்தானே?' என்று கேட்டான். அப்போது லட்சுமணன் கூறியது.

நாஹம் ஜானாமி கேயூரே நாஹம் ஜானாமி குண்டலே
நூபுரே த்வபிஜானாமி நித்யம் பாதாபி வந்தனாத் ||

இந்த தோள் ஆபரணம், இந்த தோடு, அண்ணியுடையதா இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை. இந்த கொலுசுகள் மட்டும் அவருடையது என்பதை அறிவேன். நான் தினமும் அண்ணியின் கால்களில் வணங்கும்போது இதனை பார்த்ததுண்டு. ஆகையால், இதனை அடையாளம் சொல்வேன் - என்றான். இது பக்தனின் தாஸ்ய பாவத்தின் ஒரு அழகான உருவகம். பக்தனும் இதையே சொல்கிறான். பகவந்தனின் சரணத்தில் வணங்கும் தேகம் இது. அவனின் சரணதூளியை மட்டுமே இந்த கண்கள் காண்கின்றன.

பெரியவர்கள் முன் தலையைத் தூக்கி, அவர்களின் முகத்துடன் முகம் பார்த்து, நேருக்கு நேராக பேசுவது சரியல்ல. அது மரியாதை அல்ல. அத்தகையவர்கள் முன் தலை குனிந்து நின்று நடமாட வேண்டும். அப்போது நமக்கு கிட்டுவது அவர்களுடைய பாத தரிசனம். அது சரி. ஆனால், பகவந்தனின் பாததூளி என்றால் என்ன? பகவந்தனின் பாதத்திற்கு உண்டான தூளு (தூசி) என்றால் என்ன? நாம் நடக்கும்போது நம் கால்களில் தூசு பரவுவது சகஜம்.

அப்படியே, சர்வவியாபினான பகவந்தனின் கால்களிலும் தூசு பரவுமோ?.

மேலோட்டமாக பார்த்தால் இப்படியே சொல்ல வேண்டும். பாததூளி என்பதற்கு எந்தவொரு விசேஷ அர்த்தமும் இல்லை எனலாம். ஆனால், இவ்வளவே இதன் அர்த்தம் என்று நினைத்தால், புரந்தரதாசரின் இந்தப் பாடல் ஒரு காவியத் துணுக்கு என்று மட்டுமே ஆகியிருக்கும். ஒரு அனுபாவியின் அனுபவத்தின் குரல் என ஆகியிருக்காது. இது வெறும் ஒரு கீர்த்தனை ஆகியிருக்குமே தவிர, புரந்தரோபனிஷத் ஆகியிருக்காது.

அப்படியெனில், பகவந்தனின் பாததூளியின் தரிசனத்தை விரும்பும் அனுபாவியின் அனுபவம் எத்தகையது? இதனை நாம் அறிய வேண்டுமெனில், வேத காலத்தின் ரிஷிகளின் குரலை கவனிக்க வேண்டும்.

இதம் விஷ்ணுர்விசக்ரமே த்ரேதா நிததே பதம் |
ஸமூளமஸ்ய பாம்ஸுரே || (ரிக். 1-22-17)

ஸ்ரீவிஷ்ணு மூன்று அடிகளை வைத்தான். வைத்து அனைத்து இடங்களிலும் வியாபித்தான். மொத்த பிரம்மாண்டமே அவனின் பாததூளியில் அடங்கியிருக்கிறது. மூன்று கால் அடிகளை வைத்தான். மூன்று உலகங்களை வியாபித்து ஸர்வகதன் ஆனான். மூன்று கால் அடிகளை வைத்தான். கால்களை வியாபித்து நின்றான். மூன்று கால் அடிகளை வைத்தான். மூன்று வேதங்களை வியாபித்து சர்வவேத பிரதிபாத்யன் ஆனான்.

இவ்வாறு பகவந்தனின் சித்திரத்தைக் கொடுக்கும் இந்த வேத மந்திரம், பகவந்தனின் தூளு (தூசு) அடங்கிய (பாம்ஸுர = பாம்ஸுல) பாதத்தை குறிப்பிடுகிறது. இதுவே பிறகு வந்த அனுபாவிகளுக்கெல்லாம் உதாரணமாக இருக்கிறது. இந்த பாம்ஸு (தூளி - தூசு) என்றால் என்ன? இந்த மந்திரத்தைக் கண்ட ரிஷி, எந்த பாம்ஸுவை பகவந்தனின் காலில் கண்டார்?

இந்த அகிலாண்ட கோடி பிரம்மாண்டமே, பகவந்தனின் பாதத்தில் இருக்கும் ஒரு தூளி. ஒரு துகள். இந்த மஹத்தான பிரம்மாண்டம்,

லட்சக்கணக்கான ஒளியாண்டு மைல் தூரத்தில் பரந்து விரிந்திருக்கும் இந்த பூகோளம்கூட, அவனின் முன்னர் ஒரு துகள் போல இருக்கிறது. ஏனெனில், அவன் மஹதோ மஹீயான். அவனின் முன் மஹத்தான இந்த விஷ்வமும், ஒரு சிறு துகள் போல இருக்கிறது.

இத்தகைய விஸ்வத்தின் தரிசனமும், இதற்கெல்லாம் தலைவனான பகவானின் மஹதோ மஹீயதான ரூபத்தின் தரிசனமே உண்மையான தூளி தரிசனம் ஆகும்.

இந்த வாக்கினை ஆசார்ய மத்வர் தம் ரிக் பாஷ்யத்தில் மிகவும் அழகாக நிரூபித்திருக்கிறார்.

ரமந்தி பாம்ஸவோ யத்ர பாம்ஸுரம் பதமீரிதம் |
ஸமூடம் தத்ர விஷ்வம் ஹி பாம்ஸுவஜ்ஜ கதீபதே: ||

இந்த சராசராத்மக உலகம் அனைத்தும், அந்த விஷ்வ நாயகனான பகவந்தனின் பாதங்களில் ஒரு துகளைப் போல இருக்கிறது. அந்த உலகிற்கு இது பெருமைக்குரிய செய்தி ஆகும். இவ்வாறு, 'தூளிதர்ஷன'த்தில் மொத்த பிரம்மாண்டமே அடங்கியிருக்கிறது என அறிய வேண்டும். நாம் அவனின் பாததூளி என்னும் அறிவைப் பெற்றால், இந்த தாஸத்வத்தின் தீக்ஷை திடமாகிறது.

அதற்காக தாசர் இவ்வாறு கூறினர். தாஸரெல்லரு பந்து தூளிதர்ஷன கொண்டு.தாசர்கள் என்றால் வெறும் கீர்த்தனைகாரர்கள் அல்ல. பிரம்மாதி அனைத்து தேவதைகளும்கூட தாச வர்க்கத்தில் இருப்பவர்களே. அதற்காகவே, தாஸரெல்லரு என்றார். பிரம்மாதிகளும்கூட பகவந்தனின் பாததூளியின் தரிசனத்தைக் கொண்டு தன்யர் ஆன மகாத்மர் ஆவர். இந்த மஹாமஹிமர்கூட அவனின் தாஸர்கள் என்பதாலேயே அவனுக்கு மஹிதாஸ என்ற பெயர் வந்தது.

யத்பாத பங்கஜரஜ: ஷிரஸா பிபர்த்தி
ஸ்ரீரப்ஜஜஷ்ச கிரிஷ: ஸஹ லோகபாலை: ||

லட்சுமிதேவி, பிரம்ம, ருத்ர, லோகபாலகரான இந்திராதிகள் இவர்கள் அனைவரும் பகவந்தனின் பாத பத்மத்தின் ரஜஸ்ஸினை தங்களின் தலையில் ஏந்தி நின்றனர். தனது விஷ்ணு ஸ்துதியில், த்ரிவிக்ரம பண்டிதாசார்யர், இதே விஷயத்தையே ஒரு புதிய அர்த்தத்தைக் கொடுத்து பாடினர்.

விஷ்ணோரஸ்மான் பதாப்ஜே க்ருத நிவஸதய: பாம்ஸவ: பாவயந்து
ஸ்ரீமந்த: ஸ்ரீகபர்யாம் குஸூமஸூ நிசயே பூரயந்த: பராகான் |
லாலாட்யாம் லேகிகாயாமஜ நிபவனயோரக்ஷதான் நிக்ஷிபந்த:
பௌன:புன்யேன ஷுத்திம் ஹரஷிரஸி நதே ஜான்ஹவீம் ஜோஷயந்த: ||

ஸ்ரீவிஷ்ணுவின் பாதபத்மத்தில் நிலைத்திருக்கும் துகள்கள் நம்மை பவித்ரமாக்கட்டும். அந்த துகள்களே, தாய் லட்சுமிதேவி செய்த பூங்கொத்துகளில் நறுமணத்தை பரப்புகின்றன. சிவன் தன் தலையில் தாங்கிய கங்கையில் இருக்கும் இந்த துகங்கள், கங்கை நீரினை மேலும் பவித்ரமாக்குகின்றன.

அனுபாவத்துடன் அலங்காரமும் சேர்ந்து, இந்த பாததூளியின் கற்பனையைப் பற்றி புராணங்கள் ஒரு புதிய கண்ணோட்டத்தைக் கொடுக்கின்றன.

யத்பாத பங்கஜபராக விலாஸபக்த்யா
கர்மாஷயம் க்ரதிதமுத் க்ரதயந்தி ஸந்த: || (பாகவத 4.21.42)

அவனின் பாதம் ஒரு தாமரை மலர். அந்த பாதத்தின் தூளியே, பூவின் நறுமணம். இந்த பாத தூளியை பக்தியுடன் நம்பிய சஜ்ஜனர்கள், தம்மை கட்டிய கர்மங்களின் பந்தனங்களிலிருந்து விடுபடுகின்றனர்.

ந நாகப்ருஷ்டம் நச ஸார்வபௌமம்
ந பாதமேஷ்ட்யம் ந ரஸாதிபத்யம் |
ந யோகஸித்தீரபுனர்பவம் வா
வாஞ்சந்தி யத்பாதரஜ: ப்ரபன்னா: || (பாக 10.15.37)

பகவந்தனின் பாததூளியை நம்பியவர்கள் அதாவது அவனின் பாத கமலங்களில் சரணடைந்தவர்கள், ஸ்வர்க்கத்தை விரும்புவதில்லை. சக்ரவர்த்தி பதத்தை விரும்புவதில்லை. அவர்களுக்கு பூமண்டலத்தின் சம்பந்தமும் வேண்டாம். பிரம்ம பதவியே கிடைத்தாலும் வேண்டாம். அணிமாதி யோகஸித்திகளும் வேண்டாம். மறுபிறவியே இல்லாத மோட்சத்தைக்கூட அவர்கள் விரும்புவதில்லை. இந்த பாததூளியின் சரணாகதியின் ஆனந்தத்திற்கு முன்னர் இவை அனைத்தும் மிகச் சிறிய வஸ்துகளே ஆகும்.

கல்லான அகலிகைக்கு மறுபிறவி அளித்த இந்த தூளியின் தரிசனம் மட்டும் இருந்தால் போதாதா? வாழ்க்கையில் அதைவிட சிறந்த பாக்கியம் வேறு என்ன இருக்கிறது என்று கேட்கிறார் தாசர். -- தூளிதர்ஷனகொண்டு.

மிகவும் சுவாரசியமான இன்னொரு விஷயத்தை இங்கு சொல்ல வேண்டும். ஸ்ரீகிருஷ்ணனின் ப்ரிய சிஷ்யரான உத்தவனுக்கு சொல்லப்பட்ட ரகசியம் இது.

நிரபேக்ஷம் முனிம் ஷாந்தம் நிர்வைரம் ப்ரியதர்ஷனம் |
அனுவ்ரஜாம்யுஹம் நித்யம் பூயேயேத்யங்க்ரிரேணுபி: ||
பாகவத 11.14.16

எதையும் விரும்பாத, யாரையும் வெறுக்காத, அனைவருக்கும் ப்ரியனான ஷாந்த ஸ்வபாவமான முனிவரின் பின்னாலேயே நான் எப்போதும் சஞ்சரிக்கிறேன். என் பாத ஸ்பரிசத்தினால் பவித்ரமான இந்த நிலத்தின் தூளி, காற்றில் பறந்து அவனின் உடம்பில் பட்டு, அவன் பவித்ரன் ஆகட்டும் என்பதே என் விருப்பம்.

ஸ்ரீகிருஷ்ணனே கூறிய இந்த விஷயத்தில், பாத தூளியைப் பற்றியதான ஒரு புதிய விஷயம் தெரிகிறது. இவ்வாறு அனைத்து வித ஆத்யாத்மிக அனுசந்தானங்களையும் மனதில் நிரப்பிக்கொண்டு, புரந்தரதாசர் இவ்வாறு பாடினார். தாஸரெல்லரு பந்து தூளிதர்ஷனகொண்டு.பகவந்தனிடம் தன்னை அர்ப்பித்துக் கொள்ளும் தைஹிக (உடல் ரீதியான) ஏற்பாட்டினை, இரண்டாம் பத்தி கூறுகிறது. லேஸாகி தாள தண்டிகெய பிடிது.

தாஸத்வத்தின் குறியீடாக, ஹரிநாம கீர்த்தனையின் அங்கமாக, பாடலின் பக்க வாத்தியமாக கையில் தாள, தோளில் தண்டிகெ (வீணை அல்லது தம்பூரி) தாள வாத்தியம்.

இது மேலெழுந்தவாரியாக பார்த்தால் வரும் அர்த்தம். ஆனால், உபநிஷத்தின் பின்னணியில் இந்த வாக்கிற்கு ஒரு அபூர்வமான அர்த்தம் இருக்கிறது. இந்த தேகமே ஒரு தண்டிகெ. ஒரு தெய்வ வீணை. ஸ்வாமி நிர்மாணித்த வீணை. ஸ்வாமியின் குணகானத்திற்காக செய்யப்பட்ட வீணை. இந்த வீணைக்கு உள்ளங்கையே தாள வாத்தியம். சாமவேதத்தில் தளவகார என்னும் ஒரு பிரிவு உள்ளது. பாடும்போது, உள்ளங்கையையே (தள) தாள வாத்தியமாக ஆக்கிக் கொண்டார் என்பதால், அவர் தளவாத்யகாரர் என்று பெயர் பெற்றார். தளவாத்யகாரரே பின்னால் தளவகாரர் ஆனார்.

இவ்வாறு உள்ளங்கையால் தாளம் தட்டி, தேகம் என்னும் வீணையை மீட்ட வேண்டும். இதைப் பற்றி ஐதரேய உபநிஷத் இவ்வாறு விவரத்தை சொல்கிறது:

அத கல்வியம் தெய்வீவீணா பவதி
ததனுக்ருதிரஸௌ மானுஷீ வீணா பவதி ||

யதாऽஸ்யா: ஷிர ஏவமமுஷ்யா: ஷிர: |
யதாऽஸ்யா: உதரமேவமமுஷ்யா அம்பணம் ||
யதாऽஸ்யை ஜிஹ்வா ஏவமமுஷ்யை வாதனம் |
யதாऽஸ்யாஸ்தந்த்ர்ய ஏவமமுஷ்யா அங்குலய: |
யதாऽஸ்யா: ஸ்வரா ஏவமமுஷ்யா: ஸ்வரா: || (ஐதரேய 2.8.6)

இந்த தேகம் ஒரு தெய்வ வீணை. ஸ்வாமி நிர்மாணித்த வீணை. மனிதன் உருவாக்கிய மர வீணை என்பது இதனுடைய மாதிரியே ஆகும். இந்த வீணைக்கு தலை இருப்பதைப் போல, அதற்கு மரத்தில் செய்யப்பட்ட குடம் இருக்கிறது. இதற்கு வயிறு இருப்பதைப் போல, அதற்கு பிரடைகள் உள்ளன. இதற்கு விரல்கள் இருப்பதைப் போல, அதற்கு தந்திகள் உள்ளன. இது சப்த ஸ்வரங்களை நுடிப்பதைப் போல, அதுவும்கூட சப்த ஸ்வரங்களை நுடிக்கிறது.

இவ்வாறு வைதிகமான தெய்வீ வாத்யங்களை - கை என்னும் தாளம், உடம்பு என்னும் வீணையை பிடித்து நின்றிருக்கிறார் தாசர். இந்த தாளம், பகவந்தனுக்காக தட்ட வேண்டும். இந்த வீணை பகவந்தனின் குணங்களை பாட வேண்டும். அதுவும் லயத்துடன். தாளத்துடன். ஸ்ருதியுடன். குரு உபதேசத்திற்கு ஏற்ப. ஸ்ருதி புராணங்களுக்கு சம்மதமாக. இந்த தேகம், பகவந்தன் அருளிய வீணை என்பதாலேயே, இதனை மிகவும் கவனத்துடன் பிடித்துக் கொண்டிருக்கிறார். நன்றாக பார்த்துக் கொள்கிறார். இல்லையெனில், விரக்தரான சாது சந்தர்களுக்கு இந்த தேகத்தின் மேல் ஏன் ஆசை தேவை? இது ஸ்வாமியின் வீணை. இதன் மூலம் ஸ்வாமியின் குணகானங்களை செய்ய வேண்டும். அதற்காகவே ஸ்வாமி இதனை நமக்குக் கொடுத்திருக்கிறான் என்பதால் அவர் தேகத்தை விரும்புகிறார். ஷரீரமாத்யம் கலு தர்மஸாதனம்.

இவ்வாறு, பகவந்தனின் பாத தூளியினால் இந்த தேகம் சுத்தமாகியிருக்கிறது. வீணையைப் போல பகவந்தனை பாடுவதற்கு தயாராக இருக்கிறது. அடுத்த வாக்கு, மனதில் சுத்திக்கு, மனதின் தயாரிப்புக்கு சம்பந்தப்பட்டது. கேஷவனெ நிம்ம ஸிரி நாமவன்னு ஸ்மரிஸுதலி. இங்கு கேசவனே என்று சொல்லியிருப்பது, ஒரு குறியீடாக வந்து, அதன் மூலம் பகவந்தனின் அனந்த ரூபங்களையும், அனந்த நாமங்களையும் விளக்குகிறது. அதற்காகவே, அனந்தரூபங்களின் குறியீடாக 'நிம்ம' என்று பன்மையில் வந்திருக்கிறது.

பகவந்தனின் அனந்த ஸிரி நாமங்களின் ஸ்மரணையால் மனம் எப்போதும் அவனில் நிலைத்திருக்கட்டும். இதனால் அந்தரங்கம் பவித்ரம் ஆகட்டும். லௌகிகமான அனைத்து செல்வங்களையும் துறந்து, ரத்னங்களை குப்பைத் தொட்டியில் போட்டு, ஹரிநாமத்தின் செல்வத்தை மற்றும் ஏற்ற தாசர், அதனை 'ஸிரிநாம' என்று அழைத்தது மிகவும் பொருத்தமானது. ஸாதகனுக்கு நாமஸ்மரணையைவிட அதிகமான பாக்கியம், செல்வம் வேறு என்ன இருக்கிறது?

இன்னொரு இடத்தில் தாசர் இவ்வாறு கூறுகிறார்.

நீன்யாகோ நின்ன ஹங்க்யாகோ
நின்ன நாமத பலவொந்தித்தரே ஸாகு ||

அவருக்கு இவ்வாறு ரத்ன, மாணிக்க வியாபாரத்திற்கு பதில், பகவந்தனின் நாமத்தின் வியாபாரமே பிடித்திருக்கிறது.

ஸ்ரீலோலன கதெ திவ்ய நாமங்கள
ஷீலமனதி பரெது ஹரிகெ ஒப்பிஸுவந்த
வியாபார நமகாயிது
அதே அவர முத்து ரத்ன எல்ல;

முத்து கொள்ளிரோ ஜனரு முத்து கொள்ளிரோ
பொடவிகெல்ல புரந்தர விட்டல ஒடெயனெம்ப திவ்யமுத்து

ஹரியின் நாமங்களே உண்மயான ஸ்ரீ (செல்வம்). அவற்றால் அழைக்கப்படும் அவனே உண்மையான ஸ்ரீயின் வசிப்பிடம் (ஸ்ரீனிவாஸ). கேஷவனே, நிம்ம நாமவனு ஸ்மரிஸுதலி --- என்னும் வாக்கியத்தை பாடும்போது 'கலௌ சங்கீர்த்ய கேஷவம்' என்னும் புராண வசனமே தாசரின் மனதில் தோன்றியிருக்க வேண்டும். ஆகையாலேயே அவர் கேஷவனே என்று அழைத்திருக்க வேண்டும்.

அதுமட்டுமல்ல, தாசர் காலையில் பகவந்தனை பாடுகின்றார். காலையில் சிந்திக்க வேண்டிய பகவத் ரூபம் 'கேஷவ' என்று சாஸ்திரகாரர் சொல்கிறார்.

ப்ராத:காலே கேஷவம் து கோவிந்தம் ஸங்கமே ததா |
மத்யான்ஹாதிபதிம் விஷ்ணும் மதுக்னமபரான்ஹகே |
ஸாயங்காலே ந்ருஸிம்ஹம் து ஹ்ருஷிகேஷம் ப்ரதோஷகே ||

காலையில் கேஷவ; முற்பகலில் கோவிந்த; மதியத்தில் தலைவனான விஷ்ணு; பிற்பகலில் மதுஸூதனன்; மாலையில் நரசிம்ம; இரவில் ஹ்ருஷிகேஷ. பாகவதத்தில் இவ்வாறு இருக்கிறது.

மாம் கேஷவோ கதயா ப்ராதரவ்யாத்

கோவிந்த ஆம்ஸகவ மாத்தவேணு: || (பாக 6.8.20)

இவ்வாறு எந்த பொழுதில் யாரை சிந்திக்க வேண்டும் என்னும் சம்பிரதாயத்தை நமக்கு வழிகாட்டும் கருணாளுவாக, தாசர், கேஷவனே என்று அழைத்து, வாக்கியத்தை துவக்குகிறார். கேஷியை கொன்றவன் கேஷவன். அழகான கேஷ உள்ளவன் கேஷவன். பிரம்ம ருத்ரர்களை (க=பிரம்ம; ஈஷ=ருத்ர), படைத்தல், அழித்தல் ஆகிய வேலைகளுக்கு பொறுப்பாக்கி நியமித்தவன் கேஷவன். பிரம்மாதிகளும் தூளி தரிசனத்தின் பாக்கியத்திற்காக வரிசையில் நின்றிருந்தனர் என்னும் தாசர் வாக்கினை முன்னர் பார்த்தோம். அதற்கு தக்கதாகவே இங்கு கேஷவ என்னும் சொல் வந்திருக்கிறது.

இவன் பிரம்மாதிகளுக்கும் நியாமகன் என்பதால் கேஷவ எனப்படுகிறான். என்ற பிறகு, இந்த ஸ்வாமியின் சேவைக்காக இந்த தாசர் வந்திருப்பது மிகவும் பொருத்தம்தானே?

கேஷ என்றால் கிரணம் ஆகும். சூரியனில் இருந்து கிரணங்களின் மூலம் ஒளி பாய்ச்சும் சூரிய நாராயணனே கேஷவ. இவ்வாறு அனைத்து விதமாகவும் மிகவும் சிறப்பாக இருப்பதாலேயே, கேஷவ நாமத்தினாலேயே தாசர் நாமஸ்மரணையை துவக்குகிறார். கேஷவனே, நிம்ம ஸிரி நாமவனு ஸ்மரிஸுதலி.

இவ்வாறு அக - புற ஸூத்தி ஆனபிறகு, வீண் அரட்டைகளை மனம் விரும்புவதில்லை. பகவந்தனின் குணங்களையே அது விரும்புகிறது. இவ்வாறு சாதகர்கள், உடல்- மனம்- வாக்கு என்னும் த்ரிகரணங்களின் மூலம் தன்னை பகவந்தனுக்கு அர்ப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். வாஸுதேவனே, உதயதலி பாடுதிஹரு.

இரவு என்பது அஞ்ஞானம். பகல் என்றால் ஞானசூரியன். உதயம் என்றால் ஞானோதய. இத்தகைய 'உதயதலி பாடுதிஹரு'. ஞானோதயம் ஆனபோது - பேச்சு வருவதில்லை. பகவந்தனின் ஸ்தோத்திரமே வருகிறது. பாடியது அனைத்தும் பகவந்தனின் பாடல் ஆகிறது. 'ஸ்துதிஸ்து வாகிந்த்ரிய வ்ருத்தியரஸ்து'.

வாஸுதேவனே - என்று அழைத்ததிலும் ஒரு சிறந்த நோக்கம் இருக்கிறது. அபரோக்ஷ ஞானத்தின் உதயம் ஆகியிருக்கிறது. முக்தியை அளிக்கும் வாசுதேவ நாமகமான சிறந்த ரூபத்தின் சிந்தனை இத்தகைய ஸ்துதியில் வந்திருக்கிறது.

ததோऽனிருத்தம் தேவேஷம் ப்ரத்யும்னம் ச தத: பரம் |
தத: ஸங்கர்ஷணம் தேவம் வாஸுதேவம் பராத் பரம் ||

வாஸுதேவாத் பரம் நாஸ்தி இதி வேதாந்தனிஷ்சய: |
வாஸுதேவம் ப்ரவிஷ்டானாம் புனராவர்த்தனம் குத: ||
(கிருஷ்ணாம்ருத மஹார்ணவ)

ஜாக்ருத, ஸ்வப்ன, ஸுஷுப்தி மற்றும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார என்னும் மூன்று நிலைகளை நியந்த்ரிக்கும் பகவந்தனின் மூன்று ரூபங்கள் முறையே அனிருத்த, பிரத்யும்ன, மற்றும் சங்கர்ஷண. கடைசியான துரீய ரூபம் மோட்சபிரதனான வாசுதேவ ரூபம். முறையே முதல் மூன்று ரூபங்களை உபாசனையினால் சாட்சாத்காரம் பெற்று, கடைசியில் வாசுதேவனை அடைகிறான். இது உபாசனையில் கிடைக்காத கடைசியான ரூபம். இதற்குப் பிறகு வேறு உபாசனை இல்லை. இதனை பெற்றவர்களுக்கு மறுபடி சம்சாரத்திற்கு திரும்பும் பயம் இல்லை.

இந்த பிரமாண வசனத்தை பார்த்தால், அபரோக்ஷ ஞானத்தின் உதயத்தில், மோட்சத்தின் வழியில் நின்ற பக்தன், வாசுதேவனை பாடுவது எத்தகைய அர்த்தமுள்ளதான விஷயம் என்று புரிகிறது.

வாசு என்றால் தன்னை மூடி வைத்துக்கொண்டவன் (வஸ ஆச்சாதனே); தேவ என்றால் வெளிச்சத்தில் வெளிச்சமாக இருப்பவன் (திவு த்யுதௌ). இவ்வாறு சம்சாரத்தில் தன்னை மூடிக் கொண்டு, கண்ணிற்குத் தெரியாமல் அபரோக்ஷ ஞானிக்கு வெளிச்சமாக வந்து காட்டிக் கொண்டவன் வாசுதேவன்.

சுத்தமான ஸத்வ குணத்திற்கு ‘வஸுதேவ’ என்கின்றனர். ‘ஸத்வம் விஷுத்தம் வஸுதேவ ஸஞ்ஞிதம்’. ஸத்வ குணம் நிறைந்த மனதில் தெரியும் ரூபம் - வாசுதேவ. இதில் மேலும் ஒரு ரகசியம் அடங்கியிருக்கிறது. கேஷவாதி ரூபங்கள் 12. இதே த்வாதஷ

வ்யூஹ (கேஷவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணு, மதுஸூதன, த்ரிவிக்ரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷிகேஷ, பத்மனாப மற்றும் தாமோதர). வாசுதேவாதி நான்கு ரூபங்கள். இதுவே சதுர் வ்யூஹ. (வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன மற்றும் அனிருத்த). இந்த இரு வியூகங்களை மனதில் வைத்து, ஒரு முறை கேஷவ என்று அழைத்தார்; இன்னொரு முறை வாசுதேவ என்று அழைத்தார்.

வியூகத்தின் முதலாம் பெயர், மொத்த வியூகத்தையே அழைத்தது போல ஆகிறது. இந்த இரு வியூகங்களையும் சேர்த்தால் மொத்தம் 16 ரூபங்கள். இது ஒரு உபாசனையின் பத்ததி. பாகவதத்தில் இந்த வாக்கியம் வந்திருக்கிறது.

ஆத்மதுல்யை: ஷோடஷபி: வினா ஸ்ரீவத்ஸ கௌஸ்துபௌ ।
பர்யுபாஸிதமுன்னித்ர ஷாரதாம்புதா ஹேக்ஷணம் ।।
(பாகவதம் 6.9.29)

ஸ்ரீவத்ஸ என்றால் ஸ்ரீதத்வ - ப்ரக்ருதி. கௌஸ்துப என்றால், அதன் அபிமானியான பிரம்ம புருஷ. இவ்வாறு பிரக்ருதி புருஷனால் க்ஷராக்ஷரங்களால் வணங்கப்பட்டு, தனக்கு தான் மட்டுமே ஒப்புமையாக இருக்கும், 16 ரூபங்களால் வணங்கப்படும், தாமரைக் கண்ணனான, அழகனான, பகவந்தன், ஆத்மக்ரீடனாக சஞ்சரிக்கிறான்.

இதனை, வைஷ்ணவ தந்த்ரஸார இவ்வாறு சொல்கிறது.

அபும்ப்ரக்ருத்யதீனத்வாத் வாஸுதேவாதிகா ஹரே: ।
துல்யாஸ்து கேஷவாத்யஷ்ச நச பின்னா: கதஞ்சன ।।

ஆத்மையவ ஸப்ததஷதா ஸ்வயம் பத்வா ஜனார்த்தன: ।
மத்யஸ்தாவ்ருதிரூபேண க்ரீடதே புருஷோத்தம: ।।

நடுவில் நாராயணன், சுற்றிலும் கேஷவாதி மற்றும் வாசுதேவாதி 16 ரூபங்கள். இவ்வாறு ஒருவனேயான பகவந்தன், தன்னதேயான 17 ரூபங்களை வைத்து க்ரீடிக்கிறான். இது ஒரு விதமான பகவந்தனின் லீலை. இந்த ரூபங்களில் எந்த பேதமும் இல்லை.

எந்த தாரதம்யமும் இல்லை. அனைத்தும் ப்ரக்ருதி - புருஷனால் கூடி நின்ற பரதத்வங்கள்.

வாக்கியத்தின் துவக்கத்தில் 'நாராயண' என்று அழைத்த தாசர், பிறகு 'கேஷவனே' என்று 'வாசுதேவனே' என்று வியூகத்தின் முதல் ரூபங்களை சொல்லி, இந்த 17 ரூபங்களின் உபாசனையின் ரகசியத்தை நமக்கு குறிப்பால் உணர்த்துகிறார்.

இவ்வாறு த்ரிகரண ஷுத்திக்குப் பிறகான விஷயம், அடுத்த பத்தியில் வருகிறது.

காஸித்த ஹாலுகள காவடியெ தும்பிட்டு
லேஸாகி கெனெமொஸரு பெண்ணெயனெ மெத்து |
ஷேஷஷயனனே, ஏளு ஸமுத்ரமதனவ மாடு
தேஷ கெம்பாயிதேளய்யா ஹரியே ||

வாழ்க்கையில் பக்குவம் கொண்ட ஜீவன அனுபவமே - காய்ச்சிய பால். அதனை தேகம் என்னும் பாத்திரத்தில் நிரப்பியிருக்கிறார்கள். ஜீவன அனுபவமான இந்த பாலினை, பகவத் அனுபவத்தின் உயரத்திற்கு இந்த தேகம் என்னும் பாத்திரத்தின் மூலம் எடுத்துச் செல்வது, ஆத்யாத்மத்தின் செயல். அக புறமான இந்த இரு செயல்களையும், இந்த பத்தி விளக்குகிறது.

இங்கு 'தும்பிட்டு' என்பது ஒரு வினைச்சொல்லாக வராமல்; பாதி அர்த்தத்தை கொடுக்கக்கூடிய சொல்லாகவும் வருகிறது. இதனை பிந்தைய பத்தியின் 'காயுதிஹரு' என்னும் சொல்லுடன் சேர்த்து படிக்க வேண்டும்.

இதற்கான காரணம். இந்த 'புற' அர்த்தத்தில் தாசருக்கு அவ்வளவு இஷ்டம் இல்லை. இதன் ஆத்யாத்மத்தின் முகத்திலேயே அவருடைய விருப்பம் இருக்கிறது. அந்த அர்த்தத்தில் இதனை படிக்கலாம். அனுபவத்தின் பாலால் நிரம்பியிராத, காலி பாத்திரத்தை தாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். அதில் பக்குவ அனுபவமான காய்ச்சிய பாலினை நிரப்பு. நிரப்பி, அதில் உறை குத்தி, தயிர் எடு. மறுபடி அந்த தயிரைக் கடைந்து வெண்ணெய்

எடு. எடுத்த அந்த வெண்ணையை நீயே தின்று எழுந்திரு. இதுவே இந்த பத்தியின் சாரம்.

உறை குத்தினால் வரும் தயிரே ஆத்யாத்ம அனுபவம். அதனை கடைந்தால் வரும் வெண்ணெய் - நட்பு ரூபமான பக்தி-விக்ஞானங்களின் கூட்டு. இந்த வாக்கு உபநிஷத்தில் வந்திருக்கிறது.

க்ருதமிவ பயஸி நிகூடம் பூதேபூதே ச வஸதி விக்ஞானம் |
ஸததம் மந்தயிதவ்யம் மனஸா மந்தானபூதேன ||
(பிரம்மபிந்து உபநிஷத்)

ஒவ்வொரு சாதன ஜீவனிலும் விக்ஞானத்தின் ஆசை அடங்கியிருக்கிறது. பாலில் வெண்ணெய் மறைந்திருப்பதைப் போல. மனஸ் என்னும் மத்தினால் நிரந்தரமாக கடைந்து, அதனை வெளியே எடுக்க வேண்டும். இவ்வாறு உபநிஷத்தின் வாக்கியத்தின் விஷயமே இந்த இரு பத்திகளில் வந்திருக்கிறது. இதற்காகவே தாசரின் பாடல்களை 'புரந்தரோபனிஷத்' என்கிறோம்.

பாலினை எடுத்து நிரப்புவது. உறை குத்தி தயிர் எடுப்பது, தயிர் கடைந்து வெண்ணை எடுப்பது, இந்த அனைத்து செயல்களும் நமக்குள் நிரந்தரமாக நடக்க வேண்டியதாகும். ஆனால், நாமாகவே இவை அனைத்தையும் செய்யக்கூடாது. நமக்கு அந்த சக்தியும் இல்லை.

ந ருதே த்வத்க்ரியதே கிஞ்சனாऽரே || (ருக் 10.112.9)

தூரத்து வேலைகளாகட்டும், என்னிடம் இருக்கும் - என்னுடையதேயான அந்தரங்கத்தின் வேலைகளாகட்டும், நீ இல்லாமல் நானாகவே செய்யமாட்டேன். வேத ரிஷி கூறிய இந்த விஷயம், தாசரின் விருப்பமும் ஆகும். அதற்காகவே இவரும் அதையே பிரார்த்திக்கிறார்.

ஈ காவடிகெ ஜீவனானுபவத ஹாலு தும்பு
நானே மாடிதெ எம்ப அஹங்காரத ஹுளிமத்ய தும்பபேட

தும்பித ஹாலு ஹுளிது கெடதந்தெ நீனே ஹெப்பு ஹாகு
நீனே தெகெத ஆ பெண்ணெ நினகே மீஸலு

ஆகையால் என் அக பக்தி ஞானங்களின் வெண்ணையை மென்று எழு. இந்த மெல்லுவது கூட அவசரம் அவசரமாக அல்ல; விழுங்குவதும் அல்ல; மெதுவாக, நன்றாக, வயிறு முழுக்க அன்புடன் மெல்ல வேண்டும். இந்த பக்தியின் வெண்ணையை பகவந்தன், அன்புடன் ஏற்றுக்கொண்டு திருப்தி அடையாமல் இருந்தால் சாதகனின் கதி என்ன?

ஆக, இதன் கருத்து இவ்வாறு: அன்பு ஒருபக்கமாக சார்ந்து இருக்கக்கூடாது. பக்தன், பகவந்தனை அன்பு செய்தால் மட்டும் போதாது. பகவந்தனும் பக்தனை அன்பு செய்ய வேண்டும். இல்லையெனில் - நீனொலியதித்தரெ நானொலிது பலவேனு?.

யமேவைஷ வ்ருணுதே தேன லப்ய: |
(அதர்வண : 3.2.3. கட: 1.2.22)

யாருக்காக அவன் அன்புடன் தரிசனம் அளிக்கிறானோ, அத்தகையவர்களுக்கு மட்டுமே அவன் கிடைக்கிறான்.

ஆகையால், நான் உன்னை விரும்புகிறேன் என்பதில் விஷயம் இல்லை. நீ என்னை விரும்ப வேண்டும் என்னும் விருப்பம் மட்டுமே என்னுடையது. விரும்புவது, காப்பது என்பது உன்னுடைய வேலை. அதற்காக:சேஷஷயனனே ஏளு

பாற்கடலில் பாம்பின் மேல் படுத்திருப்பவனுக்கு, பாத்திரத்தில் பால் நிரப்பிக்கொண்டு வந்தவர்கள் நாம். சூரியனின் முன் ஒரு சிறிய விளக்கினை ஏற்றுபவர்கள் நாம். நிரம்பி வழியும் ஏரிக்கு, அந்த ஏரியின் தண்ணீராலேயே அர்க்யம் கொடுக்கிறோம். கெரெயெ நீரனு கெரெகெ செல்லி

ஏன் எழ வேண்டும்? எழுந்து என்ன செய்ய வேண்டும்? ஸமுத்ரமதனவ மாடு

இந்த மொத்த பாடலில், மேலோட்டமாக தெரியும் அர்த்தத்தைவிட, நம்மை ஆத்யாத்மத்தின் ஆழத்திற்கு இழுத்துச் செல்லும் வாக்கின் கூட்டமே இருக்கிறது.என்றோ நடந்த பாற்கடல் கடைந்த செயலை, இன்று காலையில் திரும்ப ஏன் செய்ய வேண்டும்? செய்து முடித்துவிட்ட விஷயத்திற்காக ஸ்ரீனிவாஸன் ஏன் எழவேண்டும்?

மொத்த பாடலையும், ஆத்மாத்மத்தின் பின்னணியில் பார்க்கவில்லையெனில், சரியான அர்த்தம் புரிவதில்லை. இவ்வாறு இங்கு 'ஆத்யாத்மத்தின் சமுத்ர மதன' என்று இதனை பொருள் கொண்டால், ஒரு அபூர்வமான விஷயம் புலப்படுகிறது. இதற்கு ஏற்ப முன்னரே சில விஷயங்கள் வந்திருக்கின்றன. தயிர் கடைந்து வெண்ணெய் எடுத்த விஷயம் ஏற்கனவே பார்த்தோம். அதுவே இங்கு சமுத்ரமதனம் ஆயிற்று.

ஜீவ அனுபவத்தின் பால் நிரம்பிய இந்த இதயமே பாற்கடல். அங்கு நீ நிலைத்திருக்கிறாய். ஆகையால் நீ க்ஷீரஸமுத்ரஷாயி. பாற்கடலில் படுத்திருக்கும் ஹரி. மூலாதாரத்திலிருந்து சஹஸ்ராரத்தின் வரை நீண்டு இருக்கும் சுஷும்னா நாடியே, 1000 தலைகொண்ட சேஷன். அங்கு நீ நிலைத்திருக்கிறாய்.

ஆகையால் நீ சேஷஷயனன். இந்த இதய சமுத்திரத்தின் மதனம் தினமும் எப்போதும் நடக்க வேண்டும். விஷம் அனைத்தும் வெளியேறி, அமிர்தம் நிரம்பி வரும்வரை நடக்க வேண்டும். அது உன்னாலேயே நடக்க வேண்டும். இது அனைத்து பக்தர்களின், நிரந்தர விருப்பம் ஆகும். ஆகையால், ஒவ்வொரு நாளும் காலையில் தாசர் இவ்வாறு பிரார்த்தனை செய்கிறார். ஸமுத்ர மதனவ மாடு

இத்துடன் முடியவில்லை. ஆத்மாத்மத்தின் அர்த்தம் இன்னும் ஆழமாக இருக்கிறது. நம் தேகத்திற்குள் ஏழு சமுத்திரங்கள் உள்ளன. அதில் பகவந்தன் சேஷஷாயியாக இருக்கிறான். ஒவ்வொரு சமுத்திரமும் மதனம் ஆகவேண்டும். அதற்காக தாசர் இவ்வாறு பாடுகிறார். சேஷசயனனே ஏளு, சமுத்ர(கள) மதனவ மாடு

நீ குண்டலினியில், யோக நித்திரையில் படுத்திருக்கிறாய். குண்டலினியை எழுப்பு. யோக நித்திரையிலிருந்து எழுந்திரு. என்னை எழுப்பு. எனக்குள் இருக்கும் ஆத்யாத்மத்தின் அபிவ்யக்தி கேந்திரங்களான ஏழு நாடி சக்ரங்களை ஆத்மாத்யத்தின் கடல்களை, மதனம் செய்து, எழுப்பு. மூலாதாரத்திலிருந்து சஹஸ்ராரத்தின் வரை ஏழு நாடிகளின் கேந்திரங்களிலும் உன் தர்ஷனத்தின் திவ்யானுபூதி என்னுடையதாகட்டும்.

தேகத்தில் இருக்கும் இந்த ஏழு கடல்கள் யாவை?

யோக சாஸ்திரங்களை அறிந்தவர்கள் இந்த ஜாக்ருதி கேந்திரங்களை இவ்வாறு அழைக்கின்றனர். மூலாதாரம், ஸ்வாதிஷ்டான, மணிபூர, அனாஹத, விஷுத்திசக்ர, ஆஞ்ஞாசக்ர, மற்றும் சஹஸ்ரார.நம் தேகத்தில், இந்த நாடி கேந்திரங்களில் இருக்கும் முடிச்சுகளை மருத்துவர்கள் கண்டுபிடித்தால், அதன் பின்னணியில் இருக்கும் ஆத்யாத்ம கேந்திரங்களை ஆத்யாத்ம விஞ்ஞானிகள் அடையாளம் கொள்கிறார்கள். அவை இவ்வாறு:

மூலாதார : Gonad; ஸ்வாதிஷ்டான : Cells of laying
மணிபூர : Adrenals; அனாஹத : Thymus
விஷுத்தி : Thyroid and Para thyroid
ஆக்ஞா : Pineal; ஸஹஸ்ரார : Pituitory

இவையே ஏழு கடல்கள். இவற்றின் மதனத்தால் இங்கு பகவந்தன் வெளிப்பட வேண்டும். முதுகிலிருந்து கீழே ஜனன இந்திரியத்தின் மூலத்தின் வரை இருக்கும் முதல் நாடி கேந்திரம் - மூலாதாரம். இதே குண்டலினி. குண்டலத்தை சுற்றி பாம்பு படுத்திருக்கிறது. இது கீழே முகம் செய்து படுத்திருக்கையில், மனிதன் தற்காலிக விஷயத்தின் போகங்களில் ஈடுபட்டிருக்கிறான். அது தலை தூக்கி, படம் எடுத்து நின்றபோது, அதன் கதி ஊர்த்வ முகமாகிறது. அப்போது மனிதன், விஷய சுகங்களை விட்டுவிட்டு, ஆத்யாத்மத்தின் பால் செல்கிறான். சாதனையில் படிகளில் ஏறுகிறான். மனிதனின் செயல்களை நியந்த்ரணம் செய்யும் மூலகேந்திர இந்த மூலாதாரம் ஆகும். ஆத்யாத்மத்தின் யோக

சக்தியை உருவாக்கும் 'ஜெனரேட்டர்' இதுவே. ஆத்யாத்மத்தின் திறவுகோல்.

இந்த மூலாதாரத்தின் உப்பு நீரின் கடலுக்கு அந்தப்புறம், நாபியிலிருந்து கீழே, கீழ் வயிறு வரைக்கும், ஸ்வாதிஷ்டான சக்ர இருக்கிறது. இதுவே இரண்டாம் கடல். கறும்புச்சாறு கடல்.

மூலாதாரத்தை கடைந்து, அதிலிருந்து மேலே வந்த ஸாதகன், உப்பு நீரினை தூய்மைப்படுத்தி சுத்தமான நீராக மாற்றினான். அதனை கறுப்புச் சாறு ஆக்கினான். இது இரண்டாம் நிலை.

அதற்குப் பிறகு, நாபிக்கு சமமாக இருக்கும் நாடிசக்ர - மணிபூர. இதுவே உள்ளே இருக்கும் மூன்றாம் கடல். சுராபானத்தின் கடல். இது கர்ம கிரந்திகளை எழுப்பும் கடல். மருத்துவத்தில் Adrinalஸ்க்கு இருக்கும் சிறப்பே, ஆத்மாத்மத்தில் இந்த மணிபூரத்திற்கு இருக்கிறது.

அதன் பிறகு, ஹ்ருதய கோஷத்தில் இருக்கும் நாடி சக்ர - அனாஹத. இதுவே நான்காம் கடல் ஆகும். நெய் கடல். ஹ்ருதயத்தை கடைந்து வெண்ணெய் எடுக்கும் பேச்சு இங்கிருந்தே வந்தது. இது பக்தியின் வெண்ணெய். நட்பின் நெய். இந்த நெய் பாய்ந்து ஓட வேண்டும்.

அதன் பிறகு, கழுத்தில் இருப்பது விஷுத்தி சக்ர. இதையே இந்திரயோனி என்றும் அழைக்கின்றனர். இது ஐந்தாம் கடல். தயிர் கடல். மூலத்திற்கு நெய் சென்றபோது, தயிரைக் கொடுப்பதைப் போல, நெய் கடலுக்குப் பின், தயிர் கடல். அனாஹத சக்ரத்தின் மேல் விஷுத்தி சக்ர.

தயிரின் மூலத்திற்கு சென்றபோது இருப்பது பால். இதுவே புருவங்களின் நடுவில் இருக்கும் அஞ்ஞா சக்ர. உள்ளேயிருக்கும் ஆறாம் கடல். பாற்கடலில் நிலைத்த பகவந்தனின் சாட்சாத்காரம், இந்த புருவ மத்தியத்தின் ஆஞ்ஞா சக்ரத்தில் இருக்கிறது.

இதுவே மூன்றாம் கண். அக-கண். இந்த சக்ரத்தின் ஜாக்ருதையிலேயே, கடந்த எதிர்காலங்களின் முழுமையான அறிவு

கிடைக்கிறது. சாதனையில் தான் அடுத்து என்ன செய்ய வேண்டும் என்னும் வழி கிடைப்பது இந்த கேந்திரத்தில். அதற்காகவே இது ஆஞ்ஞாசக்ர எனப்படுகிறது. மருத்துவத்தில் சொல்லப்படும் Pinealலிலும்கூட இறந்த எதிர்காலங்களின் ரகசியம் அடங்கியிருக்கிறது. ஆகையாலேயே, புற கண்களின் நடவடிக்கைகளின் ஆராய்ச்சிலேயே ஈடுபட்டிருக்கும் மேற்கத்திய உலகின் Pineal முடிச்சுகளின் நடவடிக்கை என்ன, அதன் நோக்கம் என்ன என்பதை கண்டுபிடிப்பதில் இன்னும் வெற்றி பெறவில்லை.

அதற்குப் பிறகு, நெற்றியின் மேல் சஹஸ்ரார சக்ர இருக்கிறது. இதுவே ஏழாம் கடல். நன்னீர் கடல். பகவந்தனை அறிந்து வாழும் தெளிவான நிலை இது. இத்தகைய ஞானியின் கடல் கலங்குவதற்கு வாய்ப்பே இல்லை.

ஸ்வாரசியம் என்னவென்றால், திருப்பதியின் மலைகளும் ஏழு. ஆறு மலைகளைத் தாண்டி, ஏழாம் மலையில் ஏறினாலேயே, ஸ்ரீனிவாசனின் தரிசனம் கிடைக்கிறது. இந்த ஏழாம் மலையே வேங்கட - வேங்கள - வேங்கடாசல. ஆழ்வார்கள் சொல்வதைப் போல, அவனே மலையப்பன். அவனே கடலொடெய. அவனே நம் அக நாயகனும் ஆகிறான். 'மனத்துள்ளான், வேங்கடத்தான், மாகடலான்'.

இவையே சாதகர்கள் ஏறவேண்டிய ஏழு படிகட்டுகள். கடைசியான படிக்கட்டில் ஏறியிருப்பவன், மறுபடி கீழே இறங்கி வரும் பயம் இல்லை. இவை மேலே ஏறும் படிகளே தவிர, இறங்கும் படிகள் அல்ல.

குண்டலினியில் படுத்திருந்த சேஷன், இப்போது 1000 தலைகளுடன் சஹஸ்ராரத்தின் வரை வளர்ந்து நின்றிருக்கிறான். அங்கு படுத்திருக்கும், சேஷஷயனான ஸ்ரீனிவாஸன் ஏழு கடல்களையும் கடைந்து, நம் பக்திரசத்தின் வெண்ணையில் திரண்டு வரவேண்டும். அதற்காகவே, தாசர் - சேஷஷயனனே, ஏழு ஸமுத்ர மதனவ மாடு - என்று பாடினார்.

இந்த ஏழு நாடி சக்ரங்களை, ஷட்பிரஷ்னோபனிஷத்து இப்படியாக சொல்கிறது.

அதேமே அன்ய உபரே விசக்ஷணம்
ஸப்தசக்ரே ஷளர ஆஹுரர்ப்பிதம் ||

சில ஆத்யாத்ம உபாசகர்கள், ஏழு நாடி சக்ரங்கள், ஆறு இந்திரியங்களைக் கொண்ட இந்த தேகத்தின் (உபரத்தில்), ஞானமயனான பகவந்தனை காண்கிறார்கள். இந்த ஏழு நாடி சக்ரங்களுக்கும், சூர்யனின் ஏழு குதிரைகளுக்கும், சூர்யகிரணத்தின் ஏழு வர்ணங்களுக்கும், அக்னியின் ஜ்வாலைகளுக்கும் பரஸ்பரமான ஆத்யாத்ம சம்பந்தம் இருக்கிறது.

இந்த ஏழிலும் நாபி மற்றும் மூலாதாரத்திற்கு இடையே உள்ள சக்ரத்தை, இந்த இரண்டிலும் பாவித்து, ஆறு சக்ரங்களை மட்டும் சாஸ்திரகாரர்கள் சொல்வது உண்டு.

மூலே ச நாபௌ ஹ்ருதயேந்த்ரயோனி
ப்ரூமத்யமூர்தத் விபடந்தகேஷு ||
(தந்த்ரஸார ஸங்க்ரஹ 4.152)

மூலாதார, நாபி, ஹ்ருதய, கழுத்து, கால், புருவங்களுக்கு இடையே மற்றும் நெற்றியிலிருந்து 12 அங்குல உயரமான இடத்தில் என இவை ஆறு நாடிசக்ர ஸ்தானங்கள் ஆகும். புரந்தரதாசரே இதனை ஒரு பாடலில் சொல்லியிருக்கிறார்.

ஆதார மொதலாத ஆறு | சக்ர
ஷோதிஸி பிடபேகு ஈஷண மூரு
ஸாதிஸி ஸுஷும்னா ஏரு | அல்லி
பேதிஸி நீ பரபிரம்மன ஸேரு

இப்படி சில பேதங்கள் இருக்கலாம். ஒரு பார்வையில், இந்த தேகத்தில் நிலைத்திருக்கும் ஒரே கடல். அதற்கு ஏழு இடங்களில் ஏழு பெயர்கள். அதற்காகவே தாசர், ஏகவசனத்திலேயே கூறியிருக்கிறார். ஸமுத்ர மதனவ மாடு.

இந்த மதன க்ரியைக்கு, ஸாதகஜீவமானது பக்குவம் செய்து கொண்டு தயாராக இருக்கிறது என்பது அடுத்த பத்யத்தில் வருகிறது. தேஷ கெம்பாயிதேளய்யா ஹரியே

அருணோதயம் ஆகும்போது, பிராம்ஹி முஹூர்த்தத்தில், இருட்டினை ஓட்டி, விடியலின் சிவப்பு அனைத்து இடங்களிலும் பரவுகிறது. இது பௌதிக பிரபஞ்சத்தில் நடைபெறக்கூடிய சாமான்ய விஷயம்.

புறத்தைப் போல, உள்ளும்கூட தேசம் இருக்கிறது. அந்த தேசத்திலேயே ஸாதனையின் ஆதேஷ (ஆக்ஞெ) கிடைக்கிறது. அது புருவ மத்யத்தின் தேசம். இனி அந்த சாதகனின் பிம்போதயம் ஆகவேண்டும் அவ்வளவுதான். விடியலில் சிவப்பு கிரணங்கள், அஞ்ஞாசக்ரத்தில் தெரிகிறது. இதுவே மூன்றாம் கண். இந்த இரு கண்களின் சூர்ய சந்திரர்களின் நடுவே, அந்த அக்னி நேத்ரம் திறந்தபோது, அந்த சிவப்பு தெரிகிறது. அப்போது, மூன்று காலங்களும் திறக்கிறது. இறந்த, எதிர்காலங்களிலும் வெளிச்சம் பரவுகிறது. அத்தகையவனுக்கு இறந்த, எதிர்காலங்கள் என்பது, நிகழ் காலத்தைப் போலவே தெளிவு.

அடுத்து சஹஸ்ராரத்தில் சஹஸ்ர கிரணங்களுடன் உதிக்கும் அந்த திவ்ய சூர்யனின் தரிசனத்திற்காக பக்தன் ஆர்வத்துடன் காத்திருக்கிறான். 'மூடிபா ஓ ஹரியெ' என்று பிரார்த்திக்கிறான். தேஷ கெம்பாயிது ஏளய்யா ஹரியெ

இங்கு ஹரியே என்று அழைத்தது மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஹரி என்றால், சம்ஸ்கிருதத்தில் சூரியன். நாராயணனும்கூட.

"தினமணிர் பாஸ்வன் விவஸ்வான் ஹரி: "
"ஹரிம் ஹ்ருஷிகேஷமுதாஹரந்தி" (அபிதான ரத்னமாலை)

புற இருட்டினை விலக்குவதால் சூரியன் -> ஹரி. அக இருட்டினை விலக்குவதால் நாராயணன் -> ஹரி. சூரியனில் இருந்து புற இருட்டினை; சஹஸ்ராரத்தில் இருந்து அக இருட்டினை விலக்குவதால், அக-புறத்தில் அவனே உண்மையான ஹரி. அதற்காகவே அவனை சூர்ய நாராயணன் என்றே அழைக்கின்றனர். ஆகையால் 'ஏளு ஹரியே' என்றால், ஹாயத்ரி பிரதிபாத்யனான, எனக்குள் இருக்கும் சூரியனே, உதித்து வா' என்றே அர்த்தம். அஞ்ஞானத்தையெல்லாம் விலக்கி என் அகத்தில் ஒளி பாய்ச்சும் வெளிச்சமாக வா. என் சஞ்சிந்த கர்மங்கள் அனைத்தையும்

பரிகரிக்கும் ஹரியாக வா. இந்த நோக்கத்திற்காகவே தாசர் இங்கு சேஷஷயனனை ‘ஹரியே’ என்று அழைக்கிறார். ஹரியின் தரிசனம் ஆனபிறகும், பாவம் பரிகாரம் ஆகாமல் இருக்க முடியுமா?

க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே ||
(அதர்வண 2.10)
(அந்த பரதத்வத்தை கண்டபோது, ஞானியின் கர்மங்கள் அனைத்தும் நாசமடைந்து போகின்றன).

ஞானாக்னி ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ||
(ஞானத்தின் நெருப்பு, கர்மத்தின் கட்டைகளை முழுமையாக சுட்டுப் பொசுக்குகிறது).

தனக்குள் வந்த, பகவந்தனின் மானஸ பூஜையின் விதானத்தை தாசர் அடுத்த பாடலில் நினைவுபடுத்திக் கொள்கிறார்.

அரளுமல்லிகெ ஜாஜி பரிமளத புஷ்பகள
ஸுரரு தந்திஹரய்ய ஸுஜனரொடெய
அரவிந்தலோசனனெ கோளி கூகிது கேளு
புரந்தர விட்டலனெ பௌகாயிது

மலர்ந்து கமகமக்கும் மல்லிகை, ஜாஜி ஆகிய நறுமணம் வீசும் பூக்களைக் கொண்டு வந்து உன் பூஜைக்காக தேவதைகள் காத்து நின்றிருக்கின்றனர். திருப்பதி மலையில் நின்றிருக்கிறாரோ இல்லையோ தெரியவில்லை, ஆனால் தாசரின் அகம் என்னும் மலையில் மட்டும் கண்டிப்பாக வந்து நின்றிருக்கிறார்.

விஷ்ணு ஆராதனைக்கு நறுமணம் மிக்க வெள்ளைப் பூக்கள் விசேஷம் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. ஆகவே இங்கு தாசர், மல்லிகை, ஜாஜி என்னும் வெள்ளைப் பூக்களையே சொல்லியிருக்கிறார்.

பாரிஜாதத்தில் ஆஞ்சனேயன் இருக்கிறான். கல்ஹாரத்தில் பீமசேனன் இருக்கிறான். புன்னாகத்தில் கருடன் இருக்கிறான். வெள்ளைப் பூக்களில் சங்கரன் இருக்கிறான்.

பாரிஜாதஸ்ய புஷ்பேஷு ஆஞ்சனேயஸ்ததாஞேயா
ஸௌகந்திகே பீமஸேன: ஷ்வேதபுஷ்பேஷு ஷங்கர: |
புன்னாகபுஷ்பே கருட:...

ஆகையால், சுரர்கள் வெள்ளைப் பூக்களை கொண்டு வந்திருக்கிறார்களய்யா. அதுவும் மலர்ந்த பூக்கள். ஏனெனில், மலர்ந்தால் மட்டுமே பூக்களில் நறுமணம்.

ஆத்யாத்ம மானஸ பூஜையில், இந்த பூக்கள் என்றால் என்ன? இதனை மகாபாரதத்தின் ஒரு வாக்கியம் தெளிவாக விளக்குகிறது.

“பாவாஷ்டபுஷ்பவிதினா ஹரிமர்ச்சயாமி”

நம்மிடம் உள்ள ஸாத்விக பாவங்களே பூக்கள். இத்தகைய எட்டு வித பூக்களால் பகவந்தனை ஆராதனை செய்ய வேண்டும். பூக்களுக்கு சுமனஸ் என்று பெயர். நம் மனதும் சுமனஸ் ஆனபோது அது பகவந்தனின் ஆராதனைக்கு அர்ப்பிக்கப்படும் பூ ஆகிறது. இந்த ஸௌமனஸ்யமே, மனதின் எட்டு வித ஸத்பாவங்களே எட்டு பூக்கள்.

அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ: |
ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமாபுஷ்பம் விஷிஷ்யதே ||

ஞானபுஷ்பம் தப:புஷ்பம் த்யானபுஷ்பம் ச ஸப்தமம் |
ஸத்யம் சைவாஷ்டமம் புஷ்பம் ஏபிஸ்துஷ்யதி கேஷவ: ||

தேகம், வாக்கு, மனஸ் ஆகியவற்றால் பிறருக்கு துன்பம் கொடுக்காது இருக்கும் அஹிம்ஸையே முதல் பூ; இந்திரியங்களை கெட்ட விஷயங்களின்பால் விடாமல் அவற்றை கட்டுப்படுத்துவதே இரண்டாம் பூ; பகவந்தனின் ஸ்ருஷ்டியின் ஒரு சிறிய கிருமியையும்கூட அன்புடன் பார்க்கும் சர்வபூத தயை - மூன்றாம் பூ; நமக்கு கெடுதல் செய்தவர்கள் மேலும் கோபம் கொள்ளாமல் மன்னிப்பது, நான்காம் பூ; ஆத்யாத்மத்தின் அறிவே ஞானம் என்னு ஐந்தாம் பூ; மனனமே தபஸ் என்னும் ஆறாம் பூ; பகவந்தனில் நிரந்தரமாக மனதினை நிலைநிறுத்துவதே தியானம் என்னும் ஏழாம் பூ; சொல்வதைப் போலவே நடக்கும், எப்போதும்

உண்மையையே பேசும் தீக்ஷையே, ஸத்ய என்னும் எட்டாம் பூ; இத்தகைய பூக்களின் அர்ச்சனையினால் பகவந்தன் மகிழ்கிறான்.

இதுவே ஆத்யாத்மத்தின் மல்லிகை, மந்தார, ஜாஜி, பாரிஜாத, நந்தியாவட்டை, புன்னாக கமல, கல்ஹாரங்கள், மனமானது உண்மையின் பக்கம் வரும்போது மலரும் மலர்கள் இவை. ஸத்யத்தின் குணம் - ஒளி-வெளிச்சம். ஆகையாலேயே வெள்ளைப் பூக்கள். அத்துடன், பக்தியின் நறுமணம் நிரம்பிய பூக்கள். இத்தகைய ஸத்பாவத்தின் வாழ்க்கையே பகவந்தனுக்கு நாம் செய்ய வேண்டிய புஷ்பார்ச்சனை.

இதனை பின்பற்றி வந்தவர்கள் ஸுரர்கள். ஆத்யாத்மத்தின் ஸாதனையில் நமக்கு உதவுவதற்காக, நம் இந்திரியங்களில் இருந்து, நம்மை நல்வழியில் நடத்துகின்றனர். தத்வாபிமானி தேவதைகள் மற்றும் ஜீவகலையின் அபிமானியான முக்யபிராண, இந்திரியாபிமானி தேவதைகளை, சாஸ்திரங்கள் பல்வேறு விதமாக வர்ணித்திருக்கிறது. அதில் ஒரு விதம் இங்கு பார்ப்போம்.

ஸோம வித்தப ஸூர்யாஷ்டா: அஷ்வ்யக்னீந்த்ரேந்த்ர ஸூனவ:
யமோ தக்ஷஷ்சிந்த்ரியேஷா: ...

காதில் இருந்து கொண்டு, கேட்கும் சக்தியைக் கொடுப்பவன் சந்திரன். உடம்பில் இருந்து கொண்டு, ஸ்பர்ஷ சக்தியைக் கொடுப்பவன் குபேரன். கண்ணில் இருந்து கொண்டு, பார்க்கும் சக்தியை கொடுப்பவன் சூரியன். நாக்கில் இருந்து கொண்டு சுவைக்கும் சக்தியைக் கொடுப்பவன் வருணன். மூக்கில் இருந்து கொண்டு சந்தனத்தின் நறுமணத்தை உணருமாறு செய்பவர் அஷ்வினிகள். இந்த ஐவரும் ஞானேந்திரியங்களுக்கு அபிமானியாக இருந்தால், அடுத்து வரும் ஐவரும், கர்மேந்திரியங்களுக்கு அபிமானியாக இருக்கின்றனர். வாக்கில் இருந்து கொண்டு பேசும் சக்தியைக் கொடுப்பவன் அக்னி. கையில் இருந்து கொண்டு செயல்களை செய்யும் சக்தியைக் கொடுப்பவன் இந்திரன். காலில் இருந்து கொண்டு நடக்கும் சக்தியைக் கொடுப்பவன் இந்திர புத்திரனான ஜயந்தன். பாயுவில் இருந்து கொண்டு விசர்ஜன சக்தியைக் கொடுப்பவன் ஜய.

ஜனனேந்திரியத்தில் இருந்து கொண்டு, போக சக்தியைக் கொடுப்பவன் தக்ஷ பிரஜாபதி.

இவை 10 புற இந்திரியங்கள். அகத்தில் மனதில் இருந்து கொண்டு, நமக்கு சிந்தனா சக்தியைக் கொடுப்பவன் ருத்ரதேவர். கருட சேஷரும் கூட. அவர்கள் அனைவரும் நமக்காக நமக்குள் இருந்து, நம் இந்திரிய செயல்களின் மூலம் பகவந்தனுக்கு புஷ்பார்ச்சனை செய்கின்றனர். இவர்கள் அனைவரிலும் நின்று, முக்யசக்தியாகி, நம் மூச்சு விடும் செயலை நடத்தி, ஜீவகலையின் அபிமானியாகி, முக்யபிராண பிரம்மதேவர்கூட பகவந்தனுக்கு எப்போதும் புஷ்பார்ச்சனை செய்து கொண்டிருக்கின்றனர்

இவ்வாறு சுரர்கள் நமக்குள் இருந்து, எனக்காக ஸ்வாமிக்கு பூவின் பூஜை செய்கின்றனர். அதன் மூலம் என்னால் பூஜை செய்விக்கின்றனர். ஆகையால்:

"அரளு மல்லிகெ ஜாஜி பரிமளத புஷ்பகள ஸுரரு தந்திஹரய்யா"

நான் செய்கிறென் - என்பது கர்வத்தின் பேச்சு ஆகும். சுரர்கள் என்னிடமிருந்து செய்விக்கிறார்கள். என்பது சாத்விக உபாசனையின் ரீதி.

ஸர்வேந்த்ரியாபிமானிஸ்த முக்யபிராணஸ்த விஷ்ணுனா |
ப்ரேரித: ஸ்ரீஷதுஷ்ட்யர்த்தம் கரிஷ்யே கர்ம சாகிலம் ||

இந்திரியாபிமானிகள் உள்ளே முக்யபிராணர் நியாமகனாக இருக்கிறான். அவனுக்குள் அவனுக்கும் நியாமகனாக நாராயணன் இருக்கிரான். அவனின் ப்ரேரணையினாலேயே, அவன் மகிழட்டும் என்றே, அவர்கள் சொல்வதைப் போல நான் கர்மங்களை செய்கிறேன்.

இந்த அனுசந்தானத்தை தாசர் அழகாக இவ்வாறு கூறுகிறார். 'அரளு மல்லிகெ ஜாஜி பரிமளத புஷ்பகள ஸுரரு தந்திஹரய்ய ஸுஜனரொடெய".

இங்கு பகவந்தனை சுஜனர்களின் தலைவன் என்று அழைக்கிறார். பகவந்தன் சுஜனர்களுக்கும் தலைவன். துர்ஜனர்களுக்கும் தலைவன். இப்படி இருக்கையில், 'சுஜனதொடெய' என்று அழைத்ததில் ஒரு சிறப்பு நோக்கம் உண்டு. யாருடைய மனம் தூய்மையாக இருக்கிறதோ, அவர்கள் ஸுஜனர்கள். யாருடைய மனதில் அழுக்கு நிரம்பியிருக்கிறதோ அவர்கள் துர்ஜனர்கள். அவருடைய மனதில் அழுக்கு நிரம்பியிருப்பதாலேயே அவர்கள் 'ஸுமனஸ்ய' ஆக மாட்டார்கள். அவர்கள் பாவம் ஸத்பாவம் ஆகாது. ஆகையால், அவர்கள் பாவபுஷ்பங்களால் பூஜிக்கமாட்டார்கள். ஒரு வேளை அவர்கள் துர்பாவத்தினால் பூஜித்தாலும், அத்தகைய பூஜையை ஸ்வாமி ஏற்றுக்கொள்வதில்லை.

ஆகையால் ஆன் ஸுமனஸர்களின் தலைவன். ஸுஜனர்களின் தலைவன். சூரியன் உதிக்கிறான். பூக்கள் மலர்கின்றன. ஆகையால் உதயத்தில், ஸ்ரீனிவாசனுக்கு மலர்ந்த பூக்களை கொண்டு வந்து அர்ப்பிக்கின்றார். ஆனால், சில பூக்கள் இருக்கின்றன. பகலில் அவை மூடியிருக்கின்றன. இரவில் பூக்கின்றன. மனிதர்களிலும் சிலர் இப்படியே. பகவந்தனைப் பற்றிய வெளிச்சம் உள்ளே நிரம்பியபோது சிலரின் மனம் மலர்கிறது. சிலரின் மனம் மலர்வதற்கு பதில் மூடிக் கொள்கிறது. ஏனெனில், வெளிச்சத்தை வெறுக்கும் 'நிஷாசரர்கள்' இவர்கள். ஆந்தையைப் போல இருட்டில் பார்ப்பவர்கள். பகலில் தூங்குபவர்கள். இவர்களே துர்ஜனர்கள். இவர்களுக்கு தமக்குள் இருக்கும் ஸ்வாமியின் அறிவே இருப்பதில்லை. ஆகையால், பகவந்தன் 'ஸுஜனர்கள் தலைவன்'.

இத்தகைய மனஸ்-ஷுத்தியினல் நான் உனக்கு ஸத்பாவத்தின் மலர்ந்த புஷ்பாஞ்சலியை அர்ப்பிக்கிறேன். ஆகையால், நீ தலைவனாக நின்று, இந்த தாசனை காப்பாற்ற வேண்டும்.

முதல் பத்யத்தில் வந்த தாஸரே இங்கு சுஜனர். தாஸன் ஆகாமல் சுஜனர் ஆகமுடியாது. சுஜனர்கள் ஆகாமல் தாசன் ஆகமுடியாது. அகத்தில் தோன்றிய பகவந்தனின் ரூபத்தை பாவபுஷ்பாஞ்சலியினால் அர்ப்பித்த தாசர், பாபாதி கேஷாந்த தரிசனத்தின் விருப்பத்தினால், பக்தியினால் மெதுவாக தலை

தூக்கி, கண் திறந்து பார்க்கிறார். தாமரைக் கண்களைக் கொண்ட பகவந்தன், அந்த பக்தனுக்கு அபயத்தைக் கொடுப்பதற்காக திறக்கிறது. அப்போது தாஸர் இவ்வாறு பாடுகிறார்.

அரவிந்தலோசனனே, கோளி கூகிது கேளு
புரந்தரவிட்டலனே பௌகாயிது

பகவந்தன் அரவிந்த லோசனன். இந்த வாக்கு உபநிஷத்தில் வருகிறது.

“தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ”
--சாந்தோக்ய 1.6-7

தண்ணீரில் வேர் விட்ட புதிய தாமரை மலர் போல, அவனுடைய கண்கள் அழகாக இருக்கின்றன. இதையே, புரந்தரதாசர், பகவந்தனை ‘அரவிந்தலோசனனே’ என்றார்.

“அரவிந்த - இரவில் மொக்காகி மூடிக்கொண்டு, சூரியோதய சமயத்தில் மலர்கிறது. நீனும் அரவிந்தலோசன என்றபிறகு, சூரியோதயம் ஆகும்போது, உன் கண்களும் மலர்வது என்பது சரிதானே?”. பக்தர்களின் உள்ளும் ஞானசூரியனின் உதயம் ஆகிறது. வந்து நிற்கும் பகவந்தனின் கண் தாமரை போல மலர்கிறது. இவ்வாறு அரவிந்தலொசன என்பது, பகவந்தனின் பார்வையில் நிரம்பிய கருணைரசத்தையும், அருள்வதற்காக நிற்கிறான் என்பதையும் குறிக்கும் சொல் ஆகும். அதனுடன், பக்தனின் பிரார்த்தனையின் காத்திருத்தலும் அதில் அடங்கியிருக்கிறது. அகத்தில் சூரியன் மேலெழுந்து வருகிறான். தெரெ நின்ன கருணெய கந்தாவரெயன்னு...

காலை நேரத்தில் இன்னும் தூக்கத்திலிருந்து விழிக்காமல், கண் திறக்காமல் இருப்பவனுக்கு, வெளியே வெளிச்சம் வந்துவிட்டது என்பது எப்படி தெரியும்? கண் திறந்தால்தானே வெளிச்சம் தெரியும். எழுந்திருக்க வேண்டுமே என்று சோம்பலில் ‘ம்ம். இன்னும் இருட்டு’ என்றவாறு படுக்கையில் புரள்கிறான். இத்தகையவர்களுக்கு வெளிச்சம் தெரிவதற்கு சாத்தியமே

இல்லை.

காலையில் சோம்பலில் எழாத குழந்தைகளை, தாயானவள் கொஞ்சிப் பேசி, தட்டி எழுப்புவதைப் போல, தாசரும் தன் இதயத்தில் படுத்திருக்கும், அப்ராக்ருத-சிசு, ப்ராக்ஞ-ரூபி, பகவந்தனை எழுமாறு கூறுகிறார். 'கோளி கூகிது கேளு".

இதில் தெரியும் மேலோட்டமான அர்த்தம் இதுவே. காலை ஆகிவிட்டது என்று கோழிக்கும் தெரிந்துவிட்டது. மனிதனுக்கு இது தெரிய வேண்டாமா? மனிதன் எழுந்து, தன் கடமையில் ஈடுபடுவது எப்போது? அவன் எழுந்தபோது, தன் ஸ்வாமியையும் சேர்த்து எழுப்பினான். 'கோளி கூகிது கேளு".

இது புற அர்த்தம். அகத்திலும் கோழி கூவுகிறது. அகத்தில், இதயத்தில் பகவந்தன் நிலைத்திருக்கிறான். ப்ராக்ஞ ரூபத்தினால் ஜீவனுக்கு தூக்கத்தைக் கொடுத்து, படுத்திருக்கிறான். அங்கேயே, ஞானோதயத்தின் வெளிச்சம் வரத் துவங்கியுள்ளது. புருவங்களின் நடுவில், ஆஞ்ஞா சக்ரத்தில், விடியலில் சிவப்பு வந்திருக்கிறது. இதயத்தின் அனாஹத சக்ரத்தில் அனாஹத த்வனியின் கோழி கூவுகிறது. மூலாதாரத்திலிருந்து புறப்பட்டு பரா ஆகி, பஷ்யந்தி ஆகி, இதய மத்யத்தில் மத்யமா ஆகி, கேட்கும் இந்த அனாஹத த்வனியானது, (Non-vibratory sound), கழுத்தில், பற்களின் நடுவில் துவங்கி, புற காதுகளில் கேட்பதற்கு முன்னரே, ஞானிகளின் அக-காதுகளுக்கு தெளிவாக கேட்கிறது. அஞ்ஞானிகளுக்கும் இந்த இதய மந்திரத்தின் ஓம்காரத்தின் சங்கு நாதமானது, காதுகளை மூடிக்கொண்டு கேட்டால், சிறிது கேட்கிறது.

தஸ்யைஷா ஷ்ருதிர்யத்ரைதத் கர்ணாவபிக்ருஹ்ய நினத
மிவ நததுரிவாக்னேரிவ ஜ்வலத உபத்ருணோதி
(சாந்தோக்ய, 3.13.8)

இதயத்தில் இருக்கும் வைஷ்வானரனை பிராணன் சுற்றுகிறான். இரு காதுகளையும் கெட்டியாக மூடிக்கொண்டால், ஏதோ காற்று வீசுவதைப் போல, நெருப்பு கொழுந்துவிட்டு எரிவதைப் போல, ஒரு அக-குரல் கேட்கிறது. அதுவே இந்த பிராணஷக்தியின் பாதம்).

புரந்தரதாசருக்கு இந்த அனாஹதத்தின் நாதம் கேட்டது. இந்த அந்தர் நாதத்தின் அனுபவத்தின் மகிழ்ச்சியை அவர் பகவந்தனின் முன் சொல்லிக் கொள்கிறார். 'கோளி கூகிது கேளு'. இன்னும் சஹஸ்ராரத்தில் சூர்யோதயத்திற்கு அதிக நேரம் காத்திருக்க வேண்டியதிலை. அதுவும் ஆகியே விட்டது. 'புரந்தர விட்டலனே, பௌகாயிது'.

புரந்தரதாசருக்கு தரிசனம் அளித்த விட்டலனே, புரந்தரவிட்டலன். புர என்றால் தேகம் என்றும் அர்த்தம் உள்ளது. தேக பந்தனத்தை விடுவதால், புரந்தரனானான் விட்டலன். 'புரந்தர விட்டல' குரு வியாஸதீர்த்தர் தாசருக்கு கொடுத்த பவித்ரமான முத்ரிகை இது.

விட்டல என்னும் சொல்லுக்கு ஆத்யாத்மிக குறியீடுகளும் உள்ளது. இது ஒரு தனியான அவதார ரூபம் அல்ல. ஸ்ரீனிவாசனும் ஒரு அவதாரம் அல்ல; விட்டலனும் ஒரு அவதாரம் அல்ல; கிருஷ்ணனே விட்டலன். கிருஷ்ணனே ஸ்ரீனிவாசன். பண்டரிபுரத்தின் ஸ்ரீனிவாஸனே விட்டலன். திருப்பதியின் விட்டலனே ஸ்ரீனிவாசன்.

இது கிருஷ்ணாவதாரத்தின் ரூபமே ஆகும் என்று குறிப்பிடுவதற்காகவே, முதலாம் பத்தியில் 'வாஸுதேவனே' என்கிறார். வசுதேவ தனயனான ஸ்ரீகிருஷ்ணனே வேங்கடத்தின் ஸ்ரீனிவாசன் என்பது இங்கு சிறப்பு.

இதனை மேலும் தெளிவாக்குவதற்காகவே தாசர், இரண்டாம் பத்தியில், இதே சிந்தனையை முன்னெடுத்தவாறு, நவனீத சோரனான ஸ்ரீகிருஷ்ணனின் லீலையை நினைத்தவாறு, இவ்வாறு பாடுகிறார். 'லேஸாகி கெனெமொஸரு பெண்ணெயனெ மெத்து'.

விட்டல என்பது கிருஷ்ணனுக்கு அனுபாவிகள் வைத்த பெயர். மகாராஷ்டிரத்தில் இவன் அன்புடன் விட்டோ, விட்டோபா; கன்னட தாசர் இவனே விட்டலன். சம்ஸ்கிருதம் அறிந்தவர்களுக்கு இவன் வேங்கட.

வித் என்றால் ஞானம். ஞானத்தின் இருப்பிடமே இதயக் கோயில். அதுவே வித்ஸ்தல - விட்டல.

அங்கு நிலைத்திருக்கும் பகவந்தனே உண்மையான விட்டலன். இது அனுபாவத்தின் நிலையில் புலப்படுபவன் என்று அர்த்தம்.

இரவில் நாம் தூங்குகிறோம். இதயகோஷத்தில், ஞான நாமக பகவந்தனின் கட்டுப்பாட்டில், ப்ராக்ஞ நாமக பகவந்தன் நமக்கு தூக்கத்தைக் கொடுக்கிறான். அவன் அங்கிருந்து எழுந்து வந்து, நம் கண்ணில், அஞ்ஞாசக்ரத்தில், விஷ்வ நாமகனாக நின்று, கண்களைத் திறந்தால் நமக்கு விழிப்பு. இரவில் தூக்கத்தில் ப்ராக்ஞ ரூபத்தினால் நம்மை அருளிய பகவந்தனே, பகலில் ஜாக்ர நிலையில் விஷ்வனாக கண்ணில் அமர்ந்து, நம்மை நல்ல பொருட்களை நோக்கி நடத்தி அருளட்டும் என்னும் தினந்தோறும் சொல்லக்கூடிய பிரார்த்தனை ரூபமாகவும் இந்த பத்யத்தில் பொருள் வந்திருக்கிறது. மொத்தத்தில், இது இருட்டிலிருந்து வெளிச்சத்தை நோக்கி நம்மை அழைத்துச் செல்லும் பிரார்த்தனை ஆகும்.

அஸதோ மா ஸத் கமய தமஸோ மா ஜ்யோதிர் கமய
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய

இங்கு இதயத்தில் இருக்கும் விட்டலனே ப்ராக்ஞ. கண்களில் இருக்கும் விட்டலனே அரவிந்த லோசனன். இவ்வாறு இது தினந்தோறும் சொல்லக்கூடிய பிரார்த்தனை ஆகும். அபரோக்ஷ அனுபவத்தின், கடைசியான சூர்யோதயத்தின் பிரார்த்தனையும் இதுவே. உடன், இந்த வாழ்க்கையின் நிலையற்ற தன்மையையும் குறித்தான ஒரு எச்சரிக்கையாக இருக்கிறது. ஆகையால், காலம் கடந்துவிடும் முன்னர் பகவந்தனின் தரிசனத்தைப் பற்றிய ஒரு கவலையும், இந்த கடைசி பத்தியில் வந்திருக்கிறது.

அரவிந்தலோசனனே, கோளி கூகிது கேளு
புரந்தர விட்டலனே பௌகாயிது

காலபுருஷனின் கோழி கூவுகிறது. அனைத்து ஜீவர்களும் அந்தப்பக்கம் போயே ஆகவேண்டும். ஆகையால், நீ சீக்கிரமாக

எழுந்து வரவேண்டும். இந்த தேகம் விழுந்துவிடும் முன்னர் உன்னைப் பற்றிய அறிவின் வெளிச்சம் ஆகவேண்டும். அதற்காகவே, பக்தனுக்கு சுப்ரபாதத்தைப் பற்றி அவ்வளவு கவலை. ஆனால், புரந்தரதாசருக்கு அந்த பயமே இல்லை. கோழி கூவும் முன்னரே அவருக்கு விடிந்துவிட்டது. அந்த மகிழ்ச்சியில் அவர் பாடியது:

ஏளய்யா பௌகாயிது
ஏளு லட்சுமிரமணா ஏளு நாராயண
ஏளு ஸ்ரீகிரியொடெயா வெங்கடேஷ

இவ்வாறு ஆத்யாத்மத்தின் அனேக நிலைகளில் தன்னை காட்டிக்கொள்ளும்; யார் எந்தெந்த நிலையில் நின்று பார்த்தாலும் அவர்களை அவருடைய மட்டத்திலேயே அனுபவத்தைக் கொடுக்கக்கூடிய; இதயத்தை தொடக்கூடிய; ஆத்மஸாக்ஷியைத் தட்டி எழுப்பும் இந்த சுப்ரபாதத்தின் பாடல், புரந்தரதாசருடைய அனுபாவ கீதைகளின் வரிசையில் ஒரு விலைமதிப்பற்ற மாணிக்கம் ஆகும்.

புரந்தரதாசரின் பாடல்களை வியாஸதீர்த்தர் ‘கன்னடத்தின் உபநிஷத்கள்’ என்று ஏன் அழைத்தார் என்று இதனை கவனித்தவர்களுக்கு புரியலாம். அனுபாவத்தின் ஆழம் மட்டும் புரந்தரதாசருடையது. பாட வைத்தது புரந்தர விட்டலன். தாசர், என்னவென்று நினைத்து இந்தப் பாடல்களைப் பாடினாரோ, அந்த அளவிற்கே அர்த்தம் இருக்க வேண்டும் என்றும் இல்லை. அனுபாவத்தின் ரீதியே அவ்வாறுதான். யாருடைய அனுபாவத்திற்கு எந்த பாவம் தோன்றுகிறதோ, அது அவருடைய பாவமே ஆகும்; ஏனெனில், இந்த பாடலே ஒரு சிறந்த தரிசனம். ஆகையாலேயே, இது உபநிஷத்.

அடுத்து வரும் புரந்தரதாசரின் பாடல்களை கவனித்தாலும், இந்த பாவத்தின், அனுபாவத்தின் பின்னணி இருக்க வேண்டும் என்பதற்காகவே, இந்த முதல் பாடலுக்கு இவ்வளவு விளக்கமாக பாஷ்யம் எழுதவேண்டியதாயிற்று. அடுத்து வரும் பத்யங்களுக்கும் இவ்வாறு விளக்குவது சாத்தியம் இல்லை.

இத்தகைய ஆத்யாத்மத்தின் பின்னணியையே அனைத்து பாடல்களிலும் பொருத்திப் பார்க்க வேண்டியது. தேவைப்பட்டால், அங்கங்கு விவரங்களைக் கொடுக்கலாம். மற்றது, அவரவர்களின் அத்யயனத்தின் முயற்சியாலேயே புரியலாம். மனனத்தில் ஈடுபாடு இல்லாதவர்களுக்கு, ஆத்யாத்மத்தில் அனுமதி இல்லை. அவர்களுக்கு கோழி கூவினாலும் கேட்பதில்லை. காலை ஆவதும் இல்லை. காலை ஆனாலும், அவர்கள் படுக்கையிலிருந்து எழுந்து, கண் திறப்பதில்லை.

இந்த பத்யத்தில் ஒரு ஸாங்க்ய தரிஷனமும் உண்டு. எண்ணிக்கையின் மூலம் தத்வ தர்ஷன, வேதபுராணங்களிலிருந்து வந்த பரம்பரை இது. இங்கு மொத்தம் மூன்று பத்திகள் இருக்கின்றன. இந்த மூன்றினைக் குறிப்பதாக பல அர்த்தங்கள் உள்ளன.

* மனிதனின் ஸ்வபாவத்தை; இந்த ப்ராக்ருத ப்ரபஞ்சத்தை நியந்த்ரணம் செய்யும் குணங்கள் மூன்று; ஸத்வ, ரஜஸ், தமஸ்.
* வாழ்க்கையின் நிலைகள் மூன்று: ஜாக்ரதெ, ஸ்வப்ன, சுஷுப்தி
* சம்சார நிலைகளும் மூன்று: ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார
* உலகங்கள் மூன்று: பூமி, அந்தரிக்ஷ, ஸ்வர்க்க
* காலங்கள் மூன்று: இறந்த, நிகழ், எதிர்.
* ஒரு நாளில் காலங்களும் மூன்று: ப்ராத:கால, மத்யான்ன, ஸாயங்கால
* ஆராதனை / யக்ஞங்கள் மூன்று: ப்ராத:ஸவன, மாத்யந்தின ஸவன, ஸாயம்ஸவன
* ஆராதனையின் கரணங்களும் மூன்று: காய, வாக்கு, மனஸ்
* இவை அனைத்தையும் நியமிக்கும் பகவந்தனின் ரூபங்களும் மூன்று: அம்ருத, க்ஷேம, அபய (அச்யுத, அனந்த, கோவிந்த). 'த்ரிபாதஸ்யாம்ருதம் திவி'.
* பகவந்தனின் திவ்ய லோகங்களும் மூன்று: ஷ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட
* பகவந்தனை விளக்கும் ஓம்காரத்தின் எழுத்துக்களும் மூன்று: அ,உ,ம
* வ்யாஹ்ருதிகளும் மூன்று: பூ:, புவ:, ஸ்வ:
* வேதங்களும் மூன்று: ரிக், யஜுஸ், ஸாம

* த்ரிவிக்ரமனின் மூன்று அடிகளில் பிரமாண்டமே அடங்கியது.

இந்த மூன்று எண்ணிக்கையில் மொத்த உலக ரகசியமே அடங்கியிருக்கிறது. இது இந்த எண்ணிக்கையின் மூலம் அனுசந்தானம் செய்ய வேண்டிய சாங்க்ய தரிசனத்தின் வழி.

இத்தகைய மூன்றினால் போற்றப்பட்டு, மூன்றில் இருக்கும், மூன்று ரூபங்களைக் கொண்ட பகவந்தன், நமக்கு மூன்றினை (ஞான, பக்தி, வைராக்ய) கொடுக்கட்டும்.

***

## தசாவதாரங்களுக்கு சுப்ரபாதம்

ஏளய்யா பௌகாயிது ||ப

பௌகாயிதேளய்யா பிஸிலு மைதோருதிதெ
ஸுளிவு தோரை நிம்ம ஹாரயிஸி நிந்திஹரு
தளுவ மாடிதிரய்யா ஸ்வாமி திருமலெராய ஸௌமஞ்சதிந்தலேளு ||அப

வேதவனு தரலேளு மந்தரவ ஹொரலேளு
சேதிஸுவ அஸுரரனு தாடெயிம் தரலேளு
காதி ஹிரண்யகன கருள கொரளொளகெ தரிஸேளு காய்து பலிபாகிலதொளு ||

பேதிஸி பூமிய த்ரிபாததிந்தளெயேளு
சேதிஸுத க்ஷத்ரியர கோடலியிம் கடியேளு
ஸாதிஸுத ஷரதியலி ஸேதுவெய கட்டேளு நந்தகோபன உதரதி ||1

புரமூர கெலபேகு அடிவெயனு களிபேகு
துருளரனு கொலபேகு துரகவாஹனனாகு
பரிபரிய கெலஸகள மாடலுத்யோகிஸதெ மரெது நித்ரெய கெய்வரெ |

உரிகையனட்டிதரெ ஹரனோடி பந்திஹனு

கிரிஜெ வரவனு பேடபேகெந்து நிந்திஹளு
ஸுரபாரிஜாதவனு கொண்டு ஸுரராஜ
பந்திருவனேளய்யா ஹரியெ ||2

ஆலதெலெயிந்தேளு மாலகுமி பந்திஹளு
ஹாலுகடலிந்தேளு ஸ்ரீதேவி நிந்திஹளு
கால ஹெடெயிந்தேளு பூதேவி பந்திஹளு ஸாலமஞ்சகளிந்தலி |

க்ஷிதிநாத நீனேளு ஸதிபாமெ பந்திஹளு
மதிவந்த நீனேளு ஜாம்பவதி பந்திஹளு
கதிவந்த நீனேளு துளஸீ பந்திஹளு ஏகாந்த ஸேவெய மாடலு ||3

அம்புருஹதிந்த ஜனிஸித பிரம்ம பந்திஹனு
கம்பீரகாயனத நாரதனு நிந்திஹனு
ரம்பெ மேனகெ மொதலு நர்த்தனகெ ஐதிஹரு ஷம்பராரிபிதனெ ஏளு |

ராஜஸூயவ கொளலு வாயுஸுத பந்திஹனு
தேஜியாடகெ அர்ஜுனனு கரெய பந்திஹனு
ஸாஜ தர்மஜ அக்ர பூஜெமாடுவெனெந்து ஹாஜியனெ பிடிதுகொண்டு ||4

தேவ நின்னங்க்ரியனு பூஜெ மாடுவெவெந்து
காவேரி கிருஷ்ணெ கௌதமி கங்கெ மலபஹரி
ஸாவதானதி யமுனெ துங்கா ஸரஸ்வதி பீமரதி நேத்ராவதி |

துரிதபந்தனவன்னு பரிஹரிஸிதெயொ ஸ்வாமி
துரிததுஷ்கர்மவனு தேவ எந்தரெ ஸுடுவெ
துரிததாபகெ சந்த்ர நீனெனிஸீகொம்டெயோ ஸிரிபுரந்தரவிட்டலனே ||5

இன்னும் விடியல் ஆகவில்லை. பிராம்ஹி முஹூர்த்த சமயம். சந்திரன் மறைந்து, சூரியனின் கிரணங்கள் மெல்ல வானத்தை சிவப்பாக்கிக் கொண்டிருக்கிறது. மொத்த சூழ்நிலையே அற்புதமாக இருக்கிறது. ஆகையால் மனம் கூட அப்படியே. இத்தகைய

உற்சாகமான சமயத்தில் ஸ்வாமியின் முன் நின்ற தாசர் இவ்வாறு பாடினார்:

'ஏளய்யா பௌகாயிது'

இன்னும் காலை ஆகவில்லை. ஆனால் மிக சமீபத்தில் ஆகப்போகிறது. இப்படி மிக அருகில் நடக்கவிருக்கும் செயலை, இறந்தகாலத்தில் சொல்வது சாஸ்திரத்திலேயே இருக்கிறது. இது உலக வழக்கமும் கூட.

ஏஷ்யத்து நிஷ்சிதம் யத் தத் அதீதத்வேன பண்யதே ।

எது நிச்சயமாக அடுத்து நடக்கவிருக்கிறதோ, அதனை நடந்துவிட்டதைப் போலவே சொல்கிறார்கள்.

பெண் பார்த்தாயிற்று. நிச்சய தாம்பூலம் ஆயிற்று. திருமண நாளும் குறித்தாயிற்று. அப்போது மணப்பையனைப் பார்த்து உறவினர் கேட்கிறார்கள். 'என்னய்யா, திருமணம் ஆனதைப் போலவேதான். அடுத்து என்ன செய்யப்போகிறாய்?'.

கர்ப்பிணிக்கு ஒன்பது மாதங்கள் ஆயிற்று. அப்போது அவளின் கணவரின் உறவினர்கள் கேட்கிறார்கள். 'நீ அப்பா ஆகிவிட்டாய்'. அவளையும் கேலி செய்கிறார்கள் 'நீ அம்மா ஆகிவிட்டாய்'.

இவையெல்லாம் அடுத்து நடக்கவிருக்கும் செயல்களின் நம்பிக்கையில் சொல்லப்படும் வார்த்தைகள். இங்கும் அப்படியே. வானில் சிவப்பு வரும்போது, சூரியன் வரப்போது நிச்சயமே. அதற்காகவே, அந்த வெளிச்சத்தில் நின்ற தாசர், சூரியோதயத்தின் முன்னர் பகவந்தனை எழுப்புவதற்காக பாடுகிறார். 'ஏளய்யா பௌகாயிது'. இதன் பொருள்: இன்னும் சிறிது நேரத்தில் காலை ஆகிவிடும். அதற்குள் எழுந்துவிடு.

அரண்மனையில் ராஜ மகாராஜர்களை, சேவகர்கள், அந்தப்புரத்தின் வாயிலில் நின்று, ராஜனின் குண கானங்களைப் பாடி எழுப்புகின்றனர். தாசர், பகவந்தனின் பக்தனாக, உலகின்

ஆதிராஜனை பாடிப் புகழ்ந்து எழுப்புகிறார். கர்ப்பகுடியின் வாயிலில் நின்று. 'ஏளய்யா பௌகாயிது'.

ராமாயணத்தின் காலத்திலும் இத்தகைய சம்பவம் ஒன்று நடந்தது. அரண்மனையின் அந்தப்புரத்திலிருந்து ஸ்ரீராமசந்திரன், விஸ்வாமித்திரருடன் காட்டில் ஒரு குடிசைக்குச் சென்றான். அங்கு படுப்பதற்கு தக்க படுக்கை இல்லை. எழுப்புவதற்கும் சேவகர்கள் இல்லை. புல் படுக்கையில், கிருஷ்ணாஜினத்தின் மேல் படுத்திருந்த ராமசந்திரனை, இந்த காட்டின் சூழ்நிலையில் யார் எழுப்ப வேண்டும்? முனி விஷ்வாமித்ரரே அந்த செயலை செய்கிறார்.

கௌஸல்யா சுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா பிரவர்த்ததே |
உத்திஷ்ட நரஷார்த்தூல கர்தவ்யம் தெய்வமான்ஹிகம் ||
(ராமா. பால. 23.2)

கௌசல்யையின் செல்ல மணியே, ஹே ராமனே, காலை ஆயிற்று. எழுந்திரு, அனைவரில் சிறந்தவனே, ஆன்ஹிகத்திற்கு நேரம் ஆயிற்று.

தன்னுடன் காட்டிற்கு வந்த பகவந்தனை விஷ்வாமித்ரர் எழுப்புவதைப் போல, பக்தர்களுக்காக மலைக்கு இறங்கி வந்த பகவந்தனை தாசர் எழுப்புகிறார். 'ஏளய்யா பௌகாயிது'.

மகாராஜன், காலையில் எழுந்து, அந்தபுரத்திலிருந்து வெளியே வருகிறான். தன்னை பார்ப்பதற்காக வந்திருக்கும் மக்களை வந்து சந்திக்கிறான். அவர்களுடைய யோக க்ஷேமங்களை விசாரிக்கிறான். அவர்களுடைய பிரச்னைகளுக்கு தீர்வு அளிக்கிறான். இதுவே தலைவனின் கடமை அல்லவா? என் தலைவனான நீயும் எழுந்திரு. எழுந்து, உன்னை சந்திப்பதற்காக வெளி வாயிலில் வந்து காத்திருக்கும் மக்களுக்கு தரிசனம் அளித்து, கருணை காட்டு - என்று அடுத்த சரணத்தில் பிரார்த்தனை செய்கிறார்.

பௌகாயிதேளய்யா பிஸிலு மைதோருதிதெ
ஸுளிவு தோரை நிம்ம ஹாரயிஸி நிந்திஹரு

தளுவ மாடிதிரய்யா ஸ்வாமி திருமலெராய ஸெளெமஞ்சதிந்தலேளு ||அப

இன்னும் தாமதம் செய்தால், வெயில் தலைக்கு ஏறிவிடும். அதற்கு முன் நீ ஸ்னானம் செய்யவேண்டும். நீ எழுந்து வரவேண்டும். எண்ணிக்கையற்ற பேர், உன் தரிசனத்திற்காக, பல நாட்களாக விரும்பி, ஏதேதோ திக்கு திசைகளிலிருந்து, பல நாடு, தேசங்களிலிருந்து, பல்லாயிரம் மைல்கள் தூரம் நடந்து வந்திருக்கின்றனர். வந்து உன் தரிசனத்திற்காக நின்றிருக்கின்றனர். ஆகையால் 'ஸுளிவு தோரை'. அந்தபுரத்திலிருந்து வருவது சிறிது கஷ்டம் ஆனாலும் பரவாயில்லை; வரும் குறிப்பினையாவது எங்களுக்கு கொடு'. மகாராஜா எழுந்துவிட்டார். இப்போது வந்துவிடுவார் என்னும் செய்தி எங்கள் காதில் விழுந்தாலும் போதும். நீ வரும்வரை நாங்கள் காத்திருப்பதற்கு தயார். ஆனால், வரும் செய்தியையே கொடுக்காமல், எங்களை காத்திருக்க வைக்காதே. வருவதாக நம்பிக்கை கொடுத்தாலும் போதும். நாங்கள் எவ்வளவு காலம் ஆனாலும் காத்திருக்க தயார். இந்த வாக்கின் பின்னணியில் இருக்கும் ஆத்யாத்மிக த்வனி இவ்வாறு;

நாங்கள் காத்திருக்கத் தயார் என்றால், நீயும் எங்களை காக்க வைக்காதே. 'பார்க்க வேண்டுமெனில் வெளியே காத்துக் கிடக்கட்டும்' என்று கெட்ட அரசர்களைப் போல நீயும் இருக்காதே. உன்னைக் காணும் எம் விருப்பம், நம் விரகத்தின் ஆழம் எவ்வளவு என்பதை உனக்கு தனியாக சொல்லவும் வேண்டுமோ?

ஆகையால், தடை (தாமதம்) செய்யாதே, ஸ்வாமி, திருமலைராயா. எந்த காரணமும் இன்றி, சோர்விலோ, நம் மேல் உள்ள கோபத்திலோ தாமதம் செய்துவிடாதே. நாங்கள் காத்திருக்கத் தயார் என்னும் வாக்கு, எந்த காலத்திற்கும் உண்மை. ஆனால், நீ காக்க வைக்க தயார் ஆகக்கூடாது. நீ திருமலைராய - திருமலையில் அரசன். திருமலையில் நிலைத்த உலக நாயகன். பக்தவத்ஸலனான அரசர்களைப் போல, உன்னை நம்பி வந்த மக்களுக்கு தரிசன பாக்கியத்தைக் கொடு.

ஹே நம் ஸ்வாமியே. ஹே உலக நாயகனே, அதற்காக 'சௌமஞ்சதிந்தேளு'. படுக்கையில், ஊஞ்சலில், ஹம்ஸ தூளிகா மஞ்சத்தில் உன் சுக சயனத்திற்கு ஒரு முடிவு போட்டு, உன் பக்தர்களுக்காக அந்த மஞ்சத்திலிருந்து எழு. எழுந்து வா. வந்து நமக்கு உன் தரிசன பாக்கியத்தைக் கொடு.

பகவந்தனை எழுப்பி, அவனுக்கு சில கடமைகளை சொல்பவரைப் போல, தாசர் அடுத்த பத்திகளில் அவனுடைய அவதாரங்களின், முக்கியமாக தசாவதாரங்களின், லீலா விபூதிகளை கொண்டாடுகிறார்.

வேதவனு தரலேளு மந்தரவ ஹொரலேளு
சேதிஸுவ அஸுரரனு தாடெயிம் தரலேளு
காதி ஹிரண்யகன கருள கொரளொளகெ தரிஸேளு காய்து பலிபாகிலதொளு ||

பேதிஸி பூமிய த்ரிபாததிந்தளெயேளு
சேதிஸுத க்ஷத்ரியர கோடலியிம் கடியேளு
ஸாதிஸுத ஷரதியலி ஸேதுவெய கட்டேளு நந்தகோபன உதரதி ||1

புரமூர கெலபேகு அடிவெயனு களிபேகு
துருளரனு கொலபேகு துரகவாஹனனாகு
பரிபரிய கெலஸகள மாடலுத்யோகிஸதெ மரெது நித்ரெய கெய்வரெ |

ஸ்ருஷ்டியின் துவக்கத்தில், மது கைடபர்கள் வேத வித்யையை கவர்ந்து சென்றனர். அவர்களைக் கொன்று வேதத்தைக் கொண்டு வருவதற்கு, நீ ஹயக்ரீவன் ஆகவேண்டும். அடுத்து, மறுபடி ஹயக்ரீவ என்னும் அசுரனே வேதத்தை கவர்ந்தான். அவனைக் கொன்று மறுபடி வேதத்தைக் கொண்டு வருவதற்கு நீ மத்ஸ்யாவதாரி ஆகவேண்டும். அதற்காக எழு.

யுகயுகங்களில் நடந்த பகவந்தனின் லீலைகளை தாசர் தன் மானசபூஜையின் தியான யோகத்தில், நிகழ் காலத்தில் நடப்பதைப் போல, தன் கண் எதிரே காண்கிறார். ஆகவே 'அஸுரரு வேதத்தை

கவர்ந்திருக்கின்றனர்; ஹயக்ரீவனாக வா; மத்ஸ்யனாக வா' என்கிறார். அடுத்த அவதாரத்தின் வாக்குகளும் இப்படியே இருக்கின்றன. இதுவே பக்தியின் நிலை.

இவை புற காட்சிகள் ஆகும். இதுவே அகத்தில், தினமும் பகவந்தன் பல்வேறு அவதாரங்களை எடுத்து வரவேண்டியிருக்கிறது. சாதகர்கள் தினமும் அவனை அப்படி வரவேண்டும் என்று பிரார்த்தனை செய்ய வேண்டியிருக்கிறது.

வேத விக்ஞானத்தை கவர்ந்த அசுர சக்தியை கொன்று திரும்ப பக்தனின் அகத்திற்கு, ஆத்யாத்மத்தின் அறிவை கொடுப்பதற்கு, நீ நம் இதய சமுத்திரத்தில் மீனாக வரவேண்டும். வந்து, மறைந்த வேதத்தை கொண்டு வந்து கொடுக்க வேண்டும். அதற்காக எழு.

தேவதைகள் அமிர்தத்திற்காக பாற்கடலை கடைந்தனர். மந்தர மலையையே மத்தாக ஆக்கிக் கொண்டனர். ஆனால், அந்த மத்தும் கடலில் ஆழ்ந்தது. அதனை தாங்கிப் பிடிப்பதற்கு நீ கூர்மரூபியாக வரவேண்டும். அதற்காக வா.

என் இதய சமுத்திரத்தில் தத்வஞானத்தின் அமிர்தம் வெளிவருவதற்கு, மனதில் மந்தரத்திலிருந்து கடைய வேண்டும். அது, தமஸ்ஸின் ஆழத்திற்கு சென்று விடாமல் தூக்கிப் பிடிப்பதற்கு, நீ கூர்மனாக வரவேண்டும். அதற்காக எழு.

நீ கூர்மனாக வந்தாய். மந்தர மலையை தாங்கிப் பிடித்தாய். கடைதல் நடந்தது. அமிர்தமும் கிடைத்தது. ஆனால், இதனால் என் வேலை இன்னும் முடியவில்லை. தேவதைகளுடன், அசுரர்களும் அந்த அமிர்தத்தை வேண்டி, வரிசையாக அமர்ந்திருக்கின்றனர். நீ இப்போது மோகினி ஆகவேண்டும். தன்வந்திரி ஆகவேண்டும். அசுரர்களை மயக்கி, அமிர்தத்தின் வரிசையிலிருந்து அவர்களை எழுப்ப வேண்டும். இப்படி அவர்களை விலக்கி, தேவதைகளுக்கு அமிர்தம் கொடுக்க வேண்டும். ஏமாறிய அசுரர்கள் தேவதைகள் மேல் பாய்கிறார்கள். அப்போது நீ அவர்களை, உன் சக்கரத்தினால் கொன்று, தேவதைகளை காக்க வேண்டும். அதற்காக எழு.

பாரம் தாங்காமல் பூமி தண்ணீரில் அழுத்தினால், அதனை மேலே தூக்கிப் பிடிப்பதற்கு நீ உதவ, அப்போது அதனை தடுக்க வந்த பிரம்ம புத்திரனான ஆதிஹிரண்யாக்ஷனை கொல்வதற்கு நீ வராஹாவதாரி ஆகவேண்டும். இவ்வாறு நீ ஷ்வேத வராகனாகி, பூமியை திரும்ப மேலே கொண்டு வந்து வைத்தாய். அந்த பூமியை மறுபடி திதி புத்திரனான ஹிரண்யாக்ஷன் கவர்ந்து சென்றான். அவனையும் உன் லீலையினால் கொன்று, மற்றொரு முறை அந்த பூமியை உன் தாடையால் மேலே தூக்கி வருவதற்கு நீ யக்ஞ வராகன் ஆக வேண்டும். அதற்காக எழு. (இரு முறை ஆன வராக அவதாரத்தில் இரு ஹிரண்யாக்ஷர்களைக் கொன்ற பிரமேயத்தை குறிப்பதற்காகவே 'சேதிஸுத அசுரரனு' என்று பன்மையில் குறிப்பிட்டிருக்கிறார்).

சாதனையின் பூமியான இந்த தேகமே துர்குணங்களால் அழிந்தபோது, அதில் சாத்விகத்தின் வெளிச்சத்தை பாய்ச்சுவதற்கு நீ ஷ்வேதவராஹனாக வரவேண்டும். இந்த வாழ்க்கையையே உன் ஆராதனையின் யக்ஞமயமாக ஆக்குவதற்கு, நீ யக்ஞ வராகனாக வரவேண்டும். சாதனைக்கு தடையாக வரும் அனைத்து அசுர சக்திகளையும் அழிக்கும் வேலை உன்னாலேயே ஆகவேண்டும். இவ்வாறு வரும் அனைத்து தடைகளையும் அழித்தவாறு, உன் தாடையினால், சூரிய சந்திரர்களால் சாதகனின் வாழ்க்கையை ஸ்வர்க்கத்தை அடையும் புண்ணிய வழியில் கொண்டு வந்து நிறுத்த வேண்டும். அதற்காக எழு.

தாடையின் குறிப்பினை பாகவதம் நமக்கு சொல்கிறது.
தம்ஷ்ட்ரார்யமேந்தொடுகணா த்விஜானி (பாக 2.1.31)

சூர்ய சந்திரரே அவனின் கோரை தாடைகள். நட்சத்திரங்களே பற்கள்.

ப்ரவ்ருத்தி கர்மங்களின் புண்ணியங்களின் பயனாக பித்ருயாணத்தில் ஜீவன் சேரவேண்டிய இலக்கு சந்திரலோகம். அங்கிருந்து மறுபடி பூமிக்கு பயணம். நிவ்ருத்தி கர்மத்தின் புண்ணியங்களின் பலனாக தேவமானத்தில் சேரவேண்டிய இடம்

சூர்யலோகம். அங்கிருந்து மறுபடி பூமிக்கு வரும் வாய்ப்பு இல்லை.

பிறகு, பிரகலாதனின் அழைப்பிற்கு நரசிம்மனாக கம்பத்தை உடைத்து வரவேண்டும். ஹிரண்யகசிபுவுடன் போர் புரிய வேண்டும். அவனுடைய குடலை மாலையாக அணியவேண்டும். அதற்காக எழுந்திரு.

நமக்குள் தங்கத்தின் மோகம் என்னும் ஹிரண்யகசிபு அமர்ந்திருக்கிறான். என்னை விட்டால் வேறு யார்? என்னும் கர்வம் என்னும் ஹிரண்யகசிபு அமர்ந்திருக்கிறான். இந்த பணத்தின் மேல் உள்ள ஆசை, இந்த கர்வம் என்பது மனிதன் கழுத்தை அப்படியே இறுக்கியிருக்கிறது. இந்த மோகத்தின் கயிற்றினையே நீ அறுத்து எடுக்க வேண்டும். நம்முடைய இந்த உலக மோகம் பகவந்தனின் மேல் உள்ள மோகமாக மாறி, உன் கழுத்தில் மாலையாக ஆகவேண்டும். அதனை தரித்து, நீ நரசிம்மனாக வரவேண்டும். அதற்காக எழுந்திரு.

பலியின் வீட்டிற்கு வாமனனாக போகவேண்டும். போய், மூன்று காலடி தானம் பெறவேண்டும். அவன் ‘அஸ்து’ என, த்ரிவிக்ரமனாக வளர்ந்து, பிரம்மாண்டத்தின் கூறையை உடைத்து, இந்த பூமியை மூன்று அடிகளால் அளக்க வேண்டும். அளந்து, பலியின் அனைத்தையும் நீ கவர வேண்டும். ஆனாலும், பலியின் பக்திக்கு மெச்சி அவனுடைய வீட்டு வாயிலை காக்க வேண்டும். வாயிலைக் காத்து, அதன் மூலம் பலியைக் காத்து, என நீ செய்ய வேண்டிய செயல்கள் ஒன்றா, இரண்டா.. ஆயிரம் உண்டு. அதற்காக எழுந்திரு.

சாதகனும் ஒரு பலி. ‘நாயமாத்மா பலஹீனேன லப்ய:’. ஆத்மபலத்தினால் அவன் பலி. அவனின் மனதின் கதவினை எப்போதும் நீ காக்கவேண்டும். காத்து, அவனுடைய கர்வ பூமியை உடைத்து, உபாசனையில் சிறிய மூர்த்தியாகி ஆகி, விஷ்வரூபனாக வளர்ந்து, அவன் சரணடைந்து தலை வணங்கியபோது, அந்தர்யாமி ஆகி நின்று, உன் மூன்று ரூபங்களை, மூன்று காலடிகளை பக்தனின் முன் அளந்து காட்ட வேண்டும். அதற்காகவே நீ

வாமனனாக வரவேண்டும். த்ரிவிக்ரமனாக வளர வேண்டும். அதற்காக எழுந்திரு.

முன்னர் துஷ்ட க்ஷத்ரியர்களை கொன்று அழிக்க வேண்டும். இவ்வாறு 21 முறை, அவர்களை கோடலியால் அடிப்பதற்கு நீ பரசுராமனாக வரவேண்டும். அதற்காக எழுந்திரு.

நமக்குள் நிறைந்திருக்கும் செல்வத்தின் கர்வம் என்னும், தௌர்ஜன்ய என்னும் துஷ்ட க்ஷத்ரியர்களை, உன் அறிவின் கோடலியால் அடித்துக் கொல்வதற்கு, நீயே பரசுராமனாக வரவேண்டும். அதற்காக எழுந்திரு.

சீதையை கவர்ந்த ராவணனை அப்படியே விடக்கூடாது. இலங்கைக்குச் சென்று அவனை வெல்ல வேண்டும். அதற்கு, கடலில் சேது கட்ட வேண்டும். உன் ராமாவதாரத்தின் லீலை நடக்க வேண்டும். அதற்காக எழுந்திரு.

வாழ்க்கைக் கடலில் நாம் வழி தெரியாமல் மூழ்காதவாறு, சேதுவைக் கட்டி, நீயே கரையைக் கடக்க வைக்க வேண்டும். 'ஏஷ ஸேதுர்வித்ருதி:' 'ய: ஸேதுரீஜானானாம்' என்னும் ஸ்ருதி வசனத்தை உண்மையாக்க வேண்டும். அதற்கென்றே நீ ராமனாக வரவேண்டும். அதற்காக எழுந்திரு.

உதயாசலத்திலிருந்து சூர்ய சந்திரர்கள் மேலே எழுந்து வருவதைப் போல, நீ நந்தகோபனின் உதரத்திலிருந்து கிருஷ்ணனாக மேலே எழுந்து வரவேண்டும். அதற்காக எழுந்திரு.

ஆனால், உண்மையில், கிருஷ்ணாவதாரம் நந்தகோபனின் உதரத்திலிருந்து ஆனது அல்ல. வசுதேவன உதரதி என்று சொல்வது சகஜமாக இருக்கிறது. ஆனால், அது உண்மையா? பிறப்பு, இறப்புகள் இல்லாத பகவந்த வசுதேவனின் உதரத்திலிருந்து வரமுடியுமா? அதற்காகவே, தாசர் ஒரு வித வினோதத்தை செய்கிறார் - நந்தகோபன உதரதி ஏளு.

ஸ்ரீகிருஷ்ணன், நந்தகோபனனின் உதரத்திலிருந்து அல்ல - வசுதேவனின் உதரத்திலிருந்தும் பிறக்கவில்லை. வெறும்

பேச்சுக்காக அப்படி சொல்கிறோம் என்றால், 'என் மகன்' என்னும் அபிமானம், அந்த இருவருக்கும் உள்ளது. இந்த ரகசியத்தை சொல்வதற்காகவே தாசர் இவ்வாறு சொல்கிறார். 'நந்தகோபன உதரதி ஏளு'.

கம்சனை ஏமாற்றுவதற்காக நந்தகோபனின் உதரத்திலிருந்து வந்ததைப் போல நாடகம் ஆட வேண்டும். அதற்காக எழுந்திரு.

ஆத்யாத்மத்தில் இதற்கு இன்னொரு சுவாரசியமான அர்த்தம் உண்டு. ஆனந்தரூபனான பகவந்தனை அயோக்யர்களிடமிருந்து காக்கும் வேத வாங்மயமே உண்மையான நந்தகோபன். கம்சனிடமிருந்து கிருஷ்ணனை காப்பாற்றி மறைத்து வைத்த என்று நந்தகோபன் உண்மையான நந்தகோபன் ஆனான். இத்தகைய வேத வாங்மயத்தின் உள்ளிருந்து வெளிப்பட்டு, ஆனந்த தீர்த்தருக்கு தரிசனம் அளித்த கிருஷ்ணனாக வெளியே வரவேண்டும் - குஹாஸந்தம் மதாயதி - அதற்காக எழுந்திரு.

திரிபுராசுரர்களை மனம் மயக்கும் வாக்குகளால் வழி தவறச் செய்து வெல்ல வேண்டும். ஆடைகளை துறந்து திகம்பரமாக நிற்க வேண்டும். புத்தாவதாரம் எடுக்க வேண்டும். அதற்காக எழுந்திரு.

சாதகனும் மூன்று குணங்களின் புரங்களை வெல்ல வேண்டும். ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி என்னும் த்ரிபுரங்களை வென்று துரீயனை காண வேண்டும். அவன் தன் அஞ்ஞானத்தின் ஆவரணத்தை விலக்க வேண்டும். கடைசியில், லிங்க தேகத்தின் சட்டையை விலக்க வேண்டும். அவனை இத்தகைய உறைகளை, 'கோபிகா ஸ்த்ரீயர்'களைப் போல ஆடைகளைத் திருடி, ஞானி ஆக்குவதற்கு நீ புத்தனாக வரவேண்டும். அதற்காக எழுந்திரு.

கலியின் ஆவேசம் அதிகம் ஆனபோது, நீ பூமியில் நிரம்பிய கெட்ட விஷயங்களை கொல்ல வேண்டும். அதற்காக, குதுரையில் கல்கியாக வரவேண்டும். ஆகவே, உடனே எழுந்திரு. குதிரை வாகனன் ஆகு.

எனக்குள்ளும் கலியின் பரிவாரம். துரியோதனனின் மொத்தமான 11 அக்ஷோஹிணி சைன்யமே எனக்குள் அடங்கி கிடக்கின்றன.

அவற்றை நீ கல்கியாக வந்து கொல்ல வேண்டும். அதற்காக எழுந்திரு. ஞானத்தை வழங்கிட, துர்மதத்தின் குதிரை ஏறி வா.

இவ்வாறு ஆயிரக்கணக்கான வேலைகள் உனக்காக காத்திருக்கின்றன. உள்ளும் வெளியேயும் உன்னாலேயே இந்த வேலைகள் நடக்க வேண்டும். என் தலைவன் இவற்றையெல்லாம் நடத்திக் கொடுக்கிறான் என்று உன் மக்கள் காத்திருக்கின்றனர். இவ்வாறு பல்வேறு விதமான செயல்களை, கண்டிப்பாக நீ செய்ய வேண்டும். உன்னையே நம்பியிருக்கும் உன் மக்களையே நீ மறந்து அந்த செயல்களை செய்யாமல் நின்றால், அவருடைய மேம்பாட்டிற்கான கடமைகளை துறந்து மறந்து இப்படி தூங்கிக் கிடப்பது உனக்கு சரியா? மக்களை விரும்பும் அரசர்கள் என்றாவது இவ்வாறு தங்களின் கடமைகளை மறந்து தூக்கத்தில் ஆழ்ந்திருப்பார்களா? நீயே சொல்.

இவ்வாறு இந்த பத்திகளில், தாசர், சுப்ரபாதத்தைப் பாடும் நோக்கத்தில் முக்கியமாக பகவந்தனின் 10 அவதாரங்களின் மற்றும் அதற்கு சம்பந்தப்பட்ட மற்ற அவதாரங்களின் சரித்திரம், மகிமைகளையும் குறிப்பால் உணர்த்தி, பகவந்த - பக்தர்களின் நடுவின் ரசமயமான வினோத சம்பாஷணையின் ஒரு உதாரணத்தை நமக்குக் கொடுக்கிறார். (10 அவதாரங்கள், ஹயக்ரீவ, ஆதிவராஹ, மோஹினி, தன்வந்திரி, த்ரிவிக்ரம - இவ்வாறு 15 ரூபங்களின் குறிப்புகள் இங்கு வந்துள்ளன).

பகவந்தன் செய்ய வேண்டிய செயல்களின் பட்டியலைக் கொடுத்தாயிற்று. அவனைக் காண வேண்டிய பக்தர்களும் எண்ணிக்கையும் அதிகம். அவர்கள் அனைவரும் வெளியே காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்கும் தரிசனம் அளிக்க வேண்டும். அதற்காக நீ எழுந்திருக்க வேண்டும் என்கிறது அடுத்த பத்தி.

உரிகையனட்டிதரெ ஹரனோடி பந்திஹனு
கிரிஜெ வரவனு பேடபேகெந்து நிந்திஹளு
ஸுரபாரிஜாதவனு கொண்டு ஸுரராஜ
பந்திருவனேளய்யா ஹரியெ ||2

நீ யார் தலையில் கை வைக்கிறாயோ, அவர்கள் பஸ்மம் ஆகட்டும் - என்று சிவனிடமிருந்து பஸ்மாசுரன் வரம் பெற்றான். அவன் தான் பெற்ற வரத்தின் தன்மையை சோதனை செய்வதற்கு, ஹரனின் தலையிலே கை வைக்க வந்தான். ஹரன் தப்பித்தாலும் விடாமல், துரத்திக் கொண்டு சென்றான். இவ்வாறு செய்தால் சிவன் என்ன செய்ய வேண்டும்? பக்தவத்ஸலனான உன்னிடம் அவன் ஓடி வந்திருக்கிறான். தன் கஷ்டங்களை போக்கிக் கொள்வதற்கு. ஆகையால், நீ மறுபடி பஸ்மாசுரனின் மோகினி ஆகவேண்டும். அதற்காக நீ உடனே எழுந்திருக்க வேண்டும்.

உடன் கிரிஜையும் வந்திருக்கிறாள். தன் கணவனை இந்த துஷ்ட அசுரனிடமிருந்து காக்கும் வரத்தினைப் பெற வேண்டும் என்று காத்துக் கொண்டிருக்கிறாள்.

தேவலோகத்தின் பூ - பாரிஜாத. அதற்கே அது ‘ஸுரபாரிஜாத’ எனப்படுகிறது. சத்யபாமைக்காக ஸ்ரீகிருஷ்ணன் அதனை பூமிக்கு தரும் முன்னர், அது மனித உலகத்தில் கிடைக்காத பொருளாக இருந்தது. ஆனால், சத்யபாமை விரும்பினாள் என்று ‘நீயே அதனை பறித்து வரவேண்டியிருந்ததா? ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், நானே கொண்டு வந்து கொடுத்திருப்பேனே என்கிறான் சுரராஜனான இந்திரன். அவன், அந்த சுரபாரிஜாதத்தை பிடித்துக் கொண்டு வந்திருக்கிறான். அவனை கருணையுடன் பார்த்து அருள்வாயாக. எழுந்திரு ஹரியே.

அனைவரின் அனைத்து பிரச்னைகளின் முடிவும் உன்னாலேயே. ஆகையாலேயே நீ ஹரி அல்லவா?

இந்த பத்யத்தில் வந்திருக்கும் மூன்று தேவதைகளும், அந்தரங்கத்தில் உள்ள மூன்று அபிமானிகள். இந்திரன் மனதின் தேவதை; கிரிஜை புத்தியின் தேவதை; ருத்ர அஹங்காரத்தின் தேவதை. நம் மனோ, புத்தி, அஹங்காரங்கள் அனைத்தும் உன் அதீனமே. மனதின் தேவதையான இந்திரன், தன்னுடைய செயலுக்காக வருந்தி உன்னிடம் வந்திருக்கிறான். புத்தியின் தேவதையான பார்வதி, உன்னிடம் நல்ல புத்திவாத (அறிவுரை) கேட்க வந்திருக்கிறாள். அஹங்காரத்தின் தேவதையான ஹரன்,

அஹங்காரத்தை போக்கிக் கொண்டு, ஆத்ம ரக்ஷணைக்காக உன்னிடம் ஓடி வந்திருக்கிறான்.

ஆலதெலெயிந்தேளு மாலகுமி பந்திஹளு
ஹாலுகடலிந்தேளு ஸ்ரீதேவி நிந்திஹளு
கால ஹெடெயிந்தேளு பூதேவி பந்திஹளு ஸாலமஞ்சகளிந்தலி |

நீ எங்கு படுத்திருக்கிறாயோ தெரியவில்லை; உனக்கு படுக்கும் இடங்கள் பல உண்டு என்கிறார்கள். 'வடஸ்ய பத்ரஸ்ய புடே ஷயானம்' (ஆல இலையின் மேல் படுத்திருப்பவன்) என்கிறார்கள். பாற்கடலில் படுத்திருப்பவன் என்பவர்களும் உண்டு. கால சர்ப்பத்தின் மேல் படுத்திருப்பவன் என்பவர்களும் உண்டு. அது ஆல இலையோ, பாற்கடலோ, கால சர்ப்பமோ எங்கு படுத்திருந்தாலும் சரியே; எழுந்து வா.

உன்னை எழுப்பவேண்டும் என்பதற்காகவே உன் அரசி, தன் படுக்கையிலிருந்து எழுந்து வந்திருக்கிறாள். மகாலட்சுமி, உன்னை ஒரு ரூபத்தால் வணங்கி, அதில் திருப்தி அடையாமல் ஸ்ரீதேவியாகி, பூதேவியாகி, இந்த ரூபங்களாலும் உன்னை வணங்க வேண்டும் என்று, காத்துக் கொண்டிருக்கிறாள். எழுந்து வா, என்று சுப்ரபாதத்தை பாடுகிறாள்.

ஸ்ருதி கீதையில் இவ்வாறு வந்திருக்கிறது.

ஸ்வஸ்ருஷ்டமிதமாபீய ஷயானம் ஸஹ ஷக்திபி: |
ததந்தே போதயான்சக்ரு: தல்லிங்கை: ஷ்ருதய: பரம் ||

யதா ஷயானம் ஸம்ராஜன் வந்தினஸ்தத் பராக்ரமை: |
ப்ரத்யூஷேsப்யேத்ய ஸுஷ்லோகை: போதயந்த்யனு ஜீவின: ||
(பாக 10.9.94.12.13)

(தான் படைத்த இந்த உலகினை தானே விழுங்கி, ஸ்ரீ பூ துர்க்கையருடன் யோக நித்திரையில் படுத்திருக்கும் பகவந்தனை பிரளயத்தின் இருட்டு மறைந்து, ஸ்ருஷ்டியின் துவக்கத்தில், லட்சுமிதேவியுடையதே ஆன ரூபாந்தரங்களான ஸ்ருதி தேவியர்கள், அவனின் சரித்திரங்களை பாடி எழுப்புகின்றனர்.

இரவில் படுத்த அரசனை காலையில் எழுப்ப வேண்டும் என்று அவனுடைய குண கானங்களை பாடி சுப்ரபாதம் பாடும் சேவகர்களைப் போலவே, ஸ்ருதி தேவியான ரமையும் இந்த லீலா-சுப்ரபாதத்தை பாடியிருக்கிறாள்).

மூல ப்ரக்ருதியின் தத்வத்தின் இரு முகங்களே - ஸ்ரீ மற்றும் பூ. பகவந்தனின் இடது வலதுகளில் நின்று சேவை செய்வதற்கு அவளே ஸ்ரீ பூ என்று இரு ரூபங்களை தாங்கியிருக்கிறாள். கிருஷ்ணாவதாரத்தில் ருக்மிணி சத்யபாமை என்று இரு ரூபங்கள் உள்ளதைப் போல;

ஸ்ரீர்பூமிரிதி ரூபாப்யாம் ப்ரக்ருதிர் விஷ்ணுனா ஸஹ |
தேதே ஸ்ருதிஸ்வரூபேணா ஸ்ரௌதி பிரம்மலயே ஹரிம் ||
(பாக. தாத்பர்ய)

(ப்ரக்ருதி தேவதையான மகாலட்சுமி, ஸ்ரீதேவி, பூதேவி ரூபங்களால் நாராயணனுடன் மகாபிரளயத்தில் படுத்திருக்கிறாள். அவளே ஸ்ருதிரூபத்தினால் பகவந்தனை துதிக்கிறாள்).

பத்யத்தின் முதல் சரணத்தில் வந்த 'மாலகுமி' என்னும் பதத்தினாலேயே துர்கா ரூபத்தை சிந்தித்தால், த்ரிகுணமானினியான தாய் ரமாவின் மூன்று ரூபங்களையும் சிந்தித்ததாயிற்று. இந்த லட்சுமியே வேதாபிமானிகளான ரூபங்களால் உன்னை சுப்ரபாதம் பாடி எழுப்புகிறாள் - வணங்குகிறாள். ஆகையால், எழுந்திரு ஹரியே. பிரளயத்தின் தமஸ்ஸினை பரிகரிப்பாயாக. ஸ்ருஷ்டியின் வெளிச்சத்தை பரப்புவாயாக.

பகவத்கீதை இவ்வாறு சொல்கிறது: 'சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி' (வேதங்கள் என்றால் இந்த விஷ்வத்ருமத்தின் இலைகள்). அதைப் போலவே, இந்த விஷ்வ என்னும் ஆலமரத்தின் வேதங்கள் என்னும் இலையில் வாச்யனாக படுத்திருக்கும் ஹரியே; எழுந்திரு. பக்தர்களின் அகத்தில் தோன்று; வேதத்தின் ஹ்ருதயத்தை அவர்களுக்காக எடுத்துக் கொடு.

அங்கிருந்து, பக்தர்களின் இதயத்தின் பாற்கடலிலிருந்து எழுந்து வா. கடைசியாக, சுஷும்னா என்னும், நாகத்தின் தலையைப் போல இருக்கும், சஹஸ்ராரத்திலிருந்து எழுந்து வா.

கால ஹெடெயிந்தேளு என்றால், தாசரின் மனதில் - காலிய நாகனின் தலையில் நாட்டியமாடிய க்ருஷ்ணாவதார லீலை தோன்றியது. அந்த பின்னணியில் மூலரூபத்தின் வர்ணனையுடனேயே கிருஷ்ணாவதாரியான ஸ்ரீனிவாஸனை வணங்குகிறார்.

க்ஷிதிநாத நீனேளு ஸதிபாமெ பந்திஹளு
மதிவந்த நீனேளு ஜாம்பவதி பந்திஹளு
கதிவந்த நீனேளு துளஸீ பந்திஹளு ஏகாந்த ஸேவெய மாடலு ||3

கிருஷ்ணாவதாரத்தின் பட்டத்து அரசியர் இருவர்; ருக்மிணி ஸத்யபாமா என்று. பத்யத்தில் வந்திருக்கும் பாமை என்றால், ஸத்யபாமை. ஸத்யபாமையை, ஸத்யா என்றும், பாமை என்றும் பாதிப் பெயரில், சாஸ்திரகாரர்கள் சொல்கின்றனர். 'ஸத்யபாமெ பந்திஹளு' என்னும் பாடம் சொல்வது வழக்கம். பத்யத்தின் நடைக்கு அது சரியாக பொருந்துவதில்லை.

ருக்மிணியின் அந்தப்புரத்தில் கிருஷ்ணனை எழுப்புவதற்கு, சத்யபாமை வந்திருக்கிறாள் - என்கிறார் தாசர். 'க்ஷிதிநாத, நீனேளு, ஸதிபாமெ பந்திஹளு'.

க்ஷிதி என்றால் பூமி. மூல ரூபத்தில் க்ஷிதி நாதன். ரமாவின் இரண்டாம் ரூபமான பூதேவியின் தலைவன். ஸ்ரீதேவி, ருக்மிணி ஆனால், பூதேவி இங்கு சத்யபாமை ஆகிறாள். அங்கு க்ஷிதி நாதனான நீ, இங்கு சத்யபாமாபதி ஆகிறாய். உன்னை எழுப்புவதற்காக அந்த சத்யபாமை வந்திருக்கிறாள். இனியாவது எழுந்திரு.

பாமெ என்றால் அழகான பெண் என்னும் சாதாரண அர்த்தமும் உள்ளது. ஆகையால், இந்த பதத்தினாலேயே, தந்த்ர நியாயத்தினால், தாசர், ருக்மிணியையும்கூட குறிப்பிடுவதைப் போல உள்ளது.

நீ எந்த சிம்மாசனத்தில் ஏறாவிட்டாலும், ஜராசந்தன் முதலான அனைத்து அரசர்களும் உன்னிடம் தோற்றுப் போவார்கள். நீ ருக்மிணியின் கை பிடித்தாய். ஆகையால், உண்மையான க்ஷிதிநாத - உலக நாயகன் நீயே. உன் கருணாபலத்தினால் மற்ற அனைத்து அரசர்கள் க்ஷிதி நாதர் ஆயினர். அத்தகைய உன்னை எழுப்புவதற்கு ருக்மிணி வந்திருக்கிறாள். 'க்ஷிதிநாத நீனேளு'.

கிருஷ்ணனின் ஷண் மஹிஷியர்கள் - நீலா, பத்ரா, மித்ரவிந்தா, காளிந்தி, லட்சணா மற்றும் ஜாம்பவதி. இந்த ஆறு மஹிஷியர்களிலும் ஜாம்பவதியில் லட்சுமி விசேஷ அம்சம் இருக்கிறது. ஆகையால் அவருடைய பெயரை, தாசர் தனியாக குறிப்பிட்டுள்ளார். ஜாம்பவதியுடன், அடுத்த ஐந்து பேரையும் சேர்த்தே இங்கு சிந்திக்க வேண்டும்.

கிருஷ்ணனின் அஷ்ட மஹிஷியர்களின் விவாக கிரமம் இவ்வாறு இருக்கிறது.

* ருக்மிணி : குண்டினிபுரத்தின் ராஜகுமாரி. பீஷ்மகனின் மகள். ருக்மியின் தங்கை. ரமாவின் ஸ்ரீரூபம்.
* ஸத்யபாமா : ஸத்ராஜித் யாதவனின் மகள். ரமாவின் பூரூபம்
* ஜாம்பவதி : ஜாம்பவந்தனின் மகள்
* காளிந்தி : ஸூர்யபுத்ரி. யமுனையின் தங்கை. நதீ தேவதை
* நீலா : நக்னஜித் யாதவனின் மகள்
* மித்ரவிந்தா : கிருஷ்ணனின் அத்தை; வசுதேவனின் சகோதரி ராஜாதி தேவியின் மகள். அவந்தி தேசத்தின் ராஜகுமாரி. விந்தானுவிந்தரின் தங்கை.
* பத்ரா - வசுதேவனின் சகோதரி ப்ருதுகீர்த்தியின் மகள். கேகய தேசத்தின் ராஜகுமாரி. பஞ்சகேகயரின் தங்கை.
* லட்சணா - மத்ரதேசத்தின் ராஜகுமாரி

முக்ய மஹிஷியரான ருக்மிணி சத்யபாமையர் வந்து, எழுப்புகிறார்கள். க்ஷிதி நாதனே, எழுந்திரு. ஷண்மஹிஷியர் ஜாம்பவதியை முன் வைத்துக்கொண்டு வந்து அழைக்கின்றனர். யாருக்கும் சோர்வு ஆகாதவாறு, அனைத்து மனைவியரையும் அனுசரித்து, சரஸ தாம்பத்தியத்தை நடத்திவரும், 'ஷோடஷ ஸ்த்ரி

சஹஸ்ரேஷ’ என்றும், அனாதி பிரம்மசாரி என்றும் அழைக்கப்படும் மதிவந்தனே, நீ எழுந்திரு.

இங்கு சொல்லப்பட்டிருக்கும், மதிவந்த, கதிவந்த ஆகிய சொற்கள் - மதி உள்ளவன்; கதி உள்ளவன் எனும் அர்த்தத்தில் சொல்லப்படவில்லை. ‘மதி கொடுப்பவன்’, ‘கதி கொடுப்பவன்’ என்னும் அர்த்தத்தில் வந்திருக்கிறது. முதலில் நமக்கு நற்புத்தியைக் கொடுப்பவன். அதன் மூலம் ஸத்கதியைக் கொடுப்பவன். ஆகையால், மதிவந்தனே, எழுந்திரு. நமக்கு நல்மதியைக் கொடு. கதிவந்தனே எழுந்திரு; நமக்கு ஸத்கதியின் வழியில் நடத்து.

பிராணதேவரின் ஹனுமத் அவதாரத்தை மதி என்று அழைக்கின்றனர் (ஹனுமான் மதிஷப்தித:). ஹனுமந்தனுக்கு தரிசனமளித்த ராமசந்திரனே மதிவந்த. என்றபிறகு, ஹனுமந்தனுக்கு தரிசனம் அளித்து மதிவந்த என்று அழைக்கப்பட்ட நீ, சீதையை தேடும் விஷயத்தில், ஹனுமந்தனுடன் சேர்ந்து, தேடிய ஜாம்பவந்தனுக்கும் தரிசனம் அளித்து, அவனுடைய மகள் ஜாம்பவதியை திருமணம் செய்தது சரிதானே? ஆகையால், மதிவந்த, நீ எழுந்திரு. ஜாம்பவதி வந்திருக்கிறாள்.

துளசியைப் பற்றி புராணங்களில் பல்வேறு குறிப்புகள் உள்ளன. பாற்கடலைக் கடையும் சமயத்தில், நாராயணனின் கண்களிலிருந்து, அமிர்த கலசத்தில் உதித்த ஆனந்தக்கண்ணீரே, துளசிதேவி ஆனாள். லட்சுமியுடன் துளசியை அவன் திருமணம் செய்துகொண்டான். இவளே வ்ருந்தாதேவி ஆனாள். இவளே ராதை. அதற்காகவே, துளசியின் கட்டெ வ்ருந்தாவன ஆயிற்று. ராதா கிருஷ்ணரின் சஞ்சார பூமியும் வ்ருந்தாவனமே ஆயிற்று.

துளஸி ஸ்துதி இவ்வாறு இருக்கிறது:

துளஸி ஶ்ரீஸகி ஷுபே பாபஹாரிணி புண்யதே ।
நமஸ்தே நாரதனுதே நாராயணமன: ப்ரியே ।।

(ஹே துளஸியே, நீ ஶ்ரீரமாவின் தோழி. ஷுபங்கரி. நம் பாவங்களை போக்கி புண்ணியத்தின் புத்தியைக் கொடுப்பவள்.

நாரதனால் வணங்கப்படுபவள். நாராயணனுக்கு பிடித்தவள். உனக்கு நமஸ்காரம்)

அவளில் விசேஷமாக ரமாதேவியின் சன்னிதானம் இருக்கிறது என்கிறது இன்னொரு வசனம்.

துளஸ்யாம் து ரமாதேவி
ஸா விஷ்ணோர் நித்யதா ப்ரியா ||

(துளஸியில் ரமாதேவி நிலைத்திருக்கிறாள். அதற்காகவே எப்போதும் துளஸி என்றால், விஷ்ணுவிற்கு மிகவும் பிரியம்).

இவ்வாறு துளஸி ரூபவிசேஷங்களால் பகவந்தனின் பத்னியும் ஆகிறாள். மற்ற பூக்களைவிட அதிகமாக பகவந்தனுக்கு ப்ரியமானவளும் ஆகிறாள். ஒரு தள துளஸியினால் அர்ச்சித்தால் போதும். மகிழ்ந்து சத்கதியைக் கொடுக்கிறான். அதற்காக தாசர் கூறினார். 'கதிவந்த நீனேளு ஸ்ரீதுளஸி பந்திஹளு; ஏகாந்தனே, நின்ன ஏகாந்த ஸேவெகெ'.

ஏகாந்தத்தில் சேவை. ஏகாந்தமான சேவை. எந்த பலனையும் எதிர்பார்க்காமல் வெறும் பகவத் ப்ரீதிக்காகவே செய்யும் சேவை - ஏகாந்த சேவை. எதையாவது விரும்பி அதற்காக பகவந்தனை ஆராதனை செய்தால், அது வியாபாரம் எனப்படுகிறது. பகவந்தன் எதற்காகவும் இல்லை. அனைத்தும் பகவந்தனுக்காக இருக்கிறது என்று சிந்தித்து செய்யும் சேவை ஏகாந்தசேவை.

கை பிடித்த மஹிஷியர்களை விட்டு, ஏன் துளசி ஏகாந்தசேவைக்கு வந்தாள்? துளஸியின் சிறப்பினை விளக்குவதற்காக இந்த வாக்கு வந்திருக்கிறது. இந்த சிறப்பினைப் பற்றி பாகவதம் இவ்வாறு சொல்கிறது.

மந்தாரகுந்த குருவோத்பல சம்பகோர்ண
புன்னாக நாக பகுளாம்புஜ பாரிஜாதா: |
கந்தோ஽ச்சிதே துளஸிகாபரணேன தஸ்யா:
யஸ்மின்ஸ்தப: ஸுமனஸோ பஹுமாவயந்தி || (பாக 3.16.19)

(முக்தர்கள் வைகுண்டத்தில் பகவந்தனுக்கு பூ, துளஸிகளை அர்ப்பிக்கின்றனர். அப்போது பகவந்தன் மற்ற பூக்களைவிட அதிகமாக துளஸியை கையில் எடுத்துக்கொண்டு அதன் நறுமணத்தை நுகர்கிறான்.. மந்தார, மொக்கு மல்லிகை, நைதிலை, ஸம்பிகை, ஊர்ண, ஸுரஹொன்னெ, நாககேஸர, பகுள, தாமரை, பாரிஜாத ஆகிய பூக்கள் (பூவின் அபிமானி தேவதைகள்) தம் அருகில் இருந்த துளஸியின் இந்த தபோ பாக்கியத்தை மிகவும் கௌரவத்துடன் பார்த்துக் கொண்டிருந்தன).

யம் வை விபூதிருபயோத்யனு வேலமன்யை:
அர்த்தார்த்திபி: ஸ்வஷிரஸா த்ருதபாதரேணு: |
தன்யார்ப்பிதாங்க்ரி துளஸீ நவதாமதாம்னோ
லோகம் மதுவ்ரதபதேரிவ காமயானா || (பாக 3.17.20)

(புருஷார்த்தங்களை விரும்பும் பிரம்மாதிகள், யாருடைய பாதங்களை தம் தலையில் தாங்கியிருக்கிறாரோ, அத்தகைய லட்சுமிதேவி, தான் பகவந்தனின் இதயத்தில் நிலைக்கும் சிறந்த பாக்கியத்தை பெற்றிருந்தாலும்கூட, க்ருதக்ருத்யரான முக்தர்களால் அர்ப்பிக்கப்பட்ட துளஸீவன மாலிகையை அணிந்த நாராயணன், அந்த துளஸிக்கு கொடுத்த ஸ்னான-மானத்தையே, தானும் அடைய வேண்டும் என்று சொல்வதைப் போல, தினமும் அற்புதமான சேவையை செய்கிறாள்).

துளஸியின் ரூபத்தில், லட்சுமியே பகவந்தனை பூஜிக்கிறாள். ஆனாலும், துளஸியைப் பற்றி லட்சுமிக்கும் பொறாமை கொள்ளும் அளவிற்கு, துளசி பகவந்தனுக்கு மிகவும் இஷ்டம் என்று இந்த ஸ்லோகம் அலங்காரமாக துளஸியின் மகிமையை வர்ணிக்கிறது. ஆகையாலேயே தாசர் சொல்கிறார். மற்றவர்களுக்கு கிடைக்காத உன் ஏகாந்த சேவையை செய்வதற்கு துளஸி வந்திருக்கிறாள். எழுந்திரு.

மனைவியர் அனைவரும் வந்திருக்கின்றனர். அது மட்டுமல்ல. உடன் தந்தையை பார்ப்பதற்கு மகனும் வந்திருக்கிறான். பாடகர்கள், நர்த்தகர்கள் சேவை செய்வதற்கு காத்திருக்கின்றனர் என்கிறது அடுத்த ஸ்லோகம்:

அம்புருஹதிந்த ஜனிஸித பிரம்ம பந்திஹனு
கம்பீரகாயனத நாரதனு நிந்திஹனு
ரம்பெ மேனகெ மொதலு நர்த்தனகெ ஐதிஹரு
ஷம்பராரிபிதனெ ஏளு ||

பிரளய ஜலத்தில் மலர்ந்த தாமரை - இந்த பிரம்மாண்டம். இத்தகைய பிரம்மாண்ட ரூபமான உன் நாபி கமலத்திலிருந்து பிறந்த பிரம்மன், தன் தந்தையைக் காண வேண்டும் என்று வந்திருக்கிறான். தன் மானஸபுத்திர நாரதனுடன்.

உன் பேரனான நாரதன் என்ன குறைச்சலா? சங்கீத பிதாமகன் தானே அவன்? அவனுடைய சங்கீதம் அனைத்தும் உன்னுடைய குண கானங்களைப் பற்றியதே ஆகும். சுயநலத்திற்காக, தற்காலிக விஷயங்களுக்காக, யார்யாரையோ புகழ்வதற்காக அந்த சங்கீதம் என்றும் பயன்படுவது இல்லை. அத்தகைய காம்பீர்யனான நாரதனும் உன்னைக் காணவேண்டும் என்று காத்துக் கொண்டிருக்கிறான்.

நாரதனின் பாடலுக்கு ஏற்றதைப் போல, தாமும் கம்பீரமாக நடனமாடி, உன்னை காண வேண்டும் என்று ரம்பை, மேனகை முதலான அப்ஸரஸ் அனைவரும் வந்திருக்கின்றனர். இந்த அப்ஸரஸ்களில் முக்கியமானவர்களான ரம்பை, மேனகை ஆகியோர் உனக்கு நாட்டிய சேவை செலுத்த வேண்டும் என்று வந்திருக்கின்றனர்.

ஷம்பர என்னும் மாயாவி அசுரனைக் கொன்ற காமனின் தந்தையே, கிருஷ்ணாவதாரத்தில் ருக்மிணியில் அவனையே பிரத்யும்ன என்னும் மகனாகப் பெற்ற தந்தையே. சாட்சாத் மன்மத மன்மதனே, த்ரிலோக சுந்தரனே, உன்னை பார்க்க வந்த இந்த பக்தனின் சம்சாரத்தின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக நீ உன் துயிலிலிருந்து எழு. நீ காமனின் தந்தையானாலும், பக்திகாமன் (பக்தியைக் கொடுப்பவன்) அல்லவா? பக்தி நிரம்பிய உள்ளத்துடன் உன்னிடம் வந்த பக்தர்களை காப்பதற்கு எழுந்து வா.

இத்தகைய ராஜரிஷிகளும் ராஜராஜேஷ்வரனான உன் சேவையை செய்வதற்காக் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்கிறது அடுத்த பத்தி.

ராஜஸூயவ கொளலு வாயுஸுத பந்திஹனு
தேஜியாடகெ அர்ஜுனனு கரெய பந்திஹனு
ஸாஜ தர்மஜ அக்ர பூஜெமாடுவெனெந்து ஹாஜியனெ பிடிதுகொண்டு ||4

ராஜஸோமனை அடைவதற்கு முன்னர், திக்விஜயத்திற்கு செல்வதற்கு உன் அனுமதிக்காக வாயுசுதனான பீமசேனன் வந்திருக்கிறான். ராஜஸோமத்தை அடைவதற்கு, அதற்கு முன்னர் ஜராசந்தனைக் கொல்வதற்கு உன்னுடன் மகதத்திற்கு செல்ல வேண்டும் என்று வாயுசுதன் தயாராக வந்திருக்கிறான். ராஜஸோமத்தின் எஜமானன், அண்ணனான தர்மராஜனோ, வாயுசுதனான பீமசேனனே முக்கியாதிகாரி ஆகையால், ராஜசூயத்தின் பலன் பெறுவதற்கு வாயுசுதன் வந்திருக்கிறான்.

குருக்ஷேத்திரத்தின் போரில் தன் ரதத்தின் சாரதியாகி நீ குதிரை (தேஜி) ஓட்டும் லீலையைப் பார்ப்பதற்கு, இந்திரசுதனான அர்ஜுனன் அழைத்து வந்திருக்கிறான்.

தர்மபுத்திரனான தர்மராஜன், தன் தர்ம நிஷ்டையினால், காரணப் பெயராக தர்மராஜன் எனப்படும் யுதிஷ்டிரன், ராஜசூயத்தின் கடைசியில் உனக்கு அக்ரபூஜை செய்கிறேன் என்று வந்திருக்கிறான் - அர்க்யத்திற்காக, பாத்யத்திற்காக நீர் நிரம்பிய பாத்திரத்தை பிடித்துக்கொண்டு வந்திருக்கிறான். எழுந்து வா.

தாசரின் மானஸ சிந்தனையில் இந்த அனைத்து சம்பவங்களும் குறிப்பால் உணர்த்தப்படுகின்றன. அவை அனைத்தும் நிகழ் காலத்தில் நடப்பதைப் போல கண் முன்னே வருகின்றன. ஆகவே அவர் இந்த அனைத்து புராண விஷயங்கள் அனைத்தையும் சொல்லி, விடியலில் எழுந்து செய்ய வேண்டிய செயல்களை பட்டியல் போட்டு பகவந்தனை எழுப்புகிறார்.

இங்கு சம்பவங்களை கோர்வையாக, வரிசையாக சொல்லவில்லை. அப்படி சொல்லியிருந்தால், முதலில் ராஜஸூயா, பிறகு அக்ரபூஜை, கடைசியில், குதிரை லீலை வந்திருக்க வேண்டும். தியான காலத்தில், அகத்தில் தோன்றிய சம்பவங்களின் கிரமமே முக்கியமே தவிர, இந்த இதிகாச கிரமம் தாசருக்கு முக்கியமில்லை.

இதில் இன்னொரு விஷயமும் சேர்ந்திருக்கிறது. சம்பவங்களின் வரிசையைவிட, தேவதா தாரதம்யத்தின் முறையே தாசருக்கு முக்கியம் என்பது தெரிகிறது. அதையே இங்கு வெளிப்படுத்தியிருக்கிறார். இங்கு சொல்லப்பட்டிருக்கும் தாரதம்ய கிரமம் இவ்வாறு இருக்கிறது. மூன்றாம் வகுப்பில் வரும் பிராணஸ்வரூபனான பீமசேனன் முதலில்; எட்டாம் வகுப்பில் வரும் இந்திர ஸ்வரூபனான அர்ஜுனன் அடுத்து; 12ம் வகுப்பில் யமதர்மன் வருகிறான். ஆகையால், தர்மராஜன் கடைசியில் வருகிறார்.

இவ்வாறு தேவதைகள் மூலரூபத்தினால் மட்டும் அல்ல. அவதார ரூபங்களாலும் உன்னை ஆராதிப்பதற்கு காத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால், உடனே எழுந்திரு.

மொத்த ப்ரக்ருதியே உன் பூஜைக்காக காத்திருக்கிறது. சூரிய ஒளியினால் மெய் கழுவிக்கொண்டு, மலர்ந்த செடி கொடிகளில், பூ பழங்களைத் தாங்கி மகிழ்ச்சியுடன் உன் சேவைக்காக நின்றிருக்கிறது. இந்த பூமியில் பாயும் புண்ணிய நதிகள்கூட உன் கால் கழுவவேண்டும் என்றே, மலை முகடுகளிலிருந்து பாய்கின்றன என்கிறது அடுத்த பத்தி.

தேவ நின்னங்க்ரியனு பூஜெ மாடுவெவெந்து
காவேரி கிருஷ்ணெ கௌதமி கங்கெ மலபஹரி
ஸாவதானதி யமுனெ துங்கா ஸரஸ்வதி பீமரதி நேத்ராவதி |

இந்த நதிகளின் அபிமானி தேவியர்கள் தம் ஜலம் அனைத்தும் விஷ்ணு பாதோதகமாகட்டும் என்னும் ஆசையினால், தம் ஜலத்தினாலேயே உன் கால்களைக் கழுவி தம் பூஜையை செய்ய வேண்டும் என்று வந்திருக்கிறார்கள். ஹே தேவனே, உன்

கருணைப் பார்வையை அவர்கள் மேலும் வீசு. எழு, எழுந்திரு. காலை வேளை ஆயிற்று.

தேவ என்னும் சொல்லுக்கு சிறப்பான அர்த்தம் உண்டு. உலக நடவடிக்கைகள் அனைத்தையும் நடத்துபவன் தேவன் (திவ்ய வ்யவஹாரே). இருளில் மூழ்கிய உலகிற்கு, அமைதியான தூக்கத்தை கொடுப்பவனும் தேவனே (திவு ஸ்வப்னே).

நீ முழித்திருந்து உலகிற்கெல்லாம் தூக்கத்தைக் கொடுப்பவன். நீயே தூங்குவதென்றால் எப்படி? நீ தூங்கிவிட்டால், உலகின் நடவடிக்கைகளை செய்வது எப்படி? ஆகையால், உன் இந்த லீலா நித்திரையை நிறுத்து.

காவேரி நதி, கர்னாடகத்தில் பிறந்து, தெற்கு நோக்கி பாய்ந்து, கிழக்கு பார்த்து திரும்பி, ஸ்ரீரங்கனுக்கு பிரதட்சிணை செய்து, தமிழ் நாட்டில் கடலில் சேரும் புண்ணிய நதி. காவேரியே விரஜா நதி. ஸ்ரீரங்க க்ஷேத்திரமே வைகுண்ட என்று இந்தப் பாடல் சொல்கிறது.

காவேரி விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்

இந்த புண்ணிய நதியின் சிறப்பு மகாபாரதத்திலும் வந்திருக்கிறது.

ததோ மச்சேத காவேரீம் வ்ருதாமப்ஸரஸாம் கணை: |
தத்ர ஸ்னாத்வா நரோ ராஜன் கோஸஹஸ்ர பலம் லபேத் ||
(பார. வன. 85.22)

(காவேரி நதியின் தீரம் என்றால் அப்ஸரஸ்கள் சஞ்சரிக்கும் இடம். இத்தகைய புண்ணிய நதியில் ஒரு முறை ஸ்னானம் செய்தால் போதும். 1,000 கோதானத்தின் பலன் கிடைக்கிறது).

நாம் தினமும் ஸ்னான காலத்தில் ஜப - பூஜா காலத்தில் ஸன்னிதியை பிரார்த்திக்கும் ஸப்த புண்ணிய தீர்த்தங்களில் காவேரியும் ஒன்று.

கங்கே ச யமுனே சைவ கோதாவரி சரஸ்வதி |
நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு ||

இந்த காவேரியை தென் கங்கை என்றும் சொல்கிறார்கள். துலா ஸங்க்ரமணத்தன்று, தலைக்காவேரியில் இருக்கும் காவேரியின் உத்கம குண்டத்தில் கங்கை வருகிறாள் என்னும் நம்பிக்கை இருக்கிறது.

காவேரி பாரதத்தின் தென் கரையில் கிழக்கு மேற்காக பரந்து பாயும் புண்ணிய நதி. அங்கிருந்து வடக்கில் கிருஷ்ணை. இன்னும் வடக்கில் கௌதமி (கோதாவரி). இவை மூன்றும் தென் இந்தியாவின் மேற்கு கரையிலிருந்து கிழக்கு நோக்கி பாயும், பாரதத்தை குறுக்கே இரண்டாகப் பிரிக்கும் நதிகள். காவேரி கன்னட நிலத்தில் பாய்ந்து, தமிழ் நாட்டில் கடலில் சேர்ந்தால்; கிருஷ்ண மற்றும் கோதாவரி, மகாராஷ்டிரத்தில் ஸஹ்யாத்ரியில் பிறந்து, ஆந்திராவில் கடலில் சேர்கின்றன. கோதாவரி, மகாராஷ்டிரத்திலிருந்து நேரடியாக ஆந்திராவில் நுழைந்தால்; கிருஷ்ணா நடுவில் கன்னட நிலத்திலும் பாய்ந்து, பின் ஆந்திராவிற்கு வருகிறாள்.

கிருஷ்ணா நதியையே புராணங்களில் கிருஷ்ணவேணி என்றிருக்கிறார்கள். கிருஷ்ணவேணா என்றும், வெறும் வேணா என்றும் குறிப்புகள் உண்டு.

கோதாவரி கிருஷ்ணவேணி
காவேரி ச ஸரித்வரா (பார. ஸபா. 9.20)

(கோதாவரி, கிருஷ்ணவேணி மற்றும் காவேரி இவை தென்னிந்தியாவின் சிறந்த நதிகள்.)

ததோ வேணீம் ஸமாஸாத்ய த்ரிராத்ரோபோஷிதோ யதி ।
மயூரஹம்ஸ ஸம்யுக்தம் விமானம் லபதே நர: ||
(பார.வன. 85.32)

(மூன்று நாட்கள் உபவாசம் இருந்து, ஷுத்தனாகி, கிருஷ்ணவேணியில் ஸ்னானம் செய்தவன், மயில், ஹம்ஸங்களால் கூடிய அழகான விமானத்தில் ஸ்வர்க்கத்திற்கு செல்கிறான்.)

கௌதமரின் ஆசிரமத்தின் அருகில் இறங்கி வந்த கங்கையே, கோதாவரி. கௌதமருக்காக தெற்கில் வந்திருக்கிறாள் என்பதாலேயே இவள், கௌதமி. அவருடைய ஆசிரமத்தில் இறந்த பசுவை பிழைக்க வைப்பதற்காக வந்ததால் இவள் கோதாவரி (கோத+வாரி). கோதாவரியின் இன்னொரு பெயர் - வ்ருத்தகங்கை.

வட இந்தியாவின் கங்கையே, தென்னிந்தியாவின் கோதாவரி என்னும் வாக்கு புராணத்தில் இருக்கிறது.

விந்த்யஸ்ய தக்ஷிணே கங்கா கௌதமி ஸா நிகத்யதே |
உத்தரே ஸா஽பி விந்த்யஸ்ய பாகீரத்யபிதீயதே ||

(விந்தியத்தில் தெற்கு பகுதியில் பாயும் கங்கையை கௌதமி (கோதாவரி) என்று அழைக்கின்றனர். விந்தியத்தின் வடக்கில் பாயும் கங்கையை பாகீரதி என்று அழைக்கின்றனர்).

தென்னிந்தியாவின் பெருமையை வர்ணிக்கும்போது மகாபாரதம் - 'கோதாவரி பாயும் புண்ணிய பூமி தக்ஷிணதேஷ' என்று அபிமானத்துடன் குறிப்பிடுகிறது.

யஸ்யாமாக்யாயதே புண்யா திஷி கோதாவரி நதி |
பஹ்வாராமா பஹுஜலா தாபஸாசரிதா ஷிவா ||
(பார. வன. 88.2)

(கோதாவரியின் புண்ணிய ஜலம் பாயும் நிலம் என்பது தெற்கின் பெருமை. நிரம்பி வழியும் தண்ணீர், சுற்றிலும் பூந்தோட்டங்கள்; காடு மேடுகள். இந்த சுபமான கோதாவரியை ரிஷிகளும் வந்து வணங்குகின்றனர்.)

ததோ கோதாவரீம் ப்ராப்ய நித்யம் ஸித்த நிஷேவிதாம் |
கவாமய நமாப்னோதி வாஸுகீர் லோகமுத்தமம் ||
(பார. வன. 85.34)

(எப்போதும் ஸித்த புருஷர்கள் வணங்கும் கோதாவரியில் நீந்துபவன் 'கவாமயன' என்னும் யக்ஞத்தின் பலனைப் பெறுகிறான். நாக லோகத்தில் சுகபோகங்களை அனுபவிக்கிறான்.)

கிருஷ்ணையுடன் கடலில் சேரும் இன்னும் இரு நதிகள், துங்கபத்ரா மற்றும் பீமரதி (அல்லது பீம). துங்கையே பத்ராவுடன் சேர்ந்தபோது துங்கபத்ரா ஆகிறது. அவள் கர்னாடகத்தில், சஹ்யாத்ரியில் தோன்றி, கிழக்கு நோக்கி பாய்ந்து, கன்னடத்திலிருந்து ஆந்திரத்தில் நுழைந்து, அங்கு கிருஷ்ணாவுடன் சேர்ந்து, கடலில் சென்று சேர்கிறாள். பீமரதி மகாராஷ்டிரத்தில் தோன்றி, கன்னட நாட்டில் பாய்ந்து கடைசியில் கிருஷ்ணாவுடன் சேர்ந்து, கடலில் சென்று சேர்கிறாள். கிருஷ்ணை நடுவில் பாய்ந்தால், அதன் தெற்கு கிளையாக துங்கபத்ரா; வடக்கு கிளையாக பீமரதி.

பாகவதத்தில் இந்த நதி கிளைகளின் குறிப்புகளைக் காணலாம்.

துங்கபத்ரா கிருஷ்ணா பீமரதீ கோதாவரி
(பாக 5.19.18)

(துங்கபத்ரையின் வடக்கில் கிருஷ்ண. கிருஷ்ணாவின் வடக்கில் பீமரதி. பீமரதிக்கும் வடக்கில் கோதாவரி)

மகாபாரதத்தில் கிருஷ்ணவேணியுடன் வரும் துங்கவேணி, இந்த துங்கபத்ரையே இருக்க வேண்டும்.

துங்கவேணீம் மகாநதீம் |
விதிஷாம் கிருஷ்ணவேணீம் ச | (பார. பீஷ்ம. 9.27)

பீமரதியையும் கிருஷ்ணவேணியுடன் பாரதம் இவ்வாறு சொல்கிறது.

வேணி பீமரதி சைவ
நத்யௌ பாஷபயாபஹே || (பார. வன. 88.3)

(கிருஷ்ணவேணி மற்றும் பீமரதி நதிகளில் நீந்தியவர்களுக்கு பாவத்தின் பயம் இல்லை.)

தாசரின் முத்ரிகையின் மூர்த்தியான புரந்தரவிட்டலன், பண்டரிபுரத்தின் இந்த பீமரதி கரையிலேயே இருக்கிறான். இவளுடைய அழகிற்காகவே இவளை பீமெ என்றும் அழைக்கிறார்.

பீமாமோகவதீம் ததா || (பார. பீஷ்ம. 9.22)

இந்த பத்யத்தில் வந்த கர்னாடகத்தின் இன்னொரு நதி, மலபஹி. மலாபஹரி'யே பாடலின் சந்தத்திற்காக மலபஹரி ஆகிறாள். இந்த மலாபஹெ வட கர்னாடகத்தில் தோன்றி, கிழக்கு நோக்கி பாய்ந்து, வழியில் கிருஷ்ணையுடன் சேர்ந்து, பின் கடலில் சேரும் நதி. துங்கபத்ரையைப் போல, மலாபஹெயும் கிருஷ்ணா நதியின் கிளை ஆகும். இந்த நதியை, நதி ஸ்தோத்திரத்தில் மலஹரி என்று அழைத்திருக்கிறார். 'துங்கபத்ரா மலஹரீ வரதா ச குமத்வதீ'.

மலபஹா என்பது கங்கையின் 12 பெயர்களில் ஒன்றும் ஆகிறது. இவையே அந்த 12 பெயர்கள்.

நந்தினி நளினி ஸீதா மாலதீ ச மலாபஹா |
விஷ்ணுபாதாப்ஜ ஸம்பூதா கங்கா த்ரிபத காமினி ||
பாகிரதி போகவதி ஜான்ஹவி த்ரிதஷேஷ்வரி ||

அதற்காகவே தாசர் 'கங்கே மலபஹரி' என்று இது கங்கைக்கும் பொருந்துமாறு பாடலில் பாடியிருக்கிறார். இரு அர்த்தங்களும் இங்கு அற்புதமாக வந்திருக்கின்றன.

நேத்ராவதி நதி - கர்னாடகத்திலேயே தோன்றி, கர்னாடகத்திலேயே கடலில் சேரும் நதி. மேற்கு பக்கத்தில் தோன்றி, மேற்கு நோக்கியே பாய்ந்து, தர்மஸ்தள மஞ்சுனாதனிடம் சேர்ந்து, சுப்ரமண்யத்தின் குமாரதாரையை அடைந்து, மங்களூரில் கடலில் சேரும் துளுநாடின் நதி இது.

ஸ்ரீவாதிராஜர் இந்த நதியை இவ்வாறு கொண்டாடியிருக்கிறார்.

வராஹனயனானந்த தாரா நேத்ராவதீ ஸரித் |

(வராஹரூபி பகவந்தனின் கண்ணிலிருந்து வந்த ஆனந்தகண்ணீரே நேத்ராவதி நதி ஆயிற்று).

இவ்வாறு இந்த ஏழு தென்னிந்திய நதிகளும், ஸஹ்யாத்ரியிலிருந்து தோன்றிய நதிகள். இவற்றில் ஆறு கிழக்கு

நோக்கி பாய்ந்து கடலில் சேர்ந்தால், நேத்ராவதி மட்டும் மேற்கு நோக்கி பாய்ந்து, அங்கு கடலில் சேர்கிறது.

மற்ற மூன்று நதிகள் - கங்கை, யமுனை மற்றும் சரஸ்வதி. இவை இமவந்தனிடமிருந்து இறங்கி வந்த பிரயாகத்தில் சேர்ந்து, பின்னர் வங்காளத்தில் கடலில் சேர்கின்றன. வேத மந்திரத்தின் ரிஷிகள் முதலில் மேற்கோள் காட்டுவது இந்த மூன்று நதிகளையே: இமம் மே கங்கே யமுனே சரஸ்வதி.

கங்கோத்தரியிலிருந்து கங்கை வெள்ளையாக பாய்ந்து வந்தால், யமுனோத்தரியிலிருந்து யமுனை பாய்ந்து வருகிறாள். கங்கையுடைய இன்னொரு கிளையே யமுனை என்றாலும் அது சரியே. இந்த இருவருடன், சரஸ்வதியும் இமாலயத்திலிருந்தே துவங்கி, பாய்ந்து, மறைந்து, அடுத்து த்ரிவேணி சங்கமத்தில் கங்கை, யமுனையருடன் சேர்கிறாள். யமுனையைப் போல, சரஸ்வதியும் கங்கையுடைய ஒரு கிளை என்போரும் உண்டு. கங்கையின் ஏழு கிளைகள் இவை: கங்கை, யமுனா, சரஸ்வதி, ரதஸ்தா, ஸரயு, கோமதி மற்றும் கண்டகி.

கங்கையின் மகிமைகளை புராண கிரந்தங்கள் இவ்வாறாக வர்ணிக்கின்றன.

புனாதி கீர்த்திதா பாபம் த்ருஷ்டாபத்ரம் ப்ரயச்சதி |
அவகாடா ச பீதா ச புனாத்யாஸப்தமம் குலம் || (பார. வன. 85.93)

(கங்கை என்று கூறினாலே பாவங்கள் அனைத்தும் களைந்து போகின்றன. கங்கா ஜலத்தைக் கண்டால் வாழ்க்கை மங்கலமயம் ஆகிறது. கங்கையில் ஸ்னானம் செய்தால், கங்கையின் நீரினைக் குடித்தால், ஏழு தலைமுறைகள் பவித்ரம் ஆகின்றன).

ந கங்கா ஸத்ருஷம் தீர்த்தம் ந தேவ: கேஷவாத் பர: ||

(கங்கைக்கு சமமான தீர்த்தம் இல்லை; நாராயணனுக்கு சமமான தெய்வம் இல்லை).

இந்த கலியுகத்தில், மக்களின் பாவங்களை முழுவதுமாக களைய வல்ல சக்தியைக் கொண்ட நதி என்றால், அது கங்கை மட்டுமே. ‘கலௌ கங்கைவ கேவலம்’ - ஸ்காந்த. காஷி கண்டம். ‘கங்கா கலியுகே ஸ்ம்ருதா’ - பாரதம்.

கங்கையைப் போலவே, யமுனையையும் ரிஷிகள் கொண்டாடியிருக்கின்றனர்.

ஏஷா ஸா யமுனா ராஜன் மஹர்ஷி கணஸேவிதா ।
நானாயக்ஞார்ஜிதா சைவ புண்யா பாபபயாபஹா ।।
(பார. வன. 125.25)

(யமுனையின் பவித்ரத்தில் மனம் மயங்கி, ரிஷிகள் அனைவரும் அந்த நதிக்கரையிலேயே வசிக்கின்றனர். பல ரிஷிகள், க்ஷத்ரியர்கள் இந்த கரையில் இருந்து யக்ஞ யாகங்களை செய்கின்றனர். புண்ணியங்களே யமுனையின் நீராக பாய்கிறது. இங்கு ஸ்னானம் செய்தவர்களுக்கு பாவத்தின் பயம் இல்லை).

வேத காலத்தில், பாரதத்தில் அபாரமான தண்ணீருடன் பாய்ந்திருந்த சரஸ்வதி, படிப்படியாக குறைந்து, இப்போது மணலாக மட்டும் இருக்கிறாள்.

த்ருஷ்யாத்ருஷ்யா ச பவதி தத்ரதத்ர ஸரஸ்வதி ।। (பார. பீஷ். 6.50)

(சரஸ்வதி சில இடங்களில் தென்பட்டும், சில இடங்களில் மறைந்தும் பாய்கிறாள்).

இவ்வாறு தெற்கு, வடக்கில் இருக்கும் நதி தேவதைகள் அனைத்தும் தேவாதிதேவனான உன் பாதங்களைக் கழுவி, பூஜை செய்யவேண்டும் என்னும் விருப்பத்தினால் உன் வருகையை எதிர்பார்த்து காத்திருக்கின்றனர். அதற்காக ஹே தேவனே, எழுந்து வா.

துரிதபந்தனவன்னு பரிஹரிஸிதெயொ ஸ்வாமி
துரிததுஷ்கர்மவனு தேவ எந்தரெ ஸுடுவெ

துரிததாபகெ சந்த்ர நீனெனிஸிகொம்டெயோ
ஸிரிபுரந்தரவிட்டலனே ||5

இது அந்தரங்கத்தின் சுப்ரபாதம் என்பதை தெளிவுபடுத்தும் இந்த கடைசி பத்தியில், தாசர், தமக்கு கிடைத்த இந்த அனுபவத்திற்கு, பகவந்தனை நன்றியுடன் நினைக்கிறார். வந்த பந்தனங்களை பரிகரிப்பாயாக, ஸ்வாமி. நம்மை தமஸ்ஸிடம் இழுத்துச் செல்லும் கஷ்டங்களே, பாப கர்மங்களே நம் வாழ்க்கைக்கு வந்த இருட்டு ஆகும். அந்த இருட்டின் பந்தனமே சம்சாரம். எனக்கோ இது கடந்த காலத்தின் நினைவுகள். முடிந்து போன கதை. ஏனெனில், இருட்டு அறையில் தள்ளிய ஸ்வாமி நீயே. இப்போது நீயே அந்த சிறையிலிருந்து விடுவிக்கவும் வந்திருக்கிறாய். பந்தனத்தில் வைத்த ஸ்வாமியே, அதிலிருந்து விடுவிக்கவும் வருகிறான் என்றால், பின் என்ன பயம்? என் வாழ்க்கையின் இருட்டினை நீ பரிகரிக்கிறாய். விடுதலையின் சுப்ரபாதத்தின் வெளிச்சம் எனக்கு தெரிகிறது.

இந்த பத்தியில் ஒரு கேலியான குரலும் இருக்கிறது. விடுதலைக்காக காத்திருக்கும் பகவந்தனை அன்புடன் கேலி பேசும் ஒரு உரிமையும் இருக்கிறது. நான் உன்னை இரவும் பகலுமாக உன்னை பிரார்த்தனை செய்கிறேன்? இந்த துரித பந்தனத்தின், இருட்டு சிறையிலிருந்து என்னை காப்பாற்று என்று கேட்கிறேன். ஆனால், நீ எனக்கு உதவினாயா?

ஸ்வாமி, ஏன் இப்படி? இனியாவது தாமதம் செய்யாமல், கண் திறந்து பார். என் அபராதங்கள், மலையளவு இருக்கையில் இதிலிருந்து விடுதலை எப்படி சாத்தியம்? என்னும் பயம் எனக்கு இல்லை. ஏனெனில் ‘துரித துஷ்கர்மவனு தேவ எந்தரெ ஸுடுவெ’.தேவ - என்றால், நம்பியவர்களுக்கு சத்கதி கொடுப்பவன். ஹே தேவனே, நீயே எனக்கு கதி என்று சரணடைந்தவர்களின் கஷ்டங்களை / பாவங்களையெலாம், நீ நொடிப்பொழுதில் போக்குகிறாய். என் துஷ்கர்மங்கள், அதிலிருந்து நான் வளர்த்த பாவங்களின் எண்ணிக்கை மலையளவு பெரியதாக இருக்கிறது. ஆனால் உன் நாமத்தின் மகிமை அதைவிடவும் பெரியது. உன்

நாமஸ்மரணைக்கு கரையாத பாவங்களை செய்வதற்கு யாராலும் சாத்தியம் இல்லை.

நாராயணோ நாம நமோ நராணாம்
ப்ரஸஹ்ய சோர: கதித: ப்ருதிவ்யாம் |
அனேக ஜன்மார்ச்சித பாபஸஞ்சயம்
தஹஸ்யகேஷம் ஸ்ம்ருதமாத்ர ஏவ ||

(இந்த நாராயணன் ஒரு உலகப்புகழ் பெற்ற கள்ளன். நாம் நூற்றுக்கணக்கான பிறவிகள் கஷ்டப்பட்டு சேர்த்து வைத்த பாவங்களையெல்லாம், இவனை நினைத்த மாத்திரத்திலேயே இவன் சுட்டுப் பொசுக்கிவிடுகிறான்).

கோவிந்த ஸ்மரணம் பும்ஸா பாபராஷி மஹாசலம் |
அஸம்ஷயம் தஹத்யாஷு தூலராஷிமிவானல: ||

(பஞ்சுப் பொதியலில் ஒரு தீக்குச்சி விழுந்தால் எப்படியோ, அப்படியே பாவத்தின் மலையையே கோவிந்தனின் நாமஸ்மரணை ஒரு நொடியில் சுட்டுப் பொசுக்கிவிடுகிறது. இதில் சந்தேகம் வேண்டாம்).

கஷ்டங்களுக்கு நீ நெருப்பு. ஆனால், அந்த கஷ்டங்களே என்னை பொசுக்கும் அளவிற்கு வளரும்போது, அந்த கஷ்டத்திற்கு நீ சந்திரனாக வந்து குளிர்ச்சியைக் கொடுக்கிறாயே ஸ்வாமி. இங்கு முன்பு போலவே கேலிப் பேச்சு இருக்கிறது. உன் பக்தனானவன், இவ்வளவு கஷ்டங்களில் சிக்கி தவித்துக் கொண்டிருக்கும்போது, நீ குளிர்ச்சியைத் தரும் சந்திரன் என்று அழைத்துக் கொண்டாயா?. ஏன் உனக்கு இன்னும் கருணை வரவில்லை. சூரியனாக வா. கஷ்டங்களின் இருட்டினை களைந்து, வெளிச்சத்தை பரப்பு. சந்திரனாக வா. துரிதங்களின் வெப்பத்தை உன் கருணையின் குளிர்ச்சியால் போக்கு.

புறத்தில், பகல் நேரத்தில் சூரியன் இருந்தாலும், சந்திரன் இல்லை. ஆனால் அகத்தில், சுப்ரபாதமாக சூர்ய சந்திரர்கள் இருவரும் ஒளிர்கின்றனர். ஏனெனில், பகவந்த 'கோடிசூர்ய சமப்ரப'வும்

ஆகிறான்; 'அனந்த சந்திராதிக காந்தஸன்முக'னும் அவனே ஆகிறான். அவன் ஆதித்யவர்ணனும் ஆகிறான்.

'ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்'
'ஷஷிவர்ணம் சதுர்புஜம்'

ஆகையாலேயே, ஆசார்ய மத்வர் பகவந்தனை 'ஆத்மபாஸ்கர' என்றும்; 'ஈஷசந்த்ரமா' என்றும் அழைத்தார்.

இவ்வாறு பகவத் தரிசனத்தின் சுப்ரபாதத்தில் சூர்ய சந்திரர்கள் இருவரையும் கண்ட தாசர் - அவரே வேங்கடகிரியின் ஸ்ரீனிவாஸ - அவரே தன் ஆராத்ய பிம்பமூர்த்தி புரந்தரவிட்டல என்கிறார் - 'ஸிரிபுரந்தரவிட்டலனெ, ஏளய்யா பௌகாயிது'.ஸிரியின் நிவாஸனான புரந்தரவிட்டல; இவ்வாறு திருப்பதியின் ஸ்ரீனிவாஸ மற்றும் பண்டரபுரத்தின் விட்டல இருவரும், இந்த முத்ரிகையின் பெயரில் அடங்கியிருக்கிறார்கள்.

***

# பகவந்தனுக்கு ஸ்வாகதம்

பாரய்யா வெங்கடரமணா பக்தர நிதியே ||ப

தோரய்யா, நின்ன தயெ தோயஜாம்பகனே ||அப

வேதகோசரனே பாரோ ஆதிகச்சபனே பாரோ |
மோதஸூகரனே பாரோ ஸதய நரஸிம்ஹ பாரோ ||1

வாமன பார்க்கவ பாரோ ராம கிருஷ்ணனே பாரோ |
ப்ரேமத புத்தனெ பாரோ ஸ்வாமி கல்கியே பாரோ ||2

அரவிந்தனாப பாரோ ஸுரர பிரபுவே பாரோ |
புருஹூதவந்த்ய பாரோ புரந்தர விட்டல பாரோ ||3

ஒருவர் வீடு கட்டுகிறார். அன்புடன் பார்த்து பார்த்து கட்டிய வீடு. இன்னும் வீட்டில் நுழையவில்லை. வீட்டு எஜமானன் சிந்திக்கிறான். யாராவது பெரியவரை அழைக்க வேண்டும். அவருடைய பாததூளி நம் வீட்டில் விழவேண்டும்.

புரந்தரதாசர் ஒரு வீடு கட்டியிருக்கிறார். ரத்ன வியாபாரியின் பழைய வீட்டினை இடித்து, புதிதாக கட்டியிருக்கிறார். கட்டும்போதே தெரிகிறது. இதன் எஜமானன் தான் அல்ல. தான் வெறும் குடியிருக்க வந்தவன். வீட்டு எஜமானன் வராமலிருந்தால், இத்தகைய வீடு கட்டி என்ன பிரயோஜனம்?. அவன் வரவேண்டும். வந்து இந்த புதிய வீட்டினை பார்க்க வேண்டும். கண்டு மெச்ச வேண்டும். அதற்காக தாசர் தன் வீட்டின் தலைவனான பகவந்தனை இங்கு வருமாறு அழைக்கிறார்.

பாரய்யா வெங்கடரமணா பக்தர நிதியே ||
தோரய்யா, நின்ன தயெ தோயஜாம்பகனே ||

பாரய்யா என் வீட்டிற்கு. உன்னுடைய வீட்டிற்கு. உனக்காக காத்திருக்கும் 11 வாயில்களைக் கொண்ட வீட்டிற்கு.

புரமேகாதஷத்வரம் அஜஸ்யாவக்ர சேதஸ: |(கட 2.2.1)

(இந்த வீட்டிற்கு 11 வாயில்கள். 2 கண்கள்; 2 காதுகள்; 2 மூக்கு த்வாரங்கள்; வாய், நாபி, மல மூத்ர உறுப்புகள் மற்றும் நெற்றியின் சஹஸ்ராரத்தின் முனை. இது நம் வீடு அல்ல. இதற்குள் இருந்து செயல்களை செய்விக்கும் பகவந்தனின் வீடு).

இத்தகைய உன் வீட்டிற்கு நீ வரவேண்டும். வந்து நிலைக்க வேண்டும். 'பாரய்யா வெங்கடரமணா'. நீ இந்த வேங்கடத்தின் தலைவன். ஆகையால், வெங்கடரமணன். வெங்கடாசலத்தில் நிலைத்த உலகின் ரமணன். அதனாலும் வெங்கடரமணன். வெங்கட கிரியில் நிலைத்த மூன்று உலகத்தின் தலைவன்.

தாசரின் கண்ணோட்டத்தில் பார்த்தால் இது வெவ்வேறு பெயராகவும் இருக்கலாம். பாரய்யா வெங்கட; பாரய்யா ரமண.

ஊர்ப் பெரியவர்களை அந்த ஊர்ப் பெயரிலேயே அழைக்கிறார்கள். கேகய தேசத்தின் அரசகுமாரர்கள் - கேகயர்கள். மத்ரதேசத்தவர்கள் - மத்ரர்கள். பஞ்சால தேசத்தவர்கள் - பஞ்சாலர்கள். அப்படியே, வெங்கடத்தில் நிலைத்திருப்பதால், நீயே வெங்கடன். 'பாரய்யா வெங்கட'.

நீ ஸ்வரமணன். ஸ்வயம் ஆனந்தமயன். உன் ஆனந்தத்திற்கு புற விஷயங்களின் சம்பந்தமே தேவையில்லை. மற்றவர்களின் ஆனந்தமும் உன் அருளே. அனைவரையும் நடத்துபவன் நீ ஒருவனே. ஆகையால் உண்மையான ரமணன் நீ ஒருவனே. 'பாரய்யா ரமணா'. பாரய்யா உலகின் ரமணனே பாரய்யா. என் ரமண - உன்னுடையதே ஆன என் உடலுக்குள்.ஒரு முறை வந்துவிட்டாய் என்றால், உன்னை செல்வத்தைப் போல மிகவும் கவனத்துடன் பார்த்துக்கொள்ளும் ஆசை உண்டு. அந்த நம்பிக்கையும் உண்டு. அதற்காக 'பாரய்யா பக்தர நிதியே'.நீ அனைவரின் இதயத்திலும் அமர்ந்திருக்கும் நிதி. ஆனால் உள்ளே இருக்கும் இந்த கஜானாவை அறிந்தவர்கள் எவ்வளவு பேர்? உள்ளே இருக்கும் செல்வத்தினை மறந்து, ஏழ்மையில் வாழ்பவர்கள் உண்டு. தம்மிடமே உள்ள செல்வத்தின் பரிச்சயம் இல்லாத ஏழை மக்கள். உள்ளே இருக்கும் தங்கத்தை, வெளியே தேடும் மூடர்கள். இருப்பு முக்கியமல்ல. இருப்பின் அறிவு முக்கியம்.

அறியாதவனுக்கு நீ இருந்தாலும் இல்லாததைப் போலவே. உன் பக்தர்களுக்கு மட்டும் இந்த அறிவு இருக்கிறது. அறிவு இருக்கிறது என்பதாலேயே அவர்கள் பக்தர்கள் ஆயினர். பக்தர்கள் ஆயினர் என்றதால் அவர்களுக்கு இந்த அறிவு வந்தது. ஆகையால் நீ பக்தர்களின் நிதி. நானும் ஒரு பக்தன். என் நிதி நீ. அதற்காக ‘பாரய்யா பக்தர நிதியே’. அறிவாக எனக்குள் வா. ‘நிதி’ பகவந்தனின் உபாசனையின் ஒரு ரகசிய நாமமும் ஆகும். சஹஸ்ர நாமங்களில் இந்த பெயரும் வந்திருக்கிறது. ‘பூதாதிர் நிதிரவ்யய:’.

இந்த வெளியே இருக்கும் நிதி எவ்வளவு நாட்கள் வரும்?. செலவழித்தால் கரைந்துவிடும். பகவந்தன் ஒருவனே நிரந்தர நிதி. கரையாத நிதி. இந்த ரகசியத்தை அறிந்த பக்தர்களுக்கு அவனே நிதி. புற நிதி அவர்களுக்கு நிதியே அல்ல. அவர் ‘ஸமலோஷ்டாஷ்ம காஞ்சனர்’. தங்கத்தைவிட மண் கீழானது அல்ல; மண்ணைவிட தங்கம் உயர்ந்தது அல்ல. மண்ணும், அதில் புதைந்துள்ள பொன்னும் ஒன்றே என்றபின், அதனை தோண்டி எடுப்பது வீண் முயற்சியே. அதற்காக அவர்கள் உள்ளே தோண்டி அங்கிருக்கும் நிதியை அறிகிறார்கள்.

புரந்தரதாசர் தன்னிடம் இருந்த பொன், பொருள் அனைத்தையுமே துறந்து, கை கழுவி வந்தவர். அதற்காகவே அவர் மிகவும் அர்த்தத்துடன் பகவந்தனை இவ்வாறு அழைக்கிறார். ‘பாரய்யா பக்தர நிதியே’.

நான் செல்வத்தின் கர்வத்தினால் உன்னை அழைக்கவில்லை. செல்வத்தினை விட்டு வந்திருக்கிறேன். இப்போது என் அனைத்து செல்வமும் நீயே. நீ பக்தர்களின் நிதி. என் நிதி. என் இதய குகையில் கவனத்துடன் நன்றாக பார்த்துக் கொள்கிறேன். பாரய்யா. அதற்காக ‘தோரய்யா நின்ன தயெ தோயஜாம்பகனெ’.

உன் கருணையை என் மேல் காட்டு. உன் தயாமூர்த்தியை எனக்கு காட்டு. கருணையுடன் என்னிடம் வா. என் எதிரில் வா. வந்து உன்னை எனக்குக் காட்டு. அந்த பக்தனின் மேல் கருணையைக் காட்டு.

உன் கருணையின் மகிமையை ஒரு முறை காட்டய்யா. கருணையைக் காட்டி என் மனதிற்குள் வா. நீ கருணை காட்டினாய் என்றால், என் நிதி எனக்கு கிடைத்ததைப் போல ஆயிற்று. நீயே கிடைத்தபிறகு, வேறு எதுதான் கிடைக்காது? - 'கிமலப்யம் பகவதி பிரஸன்னே ஸ்ரீநிகேதனே'.

நீ இருந்தால் அனைத்தும் இருக்கிறது. நீ இல்லையெனில் எதுவும் இல்லை. உன்னை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததைப் போல. உன்னை அறியாவிட்டால் எந்த அறிவினால் என்ன பலன்?. அதற்காகவே நீ எங்கள் நிதி. வெறும் நிதி அல்ல. ஸ்ரீநிதி. தயாநிதி. அனைத்து நிதிகளும் நீயே. 'தயாநிதியே. தோரய்யா நின்ன தயெ தோயஜாம்பகனெ'.

கருணையின் முதல் குறியீடு - மலர்ந்த கண்கள். அரசன் தன் சேவகர்களை மிகவும் அன்புடன் மலர்ந்த கண்களுடன் பார்த்தான் என்றால், மிகப்பெரிய நிதி கிடைத்துவிட்டது என்று சேவகன் பூரிக்கிறான். 'அரசன் என்னை மலர்ந்த கண்களால் பார்த்தார். அவருடைய கருணை என் மேல் விழுந்திருக்கிறது. நான் தன்யன் ஆனேன்' என்று மகிழ்கிறான். தாசரும் பகவந்தனின் மலர்ந்த கண்களின் தரிசனத்திற்காக, அதன் பாக்கியத்திற்காக காத்திருக்கிறார். இந்த அருட்கண்களின் பார்வையே சாதகர்களின் வாழ்க்கையின் மிகப்பெரிய நிதி. அதற்காக அதையே சொல்லி அழைக்கிறார்.

'தோயஜாம்பகனே'.

தோயஜ என்றால், தாமரை. அம்பக என்றால் கண். ஹே மலர்ந்த தாமரை போன்ற கண்களைக் கொண்டவனே, என் மேல் உள்ள கருணையால், அன்புடன் மலர்ந்து நின்ற உன் கண்களால் என்னைப் பார்.

அடுத்து முதல் பத்தியை பார்ப்போம்.

வேதகோசரனே பாரோ ஆதிகச்சபனே பாரோ |
மோதஸூகரனே பாரோ ஸதய நரஸிம்ஹ பாரோ ||1

11 வாயிலைக் கொண்ட இந்த தேகத்தில் 11 இந்திரியங்கள் உள்ளன. ஒவ்வொரு இந்திரியங்களிலும், பகவந்தனின் ஒவ்வொரு லீலா ரூபம் நியாமகமாக இருக்கிறது. தாசர் இந்த பாடலில் அத்தகைய ஒவ்வொரு ரூபத்தையும் தனித்தனியாக அழைத்து, தன்னில் நிலைக்குமாறு பிரார்த்தனை செய்கிறார். இவ்வாறு இது காயத்ரியின் 10 ஷப்தங்களால் வியாப்தமான 10 அவதாரங்களின் ஸ்துதியும் ஆகிறது; இந்திரிய ஸ்வாமியான ஹ்ருஷிகேஷனின் ஸ்துதியும் ஆகிறது. இத்தகைய 11 ரூபங்களில் முதல் நான்கு ரூபங்கள் முதல் பத்தியில் வந்துள்ளது.

முதலாவது மத்ஸ்யாவதாரம். இதையே தாசர் அழைக்கிறார் - வேதகோசரனே பாரோ.ஹயக்ரீவாசுரன் வேதங்களை கவர்ந்து சென்றபோது, அவனைக் கொன்று வேதங்களை திரும்பக் கொண்டு வந்தார். அசுரன் மூலமாக திருடப்பட்ட வேதங்களை மறுபடி வெளியில் (கோசர) கொண்டு வந்தார். வேதகோசர.

கோ என்றால் சம்ஸ்கிருதத்தில் தண்ணீர் என்றும் அர்த்தம். வேதங்களுக்காக வெளிவந்தவன். தண்ணீரில் வசிப்பவன் - வேதகோசரன். அவன் பிரளய ஜலத்தில் மட்டும் சஞ்சரிப்பவன் அல்ல. வேதவாங்மய என்னும் கடல் தண்ணீரில்கூட சஞ்சரிப்பவன். அதனாலும், வேதகோசர என்று அழைக்கப்படுகிறான். அத்தகைய வேதகோசரனாக என்னிடம் வா. என் இதய சமுத்திரத்தில் சஞ்சரிக்கும் மீனாக வா.

ஆத்யாத்மிகமாக, இந்த 11 வாயில் உள்ள வீட்டில் மத்ஸ்ய ரூபி பகவந்தன் நிலைத்திருக்கும் இடம் என்றால் அது - ஸ்ரவணேந்திரிய. மத்ஸ்யனாக வா. என் காதுகளில் நிலைத்து நின்று, நல்லவற்றை கேட்கச் செய்வாய். என் காதுகளுக்கு வேத வாங்மயம் கேட்குமாறு செய். எப்போதும் உன் புண்ய நாம, உன் திவ்ய கதை ஆகியவை கேட்குமாறு அருள்வாயாக.

ஆசார்ய மத்வர் தசாவதார ஸ்துதியில் மத்ஸ்யனை இவ்வாறு வர்ணிக்கிறார்.

மத்ஸ்கரூப லயோதவிஹாரின்
வேதவினேத்ர சதுர்முக வந்த்ய

(சிறிய மீனாக பிறந்து வந்தவனே; பிரளய ஜலத்தில் நிரம்பி நின்றவனே; வேத வாங்மயத்தை மறுபடி கொண்டு வந்தவனே; நான்முகன் வணங்கி கொண்டாடிதவனே).

இங்கு சொல்லப்பட்டிருக்கும் 'வேதவினேத்ர' - தாசரின் பாடலில் வேதகோசர ஆயிற்று. ஸ்தோத்திரத்தின் மொத்த அர்த்தத்தை, தாசர் இந்த ஒரு சொல்லில் அடக்க முற்பட்டதைப் போல உள்ளது.

அடுத்து இரண்டாம் அவதாரத்தை தாசர் பாடுகிறார். - ஆதிகச்சபனே பாரோ.ஆதி - என்றால் இரு அர்த்தங்கள். 1. முதல். 2. காரணம். பகவான் அனைத்தை விடவும் முதலில் இருந்தவன். இந்த ஸ்ருஷ்டிக்கு முன்னர் யாரும் இல்லாதபோது, தான் இருந்தவன். 'ஆத்மா வா இதமக்ர ஆஸீத்'. அனைத்து சராசரத்திற்கும் காரணம் ஆனவன். அனைத்து காரணங்களுக்கும் மூலகாரணம் ஆனவன். அத்தகைய, ஆதி நாராயணனே கச்சப (கூர்ம) ஆனான். இந்த அவதாரத்திற்கும், அந்த மூல ரூபத்திற்கும் எந்த வித்தியாசமும் இல்லை. இரண்டும் ஆதி; இரண்டும் அனாதி; இரண்டும் பரிபூர்ணம். 'பூர்ணமத: பூர்ணமிதம்'. இந்த பிரமேயத்தை குறிப்பதற்காகவே 'ஆதிகச்சப' என்னும் பதத்தை தாசர் பயன்படுத்தினார்.

இதில் இன்னொரு நோக்கமும் உண்டு. கூர்மரூபம் இரண்டு இருக்கிறது. ஒன்று பிரம்மாண்டத்தை தாங்கிய ரூபம். இன்னொன்று பாற்கடலை கடையும் சமயத்தில், மந்தர மலையை தாங்கிய ரூபம். பிரம்மாண்டத்தை தாங்கிய ஆதி கூர்ம வேறு இல்லை; மந்தரத்தை தாங்கிய கூர்ம வேறு இல்லை; மூல ரூப, அவதார ரூபங்களுக்கு எப்படி பேதங்கள் இல்லையோ; அப்படியே இரு அவதார ரூபங்களுக்கு இடையே பேதங்கள் இல்லை. ஆகையால், அந்த ஆதிகச்சபனே இவன். இதையே தாசர் பாடினார் 'ஆதிகச்சபனே பாரோ'. என் மனோ மந்தரத்தை மூழ்கிப் போகாமல் தாங்கிப் பிடிக்கும் கூர்மனாக வா.

ஆசார்ய மத்வரின் ஸ்தோத்திரத்தில் இந்த த்வனி இருக்கிறது.

கூர்மஸ்வரூபக மந்தர தாரின்
லோகவிதாரக தேவ வரேண்ய

(கூர்மரூபத்தை தாங்கிய ஸுகரூபனே; மந்தரத்தை முதுகில் தரித்தவனே; உலகத்தை தாங்கிய ஆதாரமே; தேவதைகளும் வணங்கும் பரதெய்வமே).

இங்கு மந்தரமலையை தாங்கிய கூர்மனையும், உலகங்களை தாங்கிய ஆதி கூர்மனையும் பேதமின்றி வர்ணித்திருக்கிறார். இந்த பரம்பரையின் பின்னணியிலேயே தாசரும் பாடினார். ‘ஆதிகச்சபனே பாரோ’.

இந்த தேகத்தில் பகவந்த கூர்மரூபத்தினால் நிலைத்திருக்கும் இடம் - கண்கள். கூர்மனாக வா. என் கண்களில் நின்று நல்லவற்றை காண்பாயாக. என் கண்களுக்கு உன் க்ஷேத்திரங்களின், உன் சிலைகளின் / பிரதிமைகளின் தரிசன பாக்கியத்தை அருள்வாயாக.

மூன்றாம் அவதாரம் : மோதஸூகரனே பாரோ.

ஆசார்ய மத்வர் இந்த ரூபத்தை இவ்வாறு வர்ணிக்கிறார்.

ஸூகரரூபக தானவஷத்ரோ பூமி விதாரக யக்ஞவராங்க

(ஸூகர ரூபனே ஸுக ஸ்வரூபனே; தானவ குலத்தை அழித்தவனே; மூழ்கிய பூமியை தாங்கிப் பிடித்தவனே; யக்ஞாங்கங்களை பெற்றவனே).

ஆசார்ய மத்வர் இந்த ஸ்துதியில், வராக ரூபத்தை - ஸூகரரூபக என்று பாடுகிறார். க என்றால் ஆனந்தம். ஆனந்தபூர்ணனான ஸூகரரூப. ஸூகர ரூப - க; பகவந்தனுக்கு இந்த ஸூகரரூபம், ஜீவர்களைப் போல பிராரப்த பலனாக துக்கத்தை அனுபவிக்க வேண்டும் என்று கட்டாயமாக வந்த ரூபம் அல்ல; அவன் பன்றி ஆனாலும், ஆனந்தனே. இந்த ரூபமும் ஒரு ஆனந்தத்தின் தோற்றமே. ஒரு லீலாவினோதம். ஆசார்ய மத்வரின் இந்த பாவத்தையே, தாசர் இங்கு பாடினார். ‘மோதஸூகரனே பாரோ’. ஹே ஆனந்த ஸ்வரூபனான ஸூகரனே. என்னையும் இந்த ஸாதனையின் வழியில் செலுத்தி, நிஜ அனுபவத்தின் உயரத்திற்கு தூக்கி நிறுத்து.

தேகத்தில் பகவந்தன் வராக ரூபத்தினால் நிலைத்திருக்கும் இடம் - த்வக் இந்திரிய (சர்மம்). ஹே ஆனந்தரூபி ஸூகரனே. என்னிடம் வா. என் சர்மத்தில் வந்து நில். உன் பிரதிமைகளை தொட்டு, பூஜிக்கும், அந்த ஸ்பர்ஷ ஆனந்தத்தின் பாக்கியத்தை எனக்கு அருள்வாயாக.

நான்காம் அவதாரம் : ஸதய நரஸிம்ஹ பாரோ:

அவன் துர்ஜனர்களை கருணையின்று கொன்று அழித்தாலும்; சஜ்ஜனர்களிடம் எப்போதும் கருணையுடனேயே இருக்கிறான். ஹிரண்யகனின் குடலை கிழித்தால் என்ன? பாலகன் பிரகலாதனுக்கு தரிசனம் அளித்த மகாமூர்த்தி அல்லவா? நாமும் ஹிரண்யகசிபுவைப் போல பகவந்தனிடம் செல்லக்கூடாது. பிரகலாதனாக செல்ல வேண்டும். அப்போது நரசிம்ம ரூபத்தைக் கண்டு நாம் பயப்படத் தேவையில்லை. ஏனெனில், நம்பியவர்களுக்கு அவன் கருணாமூர்த்தி. நரசிம்ம அஷ்டோத்தர ஷத நாமாவளியில் வரும் இரு பெயர்கள் இவ்வாறு:

ஹிரண்யகசிபோர் வக்ஷோவிதாரண நகாம்ஷுக: | பிரகலாதவரத

(ஹிரண்யகசிபுவின் இதயத்தை அறுத்த, கூர்மையான நகங்களைக் கொண்ட மூர்த்தி; ஆனால், சிசு பிரகலாதனுக்கு வரம் அளித்து அருளிய தயாமூர்த்தி).

இதைப் போலவே இன்னும் இரு பெயர்கள் வருகின்றன. ‘ஆபக்த ஜனஸம்ஹாரி; பக்தானாமபயப்ரத:’ (அவன் அபக்தர்களை சம்ஹரிக்கும் பயங்கரன். ஆனால், பக்தர்களுக்கு அபயபிரதன்).

பக்தர்களுக்கு அபயத்தைக் கொடுப்பதே அவனுடைய அவதாரத்தின் நோக்கம்.

‘அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம’
(ராமா. யுத்த 18.33)

(சரணாகதி அடைந்தவர்களுக்கு அபயம் அளிப்பவன். இது நான் எடுத்த தீக்ஷை).

ராமாவதாரத்தில் கூறிய இந்த வாக்கு, அனைத்து அவதாரங்களுக்கும் சமானமாகவே பொருந்துகிறது. ஆகையால், அவன் பக்தர்களுக்கு கருணாளு. ஆசார்ய மத்வர், இந்த ரூபத்தை இவ்வாறே வர்ணிக்கிறார்.

'தேவ ந்ருஸிம்ஹ ஹிரண்யக ஷத்ரோ; ஸர்வபயாந்தக தெய்வத பந்தோ'.

(ஹே தேவனே, நரசிம்மனே, ஹிரண்யகனின் இதயத்தை பிளந்தவனே, நம்பியவர்களின் பயங்களைப் போக்கிய தயாஸிந்துவே, ஹே தேவதைகளின் பந்துவே).

ஹே நரசிம்மனே, இந்த பக்தனிடம் வா. ஆனால், ஹிரண்யகனிடம் வந்ததைப் போல கருணையற்று, பயங்கரனாக வரவேண்டாம். நானும் ப்ரகலாதனைப் போல அனன்ய பக்தியுடன் சரணாகதி அடைகிறேன். கருணையுடன் வா. பிரகலாதனைப் போல எனக்கும் அபயத்தை கொடுக்கும் தீக்ஷையை பெற்று வா.

இந்த தேகத்தில் நரசிம்ம ரூபத்தினால் பகவந்தன் நிலைத்திருக்கும் இடம் - ரஸனேந்திரிய. ஹே கருணாளு நரசிம்மனே, வா. இந்த நாக்கில் நின்று நிலைப்பாயாக. நிலைத்து, உனக்கு அர்ப்பிதமான நைவேத்யத்தின் சுவையை சுவைக்க வைப்பாய். அது மட்டுமா? உண்ணும் அன்னம் அனைத்தும், நாக்கில் நின்ற உனக்கே அர்ப்பிதம் ஆகும்.

வாமன பார்க்கவ பாரோ ராம கிருஷ்ணனே பாரோ |
ப்ரேமத புத்தனே பாரோ ஸ்வாமி கல்கியே பாரோ ||

ஐந்தாம் ரூபம் : 'வாமன பாரோ'. பலியின் வீட்டிற்கு வந்ததைப் போல என் வீட்டிற்கும் வா. அவனுக்கு தரிசனம் அளித்ததைப் போல, எனக்கும் உன் விஷ்வரூபத்தைக் காட்டுவாயாக. தேகத்தில் வாமனரூபம் நிலைத்திருக்கும் இடம் - மூக்கு. வாமனனே, வா. என் மூக்கில் வந்து நிலைத்திரு. நிலைத்து, உனக்கு அர்ப்பிதமான பூ, துளஸிகளின் நறுமணங்களை நுகரும் கருணையை காட்டு.

இத்துடன் ஞானேந்திரியங்களில் நிலைத்திருக்கும் பஞ்சரூபங்களை சொல்லியாயிற்று. இந்த ஐந்து இந்திரியங்களும் பகவத் ஸன்னிதியினால் பரிசுத்தம் ஆகட்டும். அதனாலேயே, துர்விஷயங்களிடம் அவை செல்லாமல், ஸத் விஷயங்களிடம் மட்டுமே செல்லட்டும். ஆத்யாத்ம ஸாதனைக்கு தேவையான சுக்ஞானத்தையே பெறட்டும். அதன் மூலம் இந்த ஐந்து இந்திரியங்களும் பகவந்தனுக்கு அர்ப்பிதம் ஆகட்டும். இவற்றின் மூலம் அவனே விஷயங்களை போகிக்கட்டும். மத்ஸ்யாதி கிரமத்திலேயே, பஞ்சேந்திரியங்களை சொல்லி, பகவத் கீதை இந்த விஷயத்தை சொல்கிறது.

ஸ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஷனம் ச ரஸனம் க்ராணமேவ ச |
அதிஷ்டாய மனஸ்சாயம் விஷயானுபஸேவதே || (கீதை 15.9)

(காது (மத்ஸ்ய); கண் (கூர்ம); த்வக் (வராக); நாக்கு (நரசிம்ம); மூக்கு (வாமன) மற்றும் மனஸ் (மூலரூப). இந்த இந்திரியங்களில் நிலைத்திருக்கும் பகவந்தனே விஷயங்களின் ஸாரத்தை போகிக்கிறான்).

ஆறாம் ரூபம்: 'பார்கவ பாரோ'. ப்ருகு வம்சத்தில் வந்த; கோடலி ராமனே பாரோ - என் வீட்டிற்கு. உள்ளே நிரம்பியிருக்கும் அழுக்கினை போக்குவதற்கு கோடலியைக் கொண்டு வா.

தேகத்தில் பரசுராம ரூபத்தின் இடம் - வாக் இந்திரிய. வாக்கினில் அக்னி இருக்கிறான். அக்னியில் ஹரணிபதி பரசுராமன் இருக்கிறான். பார்கவனே வா. வந்து என் வாயில் நிலைத்திரு. ஞானேந்திரியங்களால் பெற்ற அறிவினை வாயிலிருந்து வாக்காக சொல்ல வை. உண்மையையே பேச வை. ஸத்ய ஸ்வரூபனான உன் நாமத்தை சொல்ல வை. உன் குணகானத்தையே சொல்ல வை. கூறும் வாக்கெல்லாம் உன் ஸ்துதி ஆகட்டும். நீயே கூறிய உன் ஸ்துதியை நீயே ஏற்றுக்கொண்டு மகிழ்ச்சி அடைவாயாக.

வாமனனாகி ஞானேந்திரியத்தில் இருக்கிறான். பார்கவனாக கர்மேந்திரியத்தில் இருக்கிறான். அனைத்து இடங்களிலும் இருப்பவன், எங்கு இருந்தால் என்ன? அங்கு இருப்பது மேல் அல்ல; இங்கு இருப்பது கீழ் அல்ல; அவன் எங்கு இருந்தாலும் அனைத்து

ரூபங்களிலும் சமான - ஏகரூபனே ஆகிறான். அதற்காகவே தாசர் ‘வாமன பார்கவனே’ என்று இரு ரூபங்களையும் சேர்த்து பாடியிருக்கிறார்.

அடுத்து, ஏழாம் ரூபம். ‘ராம பாரோ’. ராமசந்திரனே, வா. என் சம்சாரம் என்னும் கடலுக்கு ஸேதுவைக் கட்டு. 10 தலைகளில் ஏறி நிற்கும் கர்வத்தை போக்குவாயாக.

இதனுடன் இருக்கவேண்டிய எட்டாவது ரூபம். ‘கிருஷ்ணனே பாரோ’. என் அக மனதில் உன் கீதையின் வெளிச்சத்தைக் காட்டு.

ஆத்யாத்மத்தில், ராமன், கையின் தேவதையானால், கிருஷ்ணன் பாத தேவதை. கை-கால் என்று சேர்த்தே சொல்கிறோம். இவை தேகத்தின் மிகவும் முக்கியமான இரு அங்கங்கள். தேகம் வீணானது என்பதற்கு அவனுடைய கை-கால்கள் விழுந்துவிட்டன என்கிறோம். சம்ஸ்கிருதத்தில் இவ்வாறு சேர்த்தே சொல்கிறார்கள். ந மே ஹஸ்தபாதம் ப்ரஸரதி (என் கை கால்கள் வேலை செய்யவில்லை). அதற்காகவே, அங்கு நிலைத்திருக்கும் பகவந்தனின் ரூபங்களையும் தாசர் சேர்த்தே சொல்கிறார் -

ராமகிருஷ்ணனே பாரோ.

ராமா, வா. வந்து என் கைகளில் நிலைத்து, அவற்றால் உன் பாத சேவையை செய்வி. என் கைகள் செய்த செயல்கள் அனைத்தும் உன் பூஜை ஆகட்டும். நீயே செய்வித்த உன் பூஜையை அங்கு நின்று நீயே ஏற்றுக் கொள்.

கிருஷ்ணனே வா. என் பாதங்களில் நியாமகனாக நிலைத்து, என்னை ஸத் பதத்தில் நடத்து. நான் நடப்பதெல்லாம் உன் ப்ரதட்சிணை ஆகட்டும். அது அங்கிருக்கும் உனக்கே அர்ப்பிதம் ஆகட்டும். இங்கு இன்னும் ஒரு உபாசனையின் ரகசியம் இருக்கிறது. ராம என்பது ஒரு ரூபம். கிருஷ்ண என்பது ஒரு ரூபம். அது மட்டுமல்ல, ராமகிருஷ்ண என்பதும் ஒரு ரூபம். இந்த ஒன்று சேர்ந்த ரூபத்தின் உபாசனை, சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

ராமராமோ ராமகிருஷ்ண:
கிருஷ்ணராம இதி க்ரமாத் || (யோக தீபிகா : 10.31)

இந்த உபாசனையை குறிப்பதற்காகவே, தாசர் 'ராமகிருஷ்ணனே பாரோ' என்று சேர்த்தே சொல்லியிருக்கிறார். 'வாமன பார்கவ பாரோ' என்பதிலும்கூட இதே காரணத்தை பொருத்திக் கொள்ளலாம்.

ஒன்பதாம் ரூபம்: 'ப்ரேமத புத்தனே பாரோ'.

பத்தாம் ரூபம் : 'ஸ்வாமி கல்கியெ பாரோ'.

த்ரிபுரர்களின் சம்ஹாரத்திற்காக புத்தன் ஆனாலும், ஞானிகளின் மேம்பாட்டிற்காகவே ஆன ப்ரேமாவதாரம் அல்லவா இது? தேவதைகளின் பிரார்த்தனைக்கேற்ப, அவர்கள் மேல் உள்ள ப்ரேமத்தால் இத்தகைய மோஹக ரூபத்தை ஏற்றாய் அல்லவா நீ? அத்தகைய ஹே ப்ரேமத்தின் புத்தனே, என்னிடம் வா. த்ரிபுரர்களைப் போல என்னையும் மயக்குவதற்காக அல்ல. என்னை மேம்படுத்துவதற்காக, அன்பின் மூர்த்தியாக வா. ப்ரேமத்தினால் ப்ரபுத்தனாக ஆக்குவதற்கு வா.

ஆசார்ய மத்வரின் ஸ்துதியிலும் இந்த பிரேமாவதாரத்தின் குறிப்பு இவ்வாறு உள்ளது.

தைத்யவிமோஹக நித்யஸுகாதே
தேவஸுபோதக புத்த ஸ்வரூப ||

(தைத்யர்களை வஞ்சித்து மயக்கத்தில் ஆழ்த்தியவனே, நித்ய சுகத்தின் மோட்ச பதத்திற்கு மூல காரணனே, நம்பி வந்த தேவதைகளின் மேல் அன்புடன் உண்மையான ஞானத்தைக் கொடுத்தவனே, ஹே புத்தனே).

மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் இந்த வாக்கு வந்திருக்கிறது.

ப்ரஷாந்த வித்யேத்யபிதம் ததாऽன்யத்
புத்தோக்த ஷாஸ்த்ரம் த்ரிதஷா அவாப்ய |
தோஷம் யயுர்வேத ஸமஸ்தஸாரம்

யாமாஸ்தி தானாமசிரேண முக்தி: || (மஹா. தாத். நிர். 32-148)

(புத்ததேவன் தேவதைகளுக்கு வேறான ஆத்யாத்மிக வித்யையை உபதேசம் செய்தான். அனைத்து வேதங்களின் சாரரூபமான இந்த வித்யைக்கு ப்ரஷாந்தவித்யை என்று பெயர். சீக்கிரத்தில் யுக்தியை அருளும் இந்த மகாவித்யையைப் பெற்று தேவதைகள் மகிழ்ந்தனர்).

ப்ரேமத்தினால் தேவதைகளுக்கு வித்யையை கற்பித்தவன். ப்ரேமத்தின் வித்யையை போதித்தவன். தேவதைகள் விரும்பிய வித்யையை கற்பித்தவன். ஆகையால் தாசர் கூறினார் - ப்ரேமத புத்தனே பாரோ.

அடுத்து, 'ஸ்வாமி கல்கி பாரோ'. யுகம் யுகமாக துர்ஜனர்களைக் கொல்வதற்காக வந்த உன் கத்திக்கு நான் இரை ஆகக்கூடாது. என்னை காக்கும் ஸ்வாமியாகி வா. கல்கி அவதாரத்திற்கு இரு முகங்கள். அதர்மத்தின் நாசம், துஷ்டர்களின் நாசம் - ஒரு முகம்; தர்மத்தைக் காத்தல், சஜ்ஜனர்களைக் காத்தல் - இரண்டாம் முகம். என் அந்தரங்கத்தில் தர்மத்தை விளைவிக்கும் ஸ்வாமியாக வா - என்பதே இங்கு சொல்லப்பட்டிருக்கும் தாத்பர்யம்.

ஆசார்ய மத்வரின் ஸ்தோத்திரத்தில், இந்த இரு முகங்களும் தெளிவாக வந்திருக்கின்றன.

துஷ்டகுலாந்தக கல்கிஸ்வரூபா
தர்ம விவர்த்தன மூலயுகாதே ||

(துர்ஜனர்களின் குலத்தை கத்தரித்தவனே, கல்கி ஸ்வரூபத்தில் வந்தவனே, தர்மத்தின் விளைச்சலை விளைத்தவனே, கிருத யுகத்தின் விதையை விதைத்தவனே).

தசாவதாரத்தின் கடைசியான இந்த புத்த கல்கி ரூபங்களே தேகத்தில் முறையே, மல மூத்ர விசர்ஜன உறுப்புகளில் நிலைத்திருக்கின்றன என்று அறிஞர்கள் சொல்கின்றனர். இவ்வாறு தன் 10 இந்திரியங்களின் பகவந்தனின் 10 ரூபங்கள் நிலைத்து, தன் இந்த பௌதிக தேகத்தை பகவன்மயமாக்குமாறு பிரார்த்தனை

செய்து அவரை வரவேற்றாயிற்று. கடைசியாக, 11வது இந்திரிய - மனதில், நாராயணனே மூல ரூபத்தினால் வந்து, நிலைக்குமாறு அடுத்த பத்தியில் பிரார்த்தனை செய்கிறார்.

அரவிந்தனாப பாரோ ஸுரர ப்ரபுவே பாரோ
புருஹூதவந்த்ய பாரோ புரந்தரவிட்டல பாரோ ||

ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் அனைத்து அவதாரத்தின் ரூபங்களையும் தன்னிலேயே வைத்துக் கொண்டு, நாராயணன் ஒருவனே இருந்தான். அடுத்து, அவனுடைய நாபியிலிருந்து லோகாத்மகமான அரவிந்த பிறந்தது. அவன் அரவிந்தனாபன் ஆனான். ஆகையால், தாசர் கூறுகிறார் - அரவிந்தனாப பாரோ.

ஹே நாராயணனே, நாபியில் அரவிந்தனைப் பெற்ற, அதில் பிரம்மனைப் பெற்ற ஹே பத்மனாபனே பாரோ, என் அந்தகரணத்தில் வந்து நிலைப்பாய். நிலைத்து என் மனதினை சன்மார்க்கத்தில் நடத்து.இந்திரியங்களில் அபிமானி தேவதைகள் நிலைத்திருக்கின்றனர். அவர்கள் ஒவ்வொரு நொடியும் இந்திரியங்களை வழி நடத்துகின்றனர். இதன் பிறகு, பகவந்தன் ஏன் 10 வெவ்வேறு ரூபங்களை எடுக்க வேண்டும்?. இந்த கேள்விக்கு பதிலாக இரண்டாம் பத்தி வந்திருக்கிறது. 'ஸுரர ப்ரபுவே பாரோ'.

நீ இருந்தால் அனைத்து சுரர்களும் இருக்கின்றனர். நீ இல்லையெனில், யாரும் இல்லை. நீ நின்று சுரர்களை நடத்துவதாலேயே சுரர்கள் என் இந்திரியங்களை நடத்த முடிகிறது. நீ தூர விலகி நின்றால், பாவம், அவர்களால் என்னதான் செய்ய முடியும்?. ஏனெனில், நீ இந்திரிய அபிமானிகளான சுரர்களுக்கும் பிரபு அல்லவா?. நீ கை விட்ட தேகத்தை அவர்கள் கை பிடித்து நடத்த முடியுமா? (முடியாது).

பிரம்மணா த்யக்ததேஹஸ்து ம்ருத இத்யுச்யதே புதை: ||

(பகவந்தன் தேகத்தை விட்டு கிளம்பினால், ஜீவன் இறந்தான் என்று அர்த்தம்).

இந்த சாஸ்திர வசனத்தைப் போலவே நம் வாழ்க்கையும். நீயே நம் உயிர். நீ இருந்தால் தேவதைகளும் இருந்து, தம் வேலையை செய்கின்றனர். நீ புறப்பட்டால் அவர்களும் தம் பிரபுவுடன் புறப்பட்டு விடுகின்றனர். அப்போது இது வெறும் மரக்கட்டை மட்டுமே. மண் உருண்டை. அதற்காக, ஹே ஸுரர்களின் பிரபுவே, வா. இந்த வாழ்க்கையின் மேம்பாட்டின் சாதனையின் வழியைக் காட்டு. ஸுரர்களின் பிரபு என்று இந்திரனையும் அழைப்பதுண்டு. அதற்கும் காரணம் இருக்கிறது. 10 புற இந்திரியங்களின் அபிமானி தேவதைகள் அனைவருக்கும் அவனே தலைவன். தகுதியில் அவர்களைவிட அதிகமானவன். 10 இந்திரியங்களுக்கும் முக்கிய தேவதை. அதுமட்டும் அல்ல.

மனதிற்கும் அவனே தேவதை. இவை இந்திரனின் கட்டுப்பாட்டில் உள்ளது. (ஆகையாலேயே இந்திரியங்கள் எனப்படுகின்றன). இவ்வாறு ஒரு அர்த்தத்தில் இந்திரனும் சுரர்களின் பிரபு ஆகிறான். இந்த வாக்கினை தெளிவாக்குவதற்காகவே அடுத்த வரி வருகிறது. புருஹூதவந்த்ய பாரோ.நீ புருஹூதனாலும் (இந்திர) வணங்கப்படுபவன். ஆகையால், நீயே அனைத்து சுரர்களின் முக்கிய பிரபு.

அப்படியெனில், வேதங்கள் எதற்கு, அக்னி, வாயு, வருண, இந்திர ஆகிய வெவ்வேறு இந்திரிய அபிமானி தேவதைகளை தனித்தனியாக வணங்குகின்றன? இந்த கேள்விக்கு பதிலாகவும் இந்த வரி வந்திருக்கிறது. 'புருஹூத பாரோ'. புரு+ஹூத என்றால் அனைவரின் அனைத்து நாமங்களாலும் அழைக்கப்படுபவன் ஒருவனே. உண்மையாக இந்திரனும் 'புருஹூதன் அல்ல'. நீ ஒருவனே புருஹூத. ஏனெனில், அனைத்து நாமங்களால் அழைக்கப்படுபவன் நீ ஒருவனே என்று ஸ்ருதிகள் சொல்கின்றன.

நாமானி ஸர்வாணி யமாவிஷந்தி
தம் வை விஷ்ணும் பரமமுதாஹரந்தி ||

(அனைத்து சொற்களும் முக்கியமாக யாருடைய பெயரோ, அத்தகைய பரதெய்வமே விஷ்ணு என்று ஞானிகள் சொல்கின்றனர்).

அனைத்து நாமங்களும் அனைத்து நமனங்களும் கடைசியில் அவனையே சென்று சேர்கின்றன. அனைத்து தண்ணீரும் கடலைச் சென்று சேர்வதைப் போல. 'ஸர்வதேவ நமஸ்கார: கேஷவம் பிரதிகச்சதி' - என்ற பிறகு, வேதங்கள் எந்த பெயரால் துதித்தால் என்ன?. அனைத்தும் பகவந்தனின் பெயர்களே. அனைத்தும் பகவந்தனின் துதியே. அதற்காகவே தாசர் மறுபடி சொல்கிறார். 'வந்த்ய பாரோ'.

வந்த்ய என்றால் - வணங்கப்படுபவன் மற்றும் போற்றப்படுபவன் (வதி அபிவாதன ஸ்துத்யோ:).

அனைத்து நாம பதங்களால், அனைவராலும் வணங்கப்படுபவன் நீயே. பிரம்மாதி அனைத்து தேவதைகளால் வணங்கப்படுபவன் நீயே. அதைப் போலவே என்னாலும் வணங்கப்பட்டு என் இந்த சிறிய ஸ்துதிகளுக்கு பெரிய மனது செய்து, தரிசனம் தருவதற்கு என்னிடம் வா.

இவ்வாறு 11 ரூபங்களால் இந்திரிய ஸ்வாமியாகி, ஹ்ருஷிகேஷனாகி, பகவந்தன், தன்னிடம் வரவேண்டும் என்னும் விருப்பத்துடன், தாசர் கடைசி வரியில் தம் முத்திரையை வைக்கிறார் - புரந்தரவிட்டல பாரோ.

தசாவதாரி ஹரியை நம் இந்திரியங்களில் த்யானிக்கும் ஒரு புதிய பிரமேயத்தை நாமே இந்த பத்யத்தில் பார்த்தாயிற்று. ஜகன்னாத தாசரின் ஹரிகதாம்ருதசாரம் இந்த ஆத்யாத்மிக பிரமேயத்தை விவரமாக சொல்கிறது.

மூலரூபனு மனதொ3ளிஹ ஸ்ரவ
நாலியொளகி3ஹ மத்ஸ்ய கூர்மனு
கோலரூபனு த்வக்3ரசன தொளகி3ப்ப நரசிம்ஹ ।
பா3லவடு1 வாமனனு நாஸிக1
நாளதொ3ளு வத3னத3லி பா4ர்க்க3வ
வாலிப4ஞ்ஜன ஹஸ்த1தொ3ளு பாத3த3லி ஶ்ரீகிருஷ்ண ||(6-34)

ஜினவிமோஹக பு3த்த4பா1யுக3
த3னுஜமர்த்த3ன கல்கி மேட்4ரதி

இனிது த3ஷரூபகள த3ஷகரணங்க3ளலி திளிது3 |
அனுப4விப விஷயக3ள க்ருஷ்ணா
ர்ப்பண வெனலு கைகொம்ப3 வ்ருஜினா
ர்த்தன வரஜகன்னாத2 விட்டல விஷ்வவியாபகனு ||(6-35)

மனதில் மூலரூபி நாராயணன். ஸ்ரவணத்தில் மத்ஸ்ய. கண்ணில் கூர்ம. த்வக்கினில் மூல வராக ரூபன். சுவையில் நரசிம்ம. மூக்கில் வாமன. வதனத்தில் பார்கவ ராம. கையில் வாலிபஞ்சன ராம. பாதத்தில் ஸ்ரீகிருஷ்ண. புத்த மல உறுப்பிலும்; கல்கி மூத்ர உறுப்பிலும், என இதுவே இந்த பத்யத்தின்படியான அர்த்தம்.

ஜகன்னாததாசரின் இந்த பத்யத்தின் பின்னணியில் இந்த தசாவதாரத்தின் பாடலுக்கு ஒரு ஆத்யாத்மிக அர்த்தம் இருப்பது தெளிவாகிறது. அதனை கண்டுகொண்டு, இந்த பாடலை மனனம் செய்தபோது, இது ஒரு மந்திர துல்யமான உபநிஷத் ஆகிறது.

இதுவே தாசர் கண்ட தஷோபனிஷத். தசாவதாரங்களின் உபநிஷத்.

***

## என் அக-வீட்டிற்கு வருவாயாக

பாரய்யா வெங்கடரமண ||ப

பாரய்யா வெங்கடரமண நீனெனகெ
தாருணியொளு நின்ன மூருதி தோருத ||அப

மனவெம்ப மண்டப நினகெ ஹாகி என்ன
தனுவனொப்பிஸி கைய முகிவெனய்ய |
வனஜஜ பவ ஸுர முனிகளு புஜிஸுவ
கனமஹிமனெ பாதகெரகலென்ன ஷிர ||1

லிங்கதேஹவெம்ப பவளி ஷ்ருங்கரிஸி
அங்கத நினகெ காணிகெய நீடுவெ |
மங்களமூருதி அங்கனெ ஸஹித பு
ஜங்கஷயன என்ன கங்களிகுத்ஸவவீயோ ||2

கடக கிருகெஜ்ஜெ பெண்டெகளிதலொப்புவ
உடுகெ பீதாம்பர தரளகௌஸ்துப |
பிடித ஷங்க சக்ர கர்ணகுண்டலதிந்த
கடலஷயன என்ன ஹ்ருதயதொளகெ நில்லோ ||3

ஒடெய நீனெனகெ அனாதிகாலதிந்த
ஜடவனு நானின்ன தாஸனய்ய |
கடுகருணதிந்த தாஸத்வ நீடு க
ருடகமனனெ வெங்கடேஷ என்ன மனகெ ||4

பரிய மனெயல்லவோ பரிவார உண்டு
பரமபுருஷ நின்ன ரூபகளுண்டு |
ஸிரிதேவி ஸஹிததி புரந்தரவிட்டலனெ
கருணதிந்தலி மன்மந்திரதொளகெ ||5

பகவந்தனின் ஆராதனை அக மற்றும் புற பூஜைகள் என இரு விதம். பற்பல க்ஷேத்திரங்களில் இருக்கும் விக்ரகங்களில், சாலகிராமங்களில் பகவந்தனை ஆராதிப்பது புற பூஜை. மானஸ

ரூபத்தின் ஆராதனை செய்வது அக பூஜை. இரு வித பூஜைகளையும் செய்ய விரும்பிய தாசர், உள்ளேயும் வெளியேயும் பகவந்தனின் தரிசனத்தைப் பெற விரும்பி பிரார்த்தனை செய்கிறார். திருமலையின் வெங்கடரமணனின் முன் பாடிய பாடல் இது. ஆகையால், தன் விருப்பத்தை அவனிடமே சொல்கிறார்.

பாரய்யா வெங்கடரமண

என் இதயத்திற்குள் வருவாயாக. என் மானஸ பூஜையை ஸ்வீகரிப்பதற்கு. தியான காலத்தில் உன் அருமையான மூர்த்தி, என் மனக்கண்களின் முன் நிற்குமாறு செய்வாயாக. அதுமட்டுமல்ல:

பாரய்யா வெங்கடரமண நீனெனகெ
தாருணியொளு நின்ன மூருதி தோருத

பூமியில் பற்பல விதமான சிலைகளின் மூலம் நான் உன்னை அர்ச்சிக்கலாம். அந்த அர்ச்சாமூர்த்தி, கல்லாகவோ, பஞ்சலோகமாகவோ இருக்கலாம். அத்தகைய சிலையில் உன் திவ்ய மூர்த்தியை காட்டியவாறு வாராய். என் பிரார்த்தனைக்கு செவி சாய்க்காமல் கல் ஆகவேண்டாம். அதற்குள் இருக்கும் உன் சின்மய மூர்த்தியை காட்டு. காட்டியவாறு என் இதய மண்டபத்திற்கு வா. வந்து மனதிலும் உன் மூர்த்தியை காட்டு.

மக்கள் தேவாலயங்களுக்கு செல்கின்றனர். கர்ப்பகிருஹத்தில் பூஜை செய்யப்படும் பிம்பனைக் கண்டு தூரத்தில் நின்று, பய பக்தியுடன் கை குவித்து வணங்குகின்றனர். தம் சொந்த விருப்பங்கள் ஏதாவது இருந்தால், அதனை வேண்டிக் கொள்கிறார்கள். மற்றும் அனைத்தையும் மறந்து, வீட்டுக்கு வருகின்றனர். யாரும் ஸ்வாமியின் முன் நின்று ‘என்னிடம் வா’ என்று சொல்வதில்லை.

அத்தகையவர்களுக்கு, ஸ்வாமி என்றால், நாம் கேட்கும் வரத்தைக் கொடுத்துவிட்டு, தூரத்திலேயே நிற்க வேண்டிய பொருள் ஆகும். ஆனால், தாசர், கோயிலுக்கு வந்து ஸ்வாமியையே வரவேற்கிறார்.

பாரய்யா வெங்கடரமணா. தாசர் போன்றவர்கள் அழைத்தால், ஸ்வாமி அவர்கள் பின்னாலேயே கிளம்பிவிடுகிறான்.

வியாஸதீர்த்தர் பாடி அழைத்தபோது, அவருடைய ஆராத்யமூர்த்தி கோபாலகிருஷ்ணன் நாட்டியம் ஆடியவாறே வந்தானாம். வாதிராஜர் பாடி அழைத்தபோது ஹயக்ரீவன், குதிரையாக ஆடியவாறு வந்தானாம். வைகுண்ட தாசர் பாடி அழைத்தபோது, பேலூர் சென்னகேசவன், குழந்தையாக ஆடியவாறு வந்தானாம். நம் புரந்தரதாசரே உடுப்பியில் தாம் கிருஷ்ணனைக் கண்ட அனுபவத்தை ‘திம் திம் திமிகெந்து குணிவ கிருஷ்ணன கண்டெ’ என்று பாடியிருக்கிறார்.

ஹரி குணித நம்ம ஹரி குணித - என்று மெய்மறந்து பாடியிருக்கிறார்.

ஆயிரக்கணக்கானவர் யாத்ரிகர்களாக உடுப்பிக்கு வருகிறார்கள். பல க்ஷேத்திரங்களுக்கும் செல்கின்றனர். யாருக்காவது ‘திம் திம் திமிகெந்து குணிவ கிருஷ்ண’ கிருஷ்ணன் தெரிந்தானா? அவர்கள் ‘வாராய்’ என்று கிருஷ்ணனை அழைத்ததும் இல்லை. கிருஷ்ணன் அவர்கள் முன் நாட்டியமாடியவாறு வந்ததும் இல்லை. அனைவரும், தாசரைப் போலவே திருப்பதி யாத்திரை செய்கின்றனர். மற்றவர்கள் அந்த மலையிலேயே ஸ்ரீனிவாஸனை விட்டு வந்தால், தாசர் அவனை தன் இதயத்தில் அமர்த்தி அழைத்துக்கொண்டு வருகிறார். பொதுவாக பார்த்தால் இந்த இரண்டுமே யாத்திரைதான். ஆனால், நம்முடையது சாதாரண யாத்திரை. தாசருடையது அப்படியல்ல. நமக்கு காண்பது தங்க / வெள்ளியின் மூர்த்தி. அவருக்கு காண்பது சின்மய மூர்த்தி. அனைத்து மூர்த்திகளிலும் பகவந்தனின் இத்தகைய லீலா மூர்த்திகளைக் காணும் விருப்பத்தை தாசர் இங்கு வெளிப்படுத்துகிறார். தாருணியொளு நின்ன மூருதியனு நீனெனகெ தோருத பாரய்யா. தாருணியில் அனைத்து சராசரமும் பகவந்தனின் சிலைகளே:

வித்யா வினயஸம்பன்னே பிராமணே கவி ஹஸ்தினி |
ஷுனி சைவ ஷ்வபாகே ச பண்டிதா: ஸமதர்ஷின: || (கீதை 5-18)

(வித்வாம்ஸனும், பண்பானவனும் ஆன பிராமணரில், பசுவில், யானையில், நாயில், நாய் மாமிசம் தின்னும் மக்களில் என அனைத்து இடங்களிலும் பகவந்தன் நிலைத்திருக்கிறான். அவன் அனைத்து இடங்களிலும் சமானமாக நிறைந்திருக்கிறான். அவனின் ரூபங்களில் தாரதம்யம் இல்லை). நரி, நாய், பன்றி, பல்லி, கிருமி, பூச்சிகளிலும் பகவந்தன் நிரம்பியிருக்கிறான். மரம், செடி, கொடி, கல், முட்களிலும் அவன் இருக்கிறான். காணும் கண் இருப்பவர்களுக்கு அனைத்தும் பகவந்தனின் சிலை ஆகும். இதையே பகவந்தனின் சாதாரண ரூப என்கிறார்கள்.

அனைத்து சிலைகளிலும் பகவந்தன் சாதாரணனானாலும், சாலக்ராம சிலையில் விசேஷ விபூதி ரூபம் கொண்டு இருக்கிறான். அனைத்து மரங்களில் சாதாரணன் ஆனால், அஷ்வத்த மரத்தில் விசேஷ விபூதி. அனைத்து ஜீவிகளில் சாதாரணன் ஆனால், மனிதர்களில் விசேஷ விபூதி. அனைத்து ஜடங்களில் சாதாரணன் ஆனால், பூஜைப் பொருட்களில் விசேஷ சன்னிதானம் கொண்டு இருக்கிறான்.

இவ்வாறு விசேஷ ப்ரதீகங்கள் முக்கியமாக இரு விதம். சர மற்றும் அசர. சேதனன் - சர; மற்றும் ஜட - அசர.

சர ப்ரதீகமும் இரு விதம். பெண் மற்றும் ஆண். நாம் நம் எதிரில் நடமாடும் ஆயிரக்கணக்கான ஆண் பெண்களைப் பார்க்கிறோம். பார்த்தால் போதாது. பெண்களில் பெண்ணாக, ஆண்களில் ஆணாக நிரம்பியிருக்கும் பகவந்தனை காண வேண்டும். இவர்கள் அனைவரும் பகவந்தனின் நடமாடும் பிரதீகங்கள் என்னும் அறிவு வேண்டும்.

புருஷ சரீரத்தில் வாசுதேவ மற்றும் அனிருத்த ரூபங்கள்; ஸ்த்ரீ சரீரத்தில் சங்கர்ஷண மற்றும் பிரத்யும்ன ரூபங்கள் நிலைத்திருக்கின்றன என்று அறிஞர்கள் சொல்கின்றனர். ஸ்த்ரீ புருஷர் என்னும் சர பிரதீகங்களைக் கண்டபோது இந்த சதுர்மூர்த்தியின் ரூபம் நமக்கு கண் முன்னர் வரவேண்டும். அப்போது பெண் பெண்ணாக, ஆண் ஆணாக தெரிவதில்லை. அனைத்தும் பகவன்மயமாக ஆகிவிடுகிறது. இந்த

விருப்பத்தாலேயே தாசர் கூறினார் : தாருணியொளு நின்ன மூருதி தோருத பாரய்யா..

இது சரபிரதீகத்தின் வாக்கு. ஜடமான அ-சர-பிரதீகங்கள்கூட முக்கியமாக இரு விதம். ஆஹித மற்றும் சஹஜ பிரதீகங்கள். அனைத்து வீடுகளிலும், க்ஷேத்திரங்களிலும் ஆவாகனம் செய்யப்பட்டு பூஜை செய்யப்படும் பிரதீக - ஆஹித பிரதீகம். ஸாலிகிராமத்தைப் போல சஹஜமாக எப்போதும் பகவந்தனின் சன்னிதானம் கொண்டிருக்கும் பிரதீகம் - சஹஜ பிரதீகம்.

இத்தகைய ஆஹித பிரதீகங்கள் பூஜையில் வைக்கப்பட்டு ஆவாகனம் செய்தபோது, அந்த பிரதீகங்களில் ஆவாகனம் செய்யப்பட்டு வா. அங்கு சன்னிதானம் கொண்ட உன் திவ்ய மூர்த்தியை காட்டியவாறு வா என்று தாசர் பகவந்தனை பிரார்த்தனை செய்கிறார். -- தாருணியொளு நின்ன மூருதி தோருத பாரய்யா.

அப்படியே சஹஜ பிரதீகங்களில் சன்னிதானம் கொண்டிருக்கும் உன் அந்த விசேஷ மூருதியை காட்டியவாறு வா. இந்த ரூபத்தை அகண்டரூப என்று அழைக்கின்றனர். இத்தகைய ரூப தரிசனத்தைப் பற்றி விஜயதாசரின் இந்த வாக்கு நமக்கு தெளிவைத் தருகிறது.

நிருத அகண்டரூப பேளுவெ கேளு நித்ய
ஷிரி ஷாலிக்ராமதல்லி ப்ரகடிஸி பூஜிபாகெ
பொருவானு ப்ரதிதின நஸுநகுத

சம்புடத்தைத் திறந்தால், வெறும் கருமையான சாலிகிராமத்தை கண்டால் போதாது. புன்னகையுடன் வரும் அவனுடைய அகண்ட ரூபத்தை பார்க்க வேண்டும். இத்தகைய மூர்த்தியின் தரிசனத்தை விரும்பி தாசர் பாடினார். தாருணியொளு உன் அகண்ட மூருதியை காட்டியவாறு வா. இவ்வாறு ஸ்த்ரி புருஷ, அஹித ஸஹஜ, அனைத்தும் புற தரிசனம் ஆயிற்று. கடைசியில் என் மானஸ தியானத்தில் 'நின்ன மனோமய மூருதி தோருத பாரய்யா'. பகவந்தனே நமக்கு கொடுத்த சர மற்றும் ஸஹஜப்ரதீக.

நாம் செய்து, பூஜிக்கத்தக்க ஆஹித ப்ரதீகங்களையும் சாஸ்திரகாரர்கள் பல விதமாக சொல்லியிருக்கின்றனர்.

ஆர்ச்சாதௌ ஹ்ருதயே வாsபி யதாலப்தோபசாரகை: |
ப்ரவ்யக்ஷத்யாத்ம லிங்கானி.. (பாக 11.3.56)

(பூஜை என்பது இரு விதம். பிரதிமை ஆகியவற்றில் செய்வது புற பூஜை. இதயத்தில் செய்வது அக / அந்தரங்க பூஜை. யதாசக்தி சம்பாதித்த பொருட்களால் செய்யத்தக்க இந்த பூஜையை இவ்வாறு மூன்று விதமாக பிரிக்கலாம். திரவ்ய-ப்ரதீகத்தில் பூஜை. பூ-ப்ரதீகத்தில் பூஜை. மற்றும் மானஸ ப்ரதீகத்தில் பூஜை).

இந்த மூன்று வித பூஜையையும் 'கர்மதந்த்ர' தெளிவாக விளக்குகிறது.

த்ரவ்யலிங்கம் ஷிலாத்யம் ஸ்யாத் ஆத்மலிங்கம் மனோமயம் |
அதவா ஸ்தண்டிலம் சைவ விஷ்ணோர்லிங்கம் ப்ரகீர்த்தனம் ||

(கல், பஞ்சலோகம் ஆகியவற்றால் செய்யப்பட்ட பிரதிமை திரவ்யபிரதீக. நிலத்தில் மேல் வரைந்த மண்டலம், அரிசி ஆகியவை பூ-ப்ரதீக. மனோமய ரூபமே ஆத்மப்ரதீக அல்லது மானஸ ப்ரதீக).இன்னொரு இடத்தில், ஆராதனையின் பிரதீகங்கள் எட்டு வகை என்று சொல்லப்பட்டுள்ளது.

ஷைலி தாருமயீ லௌஹீ லேப்யாssலேக்யா ச ஸைகதீ |
மனோமயீ மணிமயீ ப்ரதிமாssஷ்டவிதா ஸ்ம்ருதா || (பாக 11.27.12)

(ஷிலா விக்ரஹ, மர விக்ரஹ, பஞ்சலோக விக்ரஹ, ஓவியம், தரையில் வரைந்த மண்டலம் மற்றும் ரங்கோலி, மண் விக்ரகம், நவரத்னங்களில் செய்யப்பட்ட விக்ரகம், இவை ஏழு புற பிரதீகங்கள் ஆகும். எட்டாவது மனோமயமான மானஸ பிரதீகம். இவ்வாறு பிரதீகங்கள் எட்டு வகைப்படும்).

இன்னும் இன்னொரு இடத்தில் இந்த பிரதீகங்களின் எண்ணிக்கை 11 எனவும் உள்ளது.

ஸூர்யோsக்னிர் ப்ராஹ்மணோ காவ: வைஷ்ணவ: கம் மருஜ்வலம்

பூராத்மா ஸர்வபூதானி பத்ரபூஜாபதானி மே || (பாக 11.11.42)

(பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாஷ, சூர்ய, பிராமண, வைஷ்ணவ, பசு, சர்வபூதங்கள் மற்றும் ஆத்ம - இவை 11ம் பகவந்தனின் ஆராதனையின் அதிஷ்டானங்கள் ஆகும்).

பூமியில் வரையப்பட்ட சக்ராப்ஜ மண்டலங்களே பூமி பிரதீக. பவித்ர தீர்த்தங்களே ஜல ப்ரதீக. அர்க்ய தர்ப்பணாதிகளின் மூலம் இந்த ப்ரதீகத்தின் ஆராதனை. ‘கெரெய நீரனு கெரெகெ செல்லி’. ஹோமங்களில் ஆஹுதிகளின் மூலம் அக்னி பிரதீகத்தின் ஆராதனை. நமக்காக நின்றிருக்கும் முக்யபிராணனே வாயுப்ரதீக. ஹ்ருதயாகாஷமே ஆகாஷ ப்ரதீக. மானஸ பாவ புஷ்பங்களால் இந்த ப்ரதீகத்தின் ஆராதனை. காயத்ரி பிரதிபாத்யனான நாராயணனின் தியானமே சூர்ய ப்ரதீகத்தின் ஆராதனை.

‘ஞானி த்வாத்மையவ மே மதம்’ என்று சொல்வதைப் போல, பகவந்தனின் விசேஷ சன்னிதானத்திற்கு பாத்திரனான பிரம்மஞானியை பக்தியுடன் வணங்குவதே பிராமண ப்ரதீகத்தின் ஆராதனை. எந்த ஜாதியோ இருக்கட்டும், விஷ்ணு பக்தனானவனை நம் உறவினரைப் போல, நண்பனைப் போல காண்பது வைஷ்ணவ ப்ரதீக ஆராதனை; ஸர்வதேவதாமயியான பசுவில் கோபாலகிருஷ்ணனைக் கண்டு அன்புடன் சேவை செய்வது கோ-ப்ரதீக ஆராதனை.

அனைத்து சராசரங்களில் பகவந்தன் இருந்தாலும், அந்த அதிஷ்டானத்தின் குணதோஷங்களிலிருந்து விலகி அனைத்து இடங்களிலும் குணபூர்ணனாக இருக்கிறான் என்னும் ஸமத்வ-உபாசனையே சர்வபூத பிரதீகத்தின் ஆராதனை. ‘ஸமத்வமாராதான மச்யுதஸ்ய’. தன் தேகத்தில் தன் அந்தரங்கத்தில் நிரம்பியிருக்கும் பகவந்தனை மானஸ தியானத்தில் கண்டுகொள்வதே ஆத்மப்ரதீகத்தின் ஆராதனை.

இவ்வாறு தாருணியில் உள்ள அனந்த பிரதீகங்களில், அனந்தரூபங்களால் பகவந்தன் நிரம்பியிருக்கிறான். இந்த அனைத்து ஆராதனையின் பத்ததிகளை மனதில் வைத்துக்கொண்டு தாசர் இவ்வாறு பாடினார். தாருணியொளு

நின்ன மூருதி தோருத - அனைத்து இடங்களிலும், எனக்குள்ளும் நிரம்பியிருக்கும் உன் பிம்ப மூர்த்தியை காட்டியவாறு, என்னிடம் வா.

அடுத்த பத்தி முழுவதும், மானச பூஜையின் விதானத்தையே விளக்குகிறது. பகவந்தனை பாரய்யா என்று அழைத்த தாசர், அவனை அமர வைக்க மண்டபத்தின் தயாரிப்பினை முதல் பத்தியில் செய்கிறார்.

மனவெம்ப மண்டப நினகெ ஹாகி என்ன
தனுவனொப்பிஸி கைய முகிவெனய்ய |
வனஜஜ பவ ஸுர முனிகளு புஜிஸுவ
கனமஹிமனெ பாதகெரகலென்ன ஷிர ||1

சித்த என்னும் மனதின் இன்னொரு வகை, இங்கு 'மன' என்னும் சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளது. மனம் என்னும், ஹ்ருதய என்னும் மண்டபத்தை உனக்காக தயார் செய்திருக்கிறேன். அந்த மண்டபத்தில் வந்து அமர்வாயாக. அது மட்டுமல்ல. என் உடலை; என் அனைத்து அங்கங்களையும் உன்னிடம் ஒப்படைத்து 'இது என்னுடையதல்ல; உன்னுடையதே ஆன சொத்து. இதனை ஏற்றுக்கொண்டு அருள்வாயாக' என்று வேண்டியவாறு கை குவித்து வேண்டுகிறேன். மனோமண்டபம் அவனுடைய உள்-வீடு. மொத்த தேகமே அவனுடைய வீடு. மானஸ பூஜையின் இந்த அனுசந்தானத்தின் விவரத்தை ஜகன்னாததாசர் அழகாக வர்ணிக்கிறார்.

மது4விரோதி4ய ப1ட்டணகெ பூ
ர்வத3 க1வாடக3ளக்ஷி நாஸிக1
வத3ன ஷ்ரோத்ரக3ளெரடு த3க்ஷிண உத்த1ர த்3வார |
கு3த3 உபஸ்த2க3ளெரடு பஸ்சிம
க1த3க1ளெனிபுவு ஷட்ஸரோஜவே
ஸத3ன ஹ்ருத3யவெ மண்டப த்ரிகு3ணக3ளெ கலஷக3ளு ||(5-19)

இந்த சரீரம், மதுசூதனனின் பட்டணம். இதற்கு கிழக்கில் ஐந்து வாயில்கள். அவை - இரு கண்கள், இரு மூக்கின் துளைகள் மற்றும் வாய். மேற்கில் (பின்னால் அல்லது கீழே) இரு

வாயில்கள். மல மூத்ர உறுப்புகள். தெற்கு வாயில் - வலது காது. வடக்கு வாயில் - இடது காது. இந்த பட்டணத்தில் பகவந்தனுக்கு ஆறு வீடுகள் உள்ளன. மூலதாரத்தில் நான்கு தள தாமரை; நாபியில் ஆறு தள தாமரை; இதயத்தில் எட்டு தள தாமரை; கழுத்தில் இரு தள தாமரை; புருவ மத்யத்தில் நான்கு தள தாமரை; நெற்றியில் 12 தள தாமரை. நாடி சக்கரத்தின் இந்த ஆறு தாமரைகளே ஆறு வீடுகள். மனஸ் அல்லது இதயமே முக்ய மண்டபம். 'நிவிஷ்டோ ஹ்ருதயே நித்யம்'.

ஸத்வ ரஜஸ் தமோ என்னும் மூன்று குணங்களே இந்த மண்டபத்தின் சிகரத்தின் மூன்று உச்சிகள். இத்தகைய மனோ மண்டபத்தில், பகவந்தன் வெளிப்படுகிறான். இதையே தாசர் பாடினார். உன் பட்டணமான என் தேகத்தை உனக்கே ஒப்படைத்து, இதயம் என்னும் மண்டபம் கட்டி கை குவித்து வணங்குகிறேன்.

ஜகன்னாததாசர் கூறிய இந்த உபாசனையின் மூலம், பாகவதத்தில் இருக்கிறது.

அக்ஷிணீ நாஸிகே அஸ்ய மிதி பஞ்ச புரஸ்க்ருதா: |
தக்ஷிணா தக்ஷிண: கர்ண உத்தரா சோத்தர: ஸ்ம்ருத: ||
பஸ்சிமே இத்யதோத்வாரௌ குதசிஷ்னாவிஹோதிதே ||
(பாக 4.24.9.10)

அந்த:புரம் து ஹ்ருதயம்... (பாக 4.29.18)

(கண்கள், மூக்கு துவாரங்கள் மற்றும் வாய் இவை ஐந்து எதிர்ப்புற வாயில்கள். இடது வலது காதுகள் இட-வல வாயில்கள். கீழே இருக்கும் மல மூத்ர உறுப்புகளே பின்னால் இருக்கும் வாயில்கள். இதயமே அந்தப்புரம்).

இந்த தேகத்தை ஒப்படைக்கும் உபாசனையை இன்னொரு இடத்தில் சொல்கிறார்.

தா4து1க3ளு ஸப்தாவரண உப
வீதி4க3ளெ நாடிக3ளு மத3க3ளு
யூத1பக3ளு ஸுஷும்ன நாடி3யெ ராஜபந்தா2ன |

ஈ தனூருஹகளெ வனங்கஉளு
மாதரிஷ்வனு ப1ஞ்சரூபதி3
பாத1க1க3ளெம்பரிக3ளனு ஸம்ஹரிப த1ளவார ||(5-20)

த்வக் (ஸ்பரிசத்தின் அனுபவத்தை தரும் தேகத்தின் சூக்ஷ்ம பாகம்), சர்ம (ஸ்தூல பாகம்), மாம்ஸ, இரத்தம், மஜ்ஜை, மேதஸ் மற்றும் எலும்பு இவை ஏழு தாதுக்கள். இந்த ஏழு தாதுக்களே இந்த பட்டணத்தின் ஏழு கோட்டைகள். நரநாடிகளே குறுக்குச் சாலைகள், சிறிய வழிகள். அழகு, வாலிபம், ஸ்த்ரி, அர்த்த, வித்யா, குல, அன்ன, உத்யோக ஆகிய 8 மதங்களே (கர்வங்களே) எட்டு மத யானைகள். சுஷும்னா நாடியே பட்டணத்தின் ராஜவீதி. பஞ்சரூபனான முக்யபிராணனே நகரத்தினை காப்பவன். இத்தகைய மனோ மண்டபத்தில் பகவந்தன் இருக்கிறான். இதனையும் தாசர் சொல்கிறார். ஸப்த தாதுவினால், ஆயிரக்கணக்கான நாடிகளால் கூடிய, தேகத்தை ஒப்படைத்து, கையை குவித்து வணங்குகிறேன்.

உபாசனையின் இன்னொரு விதத்தைப் பற்றி சொல்கையில்:

இன ஷஷாங்காதி3க3ளு லகுமி
வனிதெயரஸன த்வாரபாலக
ரெனிஸுதிப்பரு மனத3வ்ருத்திக3ளெ பதா3தி1க3ளு |
அனுப4விப விஷயங்க3ளெ ப
ட்டணக்கெ ப3ப்ப பஸாத3க3ளு ஜீ
வனு ஸுவர்த1க1 க1ப்பக3ள கைகொம்ப3 ஹரி தானு ||21

இந்திரியாபிமானிகளான சூர்ய சந்திராதிகள் இந்த நகரத்தின் த்வாரபாலகர்கள். மனதின் சங்கல்ப விகல்பங்களே காவல்காரர்கள். இந்திரியங்களின் மூலம் அனுபவிக்கும் ஷப்தாதி விஷயங்களே இந்த பட்டணத்தின் வீதியில் விற்பதற்காக வைக்கப்பட்டிருக்கும் சரக்குகள். ஜீவன் இந்த கடையில் வியாபாரி. இந்த வியாபாரியிடமிருந்து கர்மத்தின் கப்ப காணிக்கையை பெற்றுக் கொண்டு, புரத்தின் தலைவனான பகவந்தன், இதய மண்டபத்தில் அமர்ந்திருக்கிறான். இது தேகத்தை ஒப்படைக்கும் இன்னொரு விதம். இதையும் தாசர் கூறியுள்ளார். இந்த கடையின் சரக்கு,

கப்பங்களுடன், தேகத்தை ஒப்படைத்து, கையை குவித்து வணங்குகிறேன்.

இதுவரை பார்த்த இரு பத்யங்களில் வந்த உபாசனையின் விதம், பாகவதத்தில் இவ்வாறு உள்ளது.

பஞ்சேந்த்ரியார்த்த ப்ரக்ஷேப: ஸப்ததாதுவரூடக: || (பாக 4.29.19)

(பஞ்சேந்திரியங்களின் விஷயங்களே கடையில் வைக்கப்பட்டுள்ள பொருட்கள். ஏழு தாதுகளே இதனை காக்கும் கூண்டுகள்).

நாராயண பண்டிதாசார்யரின் மானஸ பூஜாவிதி கிரந்தத்தில் இந்த நகரத்தின் ராஜவீதியான சுஷும்னா நாடியைப் பற்றி இவ்வாறு கூறுகிறார்.

ஷதோத்தரா து நாடிகா ஸுஷும்னா ரஷ்மிதீபிகா |
உபாஸதோ ஜனார்த்தனம் களேபரேsபிபாஸதே ||

(101வது நாடி சுஷும்னா நாடி. சூரியனின் பிரதான கிரணமான சுஷும்னா கிரணம், இந்த நாடியில் நிரம்பி ஒளிர்கிறது. பகவந்தனை உபாசனை செய்யும் சாதகனுக்கு, இந்த ஒளியின் வழி தெரிகிறது).

இந்த உபாசனையின் இன்னொரு முகம்:

உருபராக்ரம அரமனெகெ3 த3ஷ
கரணக3ளு கன்னடி3ய ஸாலுக3
ளரவிதூ3ரன ஸத்3விஹாரக்கெ1 சித்த1 மண்டபவு |
மரளிபீ3சுவ ஷ்வாஸக3ளு சா
மர விலாஸினி பு3த்தி4 தா3மோ
த3ரகெ ஸாஷ்டாங்க3 பிரணாமக3ளே ஸுஷயனக3ளு ||22

இந்த சரீரம் பகவந்தனின் அரண்மனை. 10 இந்திரியங்களே இந்த அரண்மனையின் அலங்கார கண்ணாடிகள். இவ்வாறு இது ஒரு கண்ணாடியின் உப்பரிகை. முகுட மண்டபம். மூச்சு விடுவதே விசிறி / சாமரங்கள். புத்தியே அந்தப்புரத்தின் நாட்டியவிலாஸினி. சாஷ்டாங்க நமஸ்காரமே அவனுடைய சயனம் அல்லது சயனமே

அவனுக்கு செய்யும் பிரணாம சேவை. இத்தகைய வைபவத்தின் அரண்மனையில் சித்த என்னும் மண்டபத்தில் பகவந்தன் சஞ்சரிக்கிறான். இதையே தாசர் இங்கு பாடினார். நீ சஞ்சரிக்கும் அரண்மனையான இந்த தேகத்தை ஒப்படைத்து, கை குவித்து வணங்குகிறேன்.

அரண்மனையின் இன்னொரு வித அனுசந்தானம் இவ்வாறு உள்ளது.

மாரமண னரமனெகெ3 ஸுமஹா
த்4வார வெனிஸுவ வத3னகொப்பு1வ
தோரண ஷ்மஸ்ருக3ளு கே1ஷக3ளெ ப1தாகெ1க3ளு |
ஊரி நடெ3வங்க்4ரிக3ளு ஜங்கெ4க3
ளூரு மத்4யோத3ர ஷிரக3ளா
கா3ரது3ப்ப1ரிகெ3க3ளு கோ1ஷக3ளைது3 கோணெக3ளு ||(5-23)

ஸ்ரீபதியின் அரண்மனை என்னும் இந்த தேகத்திற்கு மகாத்வாரம் போல இருக்கும் இந்த முகத்தில் இருக்கும் மீசைகளே தோரணங்கள். அதாவது ‘தோரணோऽஸ்த்ரீ பஹிர்த்வாரம்’ என்னும் அமரகோச வாக்கியத்திற்கேற்ப, தோரணங்கள் என்றால், ஊருக்கு எல்லையில் இருக்கும் வாயில் என்று பொருள். கூந்தல் மயிர்களே த்வஜக் கொடிகள். பூமியில் ஊன்றி நடக்கும் பாதங்கள், அதற்கு மேல் முழங்காலுக்குக் கீழ் இருக்கும் பகுதிகள், துடைகள், வயிறு, தலை ஆகியவையே வீட்டின் உப்பரிகைகள். அன்ன, பிராண, மனஸ், விக்ஞான, ஆனந்த என்னும் ஐந்து கோஷங்களே ஐந்து கொட்டடிகள். இந்த விதமாக நம் தேகத்தையே பரமாத்மனின் அரண்மனை என்று சிந்தித்து பூஜை செய்வது ஒரு சாதனையாகும். இவ்வாறு தேகத்தை, பகவந்தனின் பட்டணம் என்பது ஒரு முகம். அரண்மனை என்பது இன்னொரு முகம். இது பகவந்த பயணிக்கும் ரதம் என்பது உபாசனையின் மூன்றாவது முகம்.

ஈ ஷரீரவெ ரத பதாக சு
வாஸகளு புண்ட்ரகளு த்வஜ சிம்
ஹாசனவெ சித்தவு சுபுத்தியெ கலஷ சன்மனவெ |

பஷ குண தண்டத்ரயகளு ஷு
பா ஷுபத்வய கர்மசக்ர ம
ஹா சமர்த்தாஷ்வகளு தஷ கரணங்களெனிசுவுவு ||(5-24)

இந்த சரீரமே ரதம். நாம் தரித்திருக்கும் ஆடைகளே ரதத்தின் கொடிகள். 12 கோபிசந்தன நாமங்களே கருட சின்னத்தால் கூடிய த்வஜம். நம் சித்தமே பரமாத்மன் அமரும் சிம்ஹாசனம். பகவத் விஷயத்தில் ஈடுபடும் புத்தியே ரதத்தின் மேல் இருக்கும் கலசம். பகவத் பாதாரவிந்தங்களில் இருக்கும் மனமே குதிரையின் லகான் கயிறுகள். 'ஸன்மனவுபாஷ' என்று சொல்கிறார். பாஷ என்றால் கயிறு. இதை லகான் கயிறு என்று ஏன் அர்த்தம் கொள்ளவேண்டும் என்றால், பாகவத வாக்கியத்தில் 'மனோரஷ்மிபி:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஆதாரத்தினாலும், ரதத்திற்கு வெறும் கயிறின் சம்பந்தம் இல்லாததாலும், மேற்சொன்ன அர்த்தத்தையே சொல்ல வேண்டியதாகிறது. ஸத்வரஜஸ்தமோ குணங்களே தண்டங்கள் (கொம்பு / குச்சிகள்). புண்ய பாவங்களே சக்கரங்கள். ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் பத்து - இவையே மிகவும் புத்திசாலிகளான / திறன்களைக் கொண்ட குதிரைகள்.

இந்த தேக ரதத்தின் உபாசனையின் விதத்தை முதன்முதலில் நாம் உபநிஷத்களில் காண்கிறோம்.

ஆத்மானம் ரதினம் வித்தி ஷரீரம் ரதமேவ ச
புத்திம் து ஸாரதிம் வித்தி மன: ப்ரக்ரஹமேவ து ||

இந்திரியாணி ஹயானாஹு: விஷயாம்ஸ்தேஷு கோசரான் ||
(காடக 1.3, 3-4)

(இந்த சரீரத்தை ரதம் என்று சிந்திக்க வேண்டும். பரமாத்மனே அதன் தலைவன். புத்தி சாரதி. மனஸ் கடிவாளம். இந்திரியங்களே குதிரைகள். விஷய பிரபஞ்சமே அவை ஓடியாடும் இடங்கள்).

பாகவதம் இதனை மேலும் விளக்குகிறது.

தேஹோ ரதஸ்விந்த்ரியாஷ்வ: ஸம்வத்ஸரவயோகதி: |

த்விகர்ம சக்ரஸ்த்ரிகுண த்வஜ: பஞ்சாஸூ பந்துர: ||

மனோரஷ்மர்புத்திஸூத: ஹ்ருன்னீடோ த்வந்த்வகூபர: |
(பாக. 4.29.18)

(தேகமே ரதம். இந்திரியங்களே குதிரைகள். ஆண்டுக்கு ஆண்டு அதிகரிக்கும் வயதே இதன் வேகத்தின் ஓட்டம். இரு கர்மங்களே இதன் சக்கரங்கள். மூன்று குணங்களே இதன் பதாகைகள். பஞ்ச பிராணங்களே வண்டியின் அழகினை அதிகரிக்கும் அலங்காரங்கள். இதயமே அமர்ந்திருக்கும் பகவந்தனின் இருப்பிடம். சுக துக்கங்களின் த்வந்த்வமே நுகத்தடிகள் ஆகும்).

இதய மண்டபத்தில் பகவந்தனின் தியானத்தின் விதத்தை மஹா நாராயண உபநிஷத் இவ்வாறு சொல்கிறது.

தஹ்ரம் விபாப்மம் பரவேஷ்மபூதம்
யத் பும்டரீகம் புரமத்ய ஸம்ஸ்தம் |
தத்ராபி தஹ்ரம் ககனம் விஷோக:
தஸ்மின் யதந்தஸ்ததுபாஸிதவ்யம் ||

(இந்த தேகம் என்னும் பட்டணத்தின் நடுவில் ஹ்ருதய கமல என்னும் பகவந்தனின் சிறிய வீடு இருக்கிறது. இது பாதத்தின் நிழல் படாத பவித்ரமான இடம். அந்த தாமரையின் நடுவே சிறிய ஹ்ருதயாகாஷ இருக்கிறது. அங்கு பகவந்தன் இருக்கிறான். இப்படியாக அவனை உபாசனை செய்து அவனின் தரிசனம் / அருள் பெற வேண்டும்).

நாராயண பண்டிதர் யோகதீபிகாவில் இந்த ஆராதனையை இவ்வாறு சொல்கிறார்.

ஹ்ருத்பத்ம விஷ்டாரஸீனம் உத்யதர்கோஜ்வல ப்ரபம் |
ஸம்பாவ்ய சார்க்ய பாத்யாத்யை: அஞ்சீதப் கந்தபுஷ்பகை: ||
(யோகதீபிகா 35)

(உதிக்கும் சூரியனைப் போல ஒளிரும் பகவந்தன், இதய கமலத்தின் பீடத்தில் அமர்ந்திருக்கிறான். அவனை அர்க்ய பாத்யங்களால், கந்த புஷ்பாதிகளால் அர்ச்சிக்க வேண்டும்).

மானஸ பூஜாவிதி'யில் இதனை மேலும் விவரமாக சொல்லியிருக்கின்றனர்.

வரோऽஅபி ரத்ன மண்டபோ விபாதி தத்ர பேஷலம் |
அனந்தகாந்தி காந்தஸன் மணீந்த்ர மாலிகாஸ்புரன் ||

(இந்த அகத்தில் திவ்ய மண்டபம் ஒன்று அழகாக ஒளிர்கிறது. பளபளக்கும் எண்ணிக்கையற்ற மணிகளின் மாலைகளால் இந்த மண்டபம் ஒளிர்கிறது).

இஹாபி ரத்ன நிர்மிதம் ஸரோரஹம் மனோரமம் |
சுதீவ்ரமச்சனச்சதம் விகஸ்வரம் விராஜதே ||

(இந்த மண்டபத்தில் மிகவும் அழகான மணிமய தாமரை இருக்கிறது. மலர்ந்த இதழ்களால் இது ஒளிர்கிறது).

விபாப்மதாம் ச தப்ரதாம் பரச்ய வேஷ்மபூததாம் |
புரஸ்ய மத்யஸம்ஸ்திதாம் மனீஷிண: ஷ்ருதௌ ஸ்புடம் ||

உதாஹரந்தி யான் குணான் ததேததுத்தமோத்தமம் |
ஹ்ருதம்புஜம் திவாகர ப்ரகாரதீதிதிஜ்வலத் ||

(நாராயண ஸ்ருதியில் ஞானிகள் இதையே விபாஸ்ம (பாவ ஸ்பர்சம் இல்லாதது), தப்ர (சூக்ஷ்மமானது), பரவேஷ்மபூத (பகவந்தனின் இருப்பிடம்), மற்றும் பரமத்யஸம்ஸ்த (தேகம் என்னும் புரத்தின் நடுவில் இருக்கும்படியானது) - என்று பற்பல விதங்களில் போற்றுகின்றனர். உத்தமோத்தமமான இந்த ஹ்ருதய கமலம், தியானத்தினால் புலப்படுகிறது).

ஆயுஷ்ய கர்ணிகாபுடே ஸுதீப்தரத்ன விஷ்பரம் |
சகாஸ்தி தத் பர: புமான் அதிஷ்டிதோऽதிஷோபனம் ||

(இந்த தாமரையின் நடுவில் இருக்கும் கோஷத்தில், பளபளக்கும் முத்து இழைத்த சிம்மாசனம் இருக்கிறது. அழகான இருப்பிடமான இந்த ஹ்ருதய பீடத்தில் பகவந்தன் அமர்ந்திருக்கிறான்).

இது மனம் என்னும் மண்டபத்தில் பகவந்தனை அமர்த்தி, தேகத்தை அவனுக்கு அர்ப்பிக்கும் விதானம். இந்த மானஸ பூஜையில், இந்த புற-தேகம் பட்டணமாக, அரண்மனையாக, ரதமாக - என பல்வேறு விதங்களில் பகவந்தனுக்கு அர்ப்பணம் ஆகிறது. அனைத்து வித அர்ப்பணங்களையும் மனதில் செய்துகொண்டு தாசர் பாடியது - என்ன தனுவனொப்பிஸி கய்ய முகிவெனய்ய.

இத்தகைய உபாசனையானது மனிதர்களுக்கு மட்டும் ஆனதல்ல. பிரம்மாதி தேவதைகளும் தம் மொத்த வாழ்க்கையை, பகவந்தனின் சேவையிலேயே ஈடுபடுத்தியிருக்கின்றனர் என்கிறது அடுத்த பத்தி - வனஜஜ பவ ஸுரமுனிகளு பஜிஸுவ கனமஹிமனெ.

வன என்றால் தண்ணீர். வனஜ என்றால் தண்ணீரில் பிறந்த தாமரை. இங்கு பகவந்தனின் நாபிகமலம். அதில் பிறந்த பிரம்மன் வனஜஜ. பவ என்றால் ருத்ரதேவர். பிறகு அனைத்து சுரர்கள், முனிகள், பிரம்ம ருத்ரர், அவருக்குப் பிறகான இந்திராதி சுரர்கள். நாரதாதி முனிகள்கூட பஜிக்கும், வணங்கும், ஆராதிக்கும் மகாமகிமன் - பகவந்தன்.

இந்த வாக்கிற்கு இன்னொரு அர்த்தமும் உள்ளது. வனஜஜபவராத - என்றால், பிரம்மஸம்பவரான அனைத்து சுரர்கள், முனிகள் மற்றும் அனைத்து ஜீவகோடிகளால் பூஜிதமான பகவந்தனே, உன் பாதங்களுக்கு என் தலை வணங்கட்டும். பிரம்மாதிகளுக்கும் சிக்காத உன் மகிமையின் உயரம் அறிந்து தலை தனக்குத்தானே சகஜமாக வணங்கட்டும் - நதே மஹித்வமன்வஷ்னுவந்தி.

தனுவு நின்னது. ஜீவனவு நின்னது. என்று பகவந்தனுக்கு தம் தனு மனங்களை அர்ப்பித்த பிறகு, இது அவனுடையதே வீடு என்று அறிந்தபின், ‘நான்’ என்னும் கர்வம் வருவது சாத்தியம் இல்லை. இந்த அறிவு வருவதற்கு முன்னர் தூக்கியிருந்த தலை, இப்போது உன் பாதங்களில் விழட்டும். வாமனனாக வந்தபோது தானம் கொடுக்கும் கர்வத்தினால் தூக்கியிருந்த பலியின் தலை, நீ

த்ரிவிக்ரமனாக வளர்ந்தபோது, குனிந்ததைப் போல, என் தலையும் குனியட்டும். என் தலையின் மேல் உன் ஸ்ரீபாதத்தின் ரக்ஷை இருக்கட்டும்.

முதல் பத்தியில் வந்த மானஸபூஜையின் விவரணைகளே அடுத்தும் வருகிறது.

லிங்கதேஹவெம்ப பவளி ஷ்ருங்கரிஸி
அங்கவ நினகெ காணிகெய நீடுவெ
மங்கள மூருதி அங்கனெ ஸஹித ப
ஜங்கஷயன என்ன கங்களிகுத்ஸவவீயோ ||

நீ அமர்ந்திருக்கும் கர்ப்பகிருகம் மனஸ். லிங்கதேகமே அதன் ஆவரணம். மண்டபத்தை அழகாக்கியதைப் போல இந்த ஆவரணத்தையும் அலங்கரிக்கிறேன். வா. இந்த கர்ப்ப மண்டபத்தில் நிலைத்திரு. என்கிறார் தாசர்.

முதல் பத்யத்தின் அர்த்தத்திற்கு வேறொரு புதிய பரிமாணத்தைக் கொடுப்பதாக இந்த பத்தி இருக்கிறது. மனவெம்ப மண்டப என்றால் - வெறும் அந்த:கரணத்தின் மண்டபம் அல்ல. அகத்தில் இரு வித மனம் உண்டு. ஒன்று ஜடமான அந்த:கரணம். இன்னொன்று ஜீவஸ்வரூபமே ஆன சின்மயமான மனஸ். லிங்கதேகம் என்பது, ஜீவ ஸ்வரூபத்தை பிடித்திருக்கும் ஆவரணம். அது அந்த:கரணத்தின் ஆவரணம் அல்ல.

ஆத்மனை சுற்றிக் கொண்டிருப்பதால், ஆத்ம ஸ்வரூபமான மனதிற்கு ஆவரணமாக ஆகிறது.

ஆகையால் தாசர், ஆத்யாத்மத்தின் ஆழத்திற்கு இறங்கி இவ்வாறு சொல்கிறார். என் ஆத்மத்தின் உள்ளே அந்தராத்மனாக பிம்பரூபமாக நீ இருக்கிறாய். 'பிம்போஸி பிரதி பிம்போஸ்மி'. என் ஜீவனுக்கும், ஜீவனின் ஜீவனாக நின்றிருக்கிறாய். 'ஜீவாந்தர்யாமகோ விஷ்ணுராத்மனாமா ப்ரகீர்த்தித:'. ஸாக்ஷி ஸ்வரூபமான சின்மய மன என்னும் மண்டபத்தைக் கட்டி, உன்னை அங்கு ஆராதிக்கிறேன். லிங்கதேகம் என்னும்

ப்ரதட்சிணையை செய்து, உன்னை சுற்றுகிறேன். என் மன என்னும் சாக்ஷிக்கு தரிசனம் கொடு - வா.

மனஸ் இந்திரியமானது ப்ராக்ருதமான இந்திரியமாகும். அது அப்ராக்ருதமான பகவந்தனை காண்பதில்லை. தியானத்தில் காணும் மூர்த்திகூட மனஸ் நிர்மாணித்த மூர்த்தியே தவிர, பகவந்தனின் சகஜரூபம் அல்ல. வெளியே காணும் ரூபம் ஷிலாரூபம். உள்ளே காணும் ரூபம் - மனோமய. நம் ஸ்வரூபமே ஆன அப்ராக்ருத மனஸ் மட்டுமே பகவந்தனின் தரிசனத்தை பெறத்தக்கது. இவ்வாறு தியானம் என்னும் நிலையில், மனம் என்னும் மண்டப என்றால், அது அந்த:கரணத்தின் மண்டபம். சாட்சாத்காரத்தின் (தரிசனத்தின்) நிலையில் மனம் என்னும் மண்டப என்றால், அது ஸ்வரூபமன என்னும், ஸாட்சி இந்திரிய என்னும் மண்டபம். இந்த கடைசி நிலையில் நின்று, தாசர் இந்த பாடலைப் பாடுகிறார் என்பதற்கு சாட்சி 'லிங்கதேகவெம்ப பவளி ஷ்ருங்கரிஸி' என்னும் வாக்கு.

நம் கண்ணிற்குத் தெரியும் இந்த தேகம் ஸ்தூல தேகம். இதற்குள் இன்னொரு ஸூக்ஷ்ம தேகம் உண்டு. இதனை யாதனா-ஷரீர என்கிறார்கள். அனிருத்த ஷரீரம் என்கிறார்கள். இறந்தபோது, ஸ்தூல தேகம் விழுந்துவிடுகிறது. யாதனா தேகத்தினால் அவன் இருக்கிறான். ஸ்வர்க- நரகங்களின் சஞ்சாரம், புண்ய பாவங்களின் போகம் ஆகியவை, இந்த யாதனா ஷரீரத்தினாலேயே. இதற்குள் இன்னும் சூக்ஷ்மமான, ஜீவனை சேர்ந்திருக்கும் மூன்றாம் உறை ஒன்று இருக்கிறது. இதுவே லிங்க சரீரம். யாதனா ஷரீரத்தை போக்கிக் கொண்டு, ஜீவன் முக்தனான ஆத்ம, ஸத்யலோகத்தில் மோட்சத்தின் வரிசையில் நிற்கும்போதும், இந்த லிங்கதேகம் அவனை சுற்றிக்கொண்டே இருக்கிறது. இதற்குள் இருப்பது ஜீவனின் ஸ்வரூப தேகம். மோட்சத்தில் இருப்பது இது மட்டுமே. இந்த ஸ்வரூப தேகமே இந்திரியமாக, மனஸ்ஸாக, அனைத்து க்ரியைகளையும் செய்யத்தக்க, அனுபவிக்கக்கூடிய சாட்சி. இதையே இங்கு 'மனவெம்ப மண்டப' என்கிறார்.

ஸ்வரூப மனதிற்கு மட்டுமே பகவந்தனின் தரிசனம் கிடைக்கிறது என்னும் வாக்கு உபநிஷத்தில் வந்திருக்கிறது.

ஆத்மேந்திரியமனோயுக்தம் போக்தேத்யாஹுர் மனீஷிண: ||
(காடக 1.3.4)

(ஸ்வரூபபூதமான இந்திரிய மனஸ்களால் கூடிய ஜீவனே, பகவத் ஸாட்சாத்காரத்தின் ஆனந்தத்தை அனுபவிக்க முடியும் என்று ஞானிகள் சொல்கின்றனர். )

உபநிஷத்தின் இந்த வாக்கியத்திற்கு உபாசனையின் வழியின்படி, இந்த அபூர்வமான அர்த்தத்தை கொடுத்தவர் வாமன பண்டிதாசார்யர். இன்னும் வெளியிடப்படாத அவரது அபூர்வ வியாக்யானத்தில் வந்திருக்கும் வாக்கியம் இது. 'ஸ்வரூப பூதைந்திரியைர்னஸா ச த்யானயோகீ ஸம்ஸ்திதம் நித்ய ஸுக சோக்தேத்யாஹு:'.

லிங்க சரீரத்தின் ஸ்வரூபத்தை பாகவதம் இவ்வாறு சொல்கிறது.

ஏகம் பஞ்சவிதம் லிங்கம் த்ரிவ்ருத் ஷோடஷ விஸ்தரம் |
ஏஷ சேதனயா யுக்தோ ஜீவ இத்யபிதீயதே || (பாக 4.28.78)

(ஒன்றேயான லிங்க ஷரீரமானது - பஞ்ச ஞானேந்திரியங்களின், பஞ்ச கர்மேந்திரியங்களின், பஞ்ச பிராணங்களின் செயல்களை செய்வதால், பஞ்சவித எனப்படுகிறது. த்ரிகுணமயமான இந்த லிங்க சரீரத்தில் சூக்ஷ்ம ஸ்வரூபத்தின் பஞ்ச பிராணங்கள், தஷேந்திரியங்கள் மற்றும் மூல மனஸ் இவ்வாறு 14 அம்சங்கள் சேர்ந்திருக்கின்றன. இதனால் மூடப்பட்ட சேதனத்தையே ஜீவ என்கிறார்கள்).

இவ்வாறு இந்த ஸ்தூல தேகத்தின் அங்கங்கங்கள் அனைத்தும், ஆத்ம ஸ்வரூபத்தில் நிலைத்திருக்கும் பிம்பரூபத்திற்கு அர்ப்பிதம் என்கிறது அடுத்த பத்தி. அங்கவ நினகெ காணிகெய நீடுவெ.

ஷரீரம் அங்க; கண், காது ஆகிய அவயவங்களும் அங்க. 'அங்கம் ஷரீரே஽வயவே'. இந்த அங்கத்தை உன் பட்டணமாக, உன் அரண்மனையாக, உன் ரதமாக உனக்கு அர்ப்பிக்கிறேன். அது மட்டுமல்ல, ஒவ்வொரு அங்கத்தையும், அதன் உபகரணங்களான உனக்கே காணிக்கையாக சமர்ப்பிக்கிறேன். ஏனெனில், நீயே இதன்

முதலாளி. நான் வாடகைக்கு இருப்பவன். இங்கு விளையும் அனைத்தும் உனக்கே அர்ப்பிதம்.

இந்த அங்கங்களை எந்த விதத்தில் பகவந்தனின் உபகரணங்களான உபாசனை செய்ய வேண்டும் என்பதை ஹரிகதாம்ருதசாரத்தின் பின்னணியில் நாம் முன்னர் பார்த்தோம். அவை அனைத்தையும் சேர்த்து, தாசர் ஒரே வாக்கியத்தில் இவ்வாறு கொடுக்கிறார். அங்கவ நினகெ காணிகெய நீடுவெ.

இந்த அரண்மனைக்கு பகவந்தன் வந்தபோது, அவன் ஒருவனே வருவதில்லை. அரசன் வரும்போது, அரசியும் உடன் வருகிறார் என்கிறார் தாசர்.

மங்கள மூருதி அங்கனெ ஸஹித பு
ஜங்கஷயன என்ன கங்க்ளிகுத்ஸவவீயோ ||

சுஷும்னாவில் தொடங்கி, குண்டலினியானது, சஹஸ்ராரத்தில் தலை தூக்கி நிற்கும்போது, பகவந்தனின் சாட்சாத்காரம் ஆகிறது. அதற்காகவே அவன் புஜங்கஷயன. அத்தகைய ரூபமானது, அகக் கண்களுக்கு தெரிவதே ஒரு மகோத்ஸவம். ஆனந்தரூபனான அந்த மங்கள மூருதியை காண்பதே ஒரு அபூர்வ ஆனந்தத்தின் க்ஷணம். நடுவே மங்களமூருதி நாராயணன்; இட வலங்களில் அங்கனெயரான ஶ்ரீதேவி பூதேவியர்களை ஆலிங்கனம் செய்து நின்றிருக்கிறார். ஸாதகன் காண விருப்பப்படும் பகவந்தனின் ரூபம் இதுவே.

இன்னொரு வித தியானம் செய்பவர்கள் உண்டு. துடையில் ஶ்ரீதேவி. இதயத்தில் ஶ்ரீவத்ஸ சின்னமாக லட்சுமிதேவி. இது ரமாதேவியுடையதே ஆன இரு ரூபங்கள். தத்வ தீபிகாவில் த்ரிவிக்ரம பண்டிதாசார்யர் இதனை தெளிவாக சொல்லியிருக்கிறார். அங்கம் ஶ்ரீதா ஶ்ரீ: | வக்ஷஸி லக்ஷணபூதா லக்ஷ்மீ: ||

ஶ்ரீரூபத்தின் இன்னொரு பெயர் ஹ்ரீ. நாராயண உபநிஷத் இந்த ரூபங்களை ஹ்ரீம் மற்றும் லட்சுமி என்றே அழைக்கிறது. ஹ்ரீஸ்ச தே லட்ச்மீஸ்ச பத்ன்யௌ ||

ஸ்ரீ-பூ என்றால் என்ன? ஸ்ரீ-லட்சுமி என்றால் என்ன? ஹ்ரீ-லட்சுமி என்றால் என்ன? ரூபங்கள் பலவாக இருந்தாலும் மங்களரூபிணியானவள் ஒருவளே அல்லவா? ஆகையால், ‘அங்கனெ ஸஹித பாரய்யா, பந்து கங்களிகுத்ஸவ வீயய்யா’ - அதாவது, அனைத்தையும் சொல்லியதாக ஆயிற்று.

ஸ்ரீ மற்றும் பூ-ரூபங்களின் தியானத்தை நாராயண பண்டிதர் ‘மானஸ பூஜா விதி’யில் விளக்குகிறார்.

பயோப்திகன்ய காதரா கராவகூடமத்யமம் ||

(கடலின் கன்யையான ஸ்ரீதேவி மற்றும் பூதேவியை, தன் கையால் பிடித்திருக்கும் நாராயணனை, ஹே என் மனமே, எப்போதும் நினைத்திரு).

கையில் தாமரையைப் பிடித்திருக்கும் ஸ்ரீ-பூ-ரூபங்களின் இன்னொரு விதமான தியானத்தை அவர் இவ்வாறு விளக்குகிறார்.

ஸ்ரீயோதயத்திவாகர வ்ரஜஸ்ரீயா நிஷேவிதம் |
ததைவ சாருலீ லயா ஹரின்மணிஸ்ரீயா புவா ||

(பல ஸூர்யர்கள் சேர்ந்து உதித்ததைப் போல ஒளிரும் ஸ்ரீதேவி ஒரு புறம். நீலமணியைப் போல ஒளிரும் லீலாமயியான பூதேவி ஒரு புறம். ஹே என் மனமே. கமலபாணியரான இவர்களின் நடுவே நின்றிருக்கும் நாராயணனை நினைத்திரு).

ஆசார்ய மத்வர், தந்த்ரஸார ஸங்க்ரஹத்தில் ஸ்ரீ-பூ-ரூபங்களின் தியானத்தை இதே ரீதியில் விளக்குகிறார். ஸ்ரீ மற்றும் லட்சுமி ரூபங்களின் தியானத்தின் விதத்தை ஆசார்யரே த்வாதஸ ஸ்தோத்திரத்தில் இவ்வாறு கூறுகிறார்.

ஜாம்பூனதாம் பராதாரம் நிதம்பம் சிந்த்யமீஷிது: |
ஸ்வர்ணமஞ்சீர ஸம்வீதம் ஆரூடம் ஜகதம்பயா ||

ஸ்மரணீயமுரோ விஷ்ணோ: இந்திரா வாஸமுத்தமை: ||

(தங்கமயமான ஆடை மற்றும் தங்கமயமான மேல் ஆடையுடன் கூடியதாக இருக்கிறது ஸ்ரீஹரியின் இடுப்பு. ஸ்ரீலட்சுமி, அவனுடைய மடியில் அமர்ந்து, தன் கையால் அவனுடைய இடுப்பினை சுற்றி வளைத்தவாறு அமர்ந்திருக்கிறாள். முக்தியை விரும்புபவர்கள் இத்தகைய ரூபத்தை சிந்திக்க வேண்டும். அனைத்து இடங்களிலும் இருப்பவனான ஸ்ரீவிஷ்ணுவின் மார்பு, ஸ்ரீலட்சுமியின் இருப்பிடமாக இருக்கிறது).

இவ்வாறு நாராயணனுடன், ஸ்ரீதத்வத்தின் உபாசனையும் செய்ய வேண்டும். ஏனெனில், அதுவும் மோட்ச சாதனைகளில் ஒன்று. 'ஸ்ரீயம் வஸானா அம்ருதத்வ மாயன்'. பகவந்தனை ஸ்ரீபதி என்று உபாசனை செய்தால், இருவரின் உபாசனையும் ஆயிற்று. அதையே 'அங்கனெ ஸஹித' - அங்கனெயருடன் கூடி - என்று தாசர் குறிப்பிடுகிறார்.

ஆசார்ய மத்வரின் ஸ்ரீஸ்துதி இந்த விஷயத்தில் தெளிவாக இவ்வாறு சொல்கிறது.

விஷ்வ ஸ்திதி பிரளய ஸர்க்க மஹாவிபூதி
வ்ருத்திபிரகாஷ நியமாவ்ருதி பந்த மோட்சா: |
யஸ்யா அபாங்க லவமாத்ரத ஊர்ஜிதா ஸா
ஸ்ரீர்யத் கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ||

யாருடைய கடைக்கண் பார்வையாலேயே உலகத்தில் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவை நடக்குமோ, யாருடைய சக்தி பிரம்மாதி தேவதைகளைவிட அதிகமாக இருக்கிறதோ, அத்தகைய சக்தியைக் கொண்ட ஸ்ரீலட்சுமிதேவிக்கு, அந்த சக்தியானது, அஜிதனின் அன்பு நிறைந்த பார்வையாலேயே கிடைத்திருக்கிறது. அத்தகைய அஜிதனை நான் வணங்குகிறேன்).

லட்சுமியின் கருணைப் பார்வையாலேயே மோட்சம் கிடைக்கிறது என்னும் வாக்கினை இந்த ஸ்ருதி சொல்கிறது. இங்கு ஒரு சிறப்பு இருக்கிறது: இதன் பெயர் ஸ்ரீஸ்துதி. ஆனால், இங்கு சொல்லியிருப்பது ஸ்ரீதேவிக்கும் வலிமையைக் கொடுக்கும் ஸ்ரீஹரியின் ஸ்துதி. இது ஸ்ரீஸ்துதியே என்றாலும் வெறும் ஸ்ரீதத்வத்தின் ஸ்துதி மட்டும் அல்ல. ஸ்ரீபதியான ஸ்ரீஹரியின்

ஸ்துதி. இவ்வாறு இதனை ஸ்ரீஸ்துதி என்று அழைத்து, முழு ஸ்லோகத்திலும், ஸ்ரீபதியான ஸ்ரீஹரியை வணங்கி, முடிப்பதன் மூலம், ஆசார்யர் ஸ்ரீதத்வத்தின் உபாசனையின் சரியான விதத்தை நமக்கு சொல்லியிருக்கிறார்.

ஆசார்யரே, கீதாபாஷ்ய தாத்பர்யங்களில் உதாரணம் சொல்லியிருக்கும் அனேக ஸ்ருதி புராணங்களும், இந்த வாக்கினை தெளிவாக்குகிறது.

உபாஸ்ய தாம் ஸ்ரீயமவ்யக்த ஸஞ்ஞாம்
பக்த்யா மர்த்யோ முச்யதே ஸர்வபந்தை: ||
(ஸாமவேத, அக்னிவேஷ்ய ஷாகை)

(அவ்யக்த நாமகளான ஸ்ரீதேவியை பக்தியுடன் உபாசனை செய்யும் நரன், அனைத்து சம்சார பந்தனங்களிலிருந்து விடுபடுகிறான்).

உபாஸிதா முக்திதா ஸத்ய ஏவ
ஹ்யஸ்யேஷானா ஜகதோ விஷ்ணு பத்னீ

(உலகின் தலைவியான லட்சுமியை விஷ்ணுபத்னி என்று உபாசனை செய்தால், அவள் மகிழ்ந்து முக்தியை அருள்கிறாள்).
ஞாத்வா ஸ்ரீயம் தத்பரமம் தத்பதிம் புருஷோத்தமம் |
விக்ஞாயோபாஸதே நித்யம் தே ஹி யுக்ததமா மதா: ||
(பரமஸ்ருதி)

ஸ்ரீதத்வத்தை, அவளுக்கும் முந்தைய தத்வமான நாராயணனையும் அறிந்து, ஸ்ரீதேவியையும் அவளுடைய பதியான நாராயணனையும் சேர்த்து, நிரந்தர உபாசனை செய்பவர்கள், சிறந்த யோக சாதகர் ஆவர். ஏனெனில்:

விஷ்ணுனா ஸஹிதா த்யாதா ஸாऽபி துஷ்டிம் பராம் வ்ரஜேத் |
அன்யதா து புனர்விஷ்ணோ: ஸ்ரீபதித்வேன சிந்தனம் ||

அச்சித்ரமேவ கர்தவ்யம் இதி முக்திஷ்சிராத் பவேத் ||
(பரமஸ்ருதி)

(விஷ்ணு உடனேயே, விஷ்ணு பத்னி என்றே, அவளை தியானிப்பது, அவள் விரும்பும் வழியே ஆகும். அவளை ஸ்வதந்த்ரமாக (தனியாக) உபாசனை செய்தாலும் அதனால் முக்தி ஆவதில்லை. அத்தகைய மஹாமஹிமளான ஸ்ரீதேவிக்கும் பதி என்று நாராயணனை அகண்டமாக ஆராதித்தே முக்தி அடைய வேண்டும். ஆகையால் ஸ்வதந்த்ரமாக அவளை தியானித்தால், முக்திக்கு எதிரான விஷயமே நடக்கும்).

புராணம் இவ்வாறு இதனை சொல்கிறது.

ஸ்ரீ: ஸுதுஷ்டா ஹரேஸ்தோஷம் கமயேத் க்ஷிப்ரமேவ து |
அதுஷ்டா ததுஷ்டிம் ச தஸ்யாத் த்யேயைவ ஸா ஸதா ||

(ஸ்ரீதேவி அருளினால், ஹரியும் வேகமாக அருளுமாறு செய்கிறாள். அவள் விலகினால், ஹரியும் விலகுமாறு செய்கிறாள். ஆகையால், அவளை பகவந்தனுடனேயே உபாசனை செய்து, அவளின் அருளைப் பெற வேண்டும்).

ஆக, இதுவே மொத்த கருத்தாகும். வெறும் ஸ்ரீதத்வத்தின் உபாசனையினால் ஸ்ரீதேவியும் திருப்தி அடைவதில்லை. ஹரியும் திருப்தி அடைவதில்லை. அவளை உலக நாயகி என்று அறிந்தால் போதாது. ஸ்ரீஹரியை உலகத்தின் நாயகன் என்று அறிந்தபோதே, அவளுக்கு பெருமை. அதற்காக அவள் விஷ்ணுபத்னி - விஷ்ணு லட்சுமிபதி என்னும் உபாசனையையே சரியான வழியாகும். அதனையே தாசர் இவ்வாறு கூறுகிறார்: அங்கனெ ஸஹித புஜங்கஷயன என்ன கங்களிகுத்ஸவவீயோ.

இதில் ஒரு ரகசியம் உண்டு. இந்த உலகம் 16 கலைகளைக் கொண்டது. 16ம் கலையே ஜீவன். அவனுக்கு சுற்றிலும் வேலியாக 15 ஜட கலைகள் உள்ளன. ஸ்ரத்தை (நம்பிக்கைகள்), ஆகாஷ, வாயு, அக்னி, ஜல, பூமி (ஆகிய பஞ்சபூதங்கள்), இந்திரியங்கள், (ஐந்து ஞானேந்திரிய மற்றும் ஐந்து கர்மேந்திரியங்கள்), மனஸ், அன்ன (ஆகார), வீர்ய (தைஹிக சக்தி முதலியன), தபஸ், மந்த்ர (பேச்சு), கர்ம (செயல்), லோக (ஆஸ்தி, சொத்து), நாம (பெயர், புகழ்).

இந்த 15 வேலிகளின் ஆவரணத்திலேயே, 16ம் கலையான ஜீவனின் சஞ்சாரம் நடக்கிறது. 15 ஜடங்கள், 16ம் ஜீவனுடன் சேர்ந்து, இந்த 16ஐயும் சேர்த்ததான மொத்தமே, சேதனாசேதனாத்மகமான ஜகத். இதன் பின், உலக நாயகியான தாய் ஸ்ரீதேவி - 17ம் தத்வ. தந்தையான நாராயண 18ம் தத்வ. 15 ஜட வேலிகளையும் தாண்டி, ஜீவன், 17,18ம் தத்வத்தின் பக்கம் பார்க்கவேண்டும். 17 உடன் 18ஐயும் தியானம் செய்து, அவன் அருளைப் பெற வேண்டும். இதை விட்டு, 17னை முழுமையாக விட்டு, 18க்கு போவது, சாத்தியம் இல்லை. அப்படியே 18ஐ மறந்து, 17ம் உபாசனையிலேயே காலம் கழிப்பது சாத்தியம் இல்லை. அதற்காக, 16மவன் செய்ய வேண்டிய 17,18ன் மொத்த உபாசனையை தாசர் இவ்வாறு கூறினார். அங்கனெ ஸஹித பாரய்யா. வந்து உன் மங்களமூருதி தோரய்யா. தோரி கங்களிகுத்ஸவவீயய்யா.

இங்கு 'கங்களிகுத்ஸவவீயோ' என்னும் பேச்சு, மூன்று நிலைகளில் பகவத் தரிசனத்தின் விருப்பத்தை வெளிப்படுத்துகிறது. புற கண்ணின் தரிசனம், அக கண்ணின் தரிசனம் மற்றும் ஸ்வரூபத்தின் கண்ணின் சாட்சி தரிசனம்.

திருமலை ஸ்ரீனிவாசனின் முன் நின்று தாசர் கூறுகிறார். 'என்ன கங்களிகுத்ஸவவீயோ'. நீ அனைத்து யாத்ரிகர்களுக்கு எப்படி தெரிகிறாயோ, அப்படியே எனக்கும் ஸ்ரீமூர்த்தியாக தெரிந்தால் போதாது. சின்மயமூர்த்தியாக மங்கள மூருதியாக என் எதிரில் வந்து என் இந்த புறக்கண்களுக்கு தரிசனம் கொடு.

அது மட்டுமல்ல. நான் இங்கிருந்து சென்றபிறகும் என் மனதின் கோயிலில் மங்களமூர்த்தியாக வந்து என் அகக் கண்களுக்கு தெரிந்து தரிசனம் கொடு. கடைசியாக, என் ஸ்வரூபேந்திரியத்திற்கு, உன் கல்யாணதம ரூபத்தினால் தெரிந்து, அபரோக்ஷம் ஆகு. ஆகையால், ஸ்வரூபானந்த அனுபவத்தின் நித்ய உற்சவத்தை அருள்வாயாக. அதற்காக, ஹே ஸ்ரீனிவாஸனே, ஸ்ரீஸஹிதனாக வா., வெங்கடரமணா. யத் தே ரூபம் கல்யாணதமம் தத் தே பஷ்யாமி. கங்களிகுத்ஸவவீயோ - என்னும் பேச்சில் குறிப்பிடப்படும் அகக் கண்ணின் தரிசனத்தை அடுத்த பத்யத்தின் நடுவில் தெளிவாக சொல்கிறார்.

கடக கிருகெஜ்ஜெ பெண்டெகளிந்தலொப்புவ
உடுகெ பீதாம்பர தரள கௌஸ்துப ।
பிடித ஷங்க சக்ர கர்ணகுண்டலதிந்த
கடல ஷயன என்ன ஹ்ருதயதொளகெ நில்லோ ।।

கையில் கடக (வளை), காலில் கொலுசு மற்றும் (கிருகெஜ்ஜெ) சலங்கை இவற்றைக் கொண்டுள்ள ரூபம். பீதாம்பரத்தை உடுத்திய ரூபம். கழுத்தில் ஒளிர்வதான கௌஸ்துப மணியின் மாலை கொண்ட ரூபம். மேல் கைகளில் சங்கு சக்ர பிடித்த ரூபம். காதுகளில் மகர குண்டலத்தினால் ஒளிரும் ரூபம் இத்தகைய அழகான ரூபத்தினால், ஹே கடல ஷயன கிருஷ்ணனே, என் ஹ்ருதயத்தின் வந்து நிற்பாயாக.

கிருகெஜ்ஜெ என்பது பல வித ஆபரணங்களைக் குறிப்பிடும் சொல். கழுத்தில் கெஜ்ஜெ-ஸரம், இடுப்பில் கெஜ்ஜெ-ஆபரணம், காலில் கால்-கெஜ்ஜெ. இவை அனைத்தும் கிருகெஜ்ஜெ என்றே அழைக்கப்படுகின்றன. இதையே சம்ஸ்கிருதத்தில் 'க்ஷுத்ரகண்டகா' என்று அழைக்கின்றனர்.

ஸ்ரீஹரியின் கழுத்தில் இருக்கும் கௌஸ்துப மாலையானது, மற்ற மணிகளை மீறியதான பளபளக்கும் மிகச் சிறந்த ஒளியைக் கொண்டிருப்பதாகும். மாலையின் நடுவில் தலைவனாகவே தெரியக்கூடிய மாலையாகும். பகவந்தனின் இதயத்தின் மணி என்னும் பெருமை இந்த கௌஸ்துப மணிக்கு இருக்கிறது. கௌஸ்துபோ வக்ஷஸி மணி:.கழுத்தில் இருந்த மாலையின் மற்ற மணிகளுக்கு யாரும் பெயர் வைக்கவில்லை. கௌஸ்துபத்திற்கு மட்டுமே அந்த பெருமை. இதற்கு காரணம் இருக்கிறது. தாய் லட்சுமிதேவி பகவந்தனின் இதயத்தில் ஸ்ரீவத்ஸமாக நிலைத்திருப்பதைப் போல, பிரம்மதேவன் கௌஸ்துப மணியாக நிலைத்திருக்கிறானாம். தத் கண்டகம் கௌஸ்துபமான தாதா.

பாகவதத்திலும் இந்த வாக்கு வருகிறது.

சைத்யஸ்ய தத்வ மமலம் மணிமஸ்ய கண்டே (3.29.27)

(அவனின் கழுத்தில் சித்தாபிமானியான சதுர்முகனே இன்னொரு ரூபமான கௌஸ்துபத்தை சிந்திக்க வேண்டும்).

ஆசார்யர் உதாரணம் கொடுத்த பாகவத தந்த்ரத்தின் வசனம் இதனை மேலும் தெளிவாக விளக்குகிறது.

ஸ ச பிரம்மா ஹரே: கண்டே கௌஸ்துபத்வேன பாஸதே ||

(சித்தத்தின் அபிமானியாக சைத்ய எனப்படும் அந்த சதுர்முக பிரம்மனே ஹரியின் கழுத்தில் கௌஸ்துபமாக ஒளிர்கிறான்).

இத்தகைய திவ்ய ஆபரணங்களைக் கொண்டு அலங்கரிக்கப்பட்ட பகவந்தனை, தாசர் தன் இதயத்தில் காண விரும்புகிறார். நாராயண உபநிஷத் இவ்வாறு சொல்கிறது. அந்த பகவந்தனை அக-சமுத்திரத்தில், ஹ்ருதய சமுத்திரத்தில் கவிகள் காண்கின்றனர். 'யமந்த: ஸமுத்ரே கவயோऽதிவயந்தி'. இதையே தாசர் பாடினார் 'கடல ஷயன ஹ்ருதயதொளகெ நில்லோ'. நீ புற பாற்கடலில் படுத்திருந்தால் போதாது. எனக்குள்ளும் வா. என் இதயம் என்னும் கடலுக்குள் வந்து நிலைத்திரு. என் அகக்கண்ணிற்கு அத்தகைய தரிசனத்தைக் கொடு. பாரய்யா வெங்கடரமணா. தாசருடைய இந்த வர்ணனையை பார்க்கும்போது, தேவகி வசுதேவர்கள், சிறைச்சாலையில் கண்ட கிருஷ்ணனின் அழகான சிசு ரூபத்தின் வர்ணனையைப் போல இருக்கிறது. தாசர் காண விரும்பும் ரூபத்தையே அப்போது வசுதேவர் கண்டார் என பாகவதம் அதனை இவ்வாறு சொல்கிறது.

தமத்புதம் பாலகமம்புஜேக்ஷணம்
சதுர்புஜம் ஷங்ககதாத்யுதாயுதம் |
ஸ்ரீவத்ஸலக்ஷ்ம்யம் களஷோபிகௌஸ்துபம்
பீதாம்பரம் ஸாந்த்ர பயோத ஸௌபகம் ||

மஹார்ஹவைடூர்ய கிரீட குண்டல
த்விஷா பரிஷ்வக்த ஸஹஸ்ர குந்தளம் |
உத்தா மகாம்ச்யங்க தகங்கணாதிபி:
வீரோசமானம் வஸுதேவ ஐக்ஷத || (பாக 19.4.9-10)

(தாமரைக் கண்களைக் கொண்ட, நான்கு கைகளைக் கொண்ட சிறிய குழந்தை. கைகளில் சங்கு கதை போன்ற ஆயுதங்கள். இதயத்தில் ஸ்ரீவத்ஸ சின்னம். கழுத்தில் ஒளிரும் கௌஸ்துபமணி. பீதாம்பரத்தின் உடை. வைடூர்யம் பொறித்த கிரீட குண்டலங்களின் ஆபரணங்கள், விலைமதிப்பற்ற ஒட்டியாணம், தோள் ஆபரணம், வளையல் ஆகிய ஆபரணங்களைக் கொண்டு ஒளிரும் அழகான மூர்த்தி. இத்தகைய பாலமூர்த்தியான கிருஷ்ணனை வசுதேவன் கண்டான்).

இந்த இரு ஸ்லோகத்தின் சாரத்தையே இங்கு நான்கு பத்திகள் மூலமாக தாசர் கன்னடத்தில் சொல்லியிருக்கிறார். அங்கு சங்கு உடன் கதையை கூறினால்; இங்கு சங்கு, சக்ர என்றார். இதற்கும் காரணம் உண்டு. தாசர் ஸ்ரீனிவாசனின் முன் நின்று பாடிக் கொண்டிருக்கிறார். அவனின் கைகளில் இருப்பவை சங்கு சக்கரமே என தெரிகிறது. ஆகையால் 'பிடித ஷங்க சக்ர' என்றார்.

கூர்மையாக கவனித்தவர்களுக்கு இந்த பத்யத்தில் இன்னொரு சிறந்த விஷயம் புரியும். ஸ்ரீனிவாஸனின் மூல மூர்த்தியின் சிலையில் தெரியும் ஆபரணங்களையே தாசர் இங்கு சொல்லியிருக்கிறார்.
தோளில் கடகங்கள், வளையல்கள்; காலில் கிருகெஜ்ஜெ, தண்டைகள்; இடுப்பில் பீதாம்பர; கழுத்தில் கௌஸ்துப மணியின் முத்து மாலைகள்; கையில் சக்ர சங்குகள் மற்றும் காதில் குண்டல; முக்கியமாக இவை மூல சிலையில் இருக்கும் ஆபரணங்களே ஆகும். ஆசார்ய ராமானுஜருக்கு முன்னர், விக்ரகத்தில் சங்கு சக்ரங்கள் இருந்திருக்கவில்லை என்னும் வாதம் இருந்தாலும், ஆழ்வார்களின் வசனங்களிலும் இந்த சங்கு சக்கரங்களின் குறிப்பு இருப்பதால், மிகவும் பழங்காலத்திலிருந்து இந்த ஆயுதங்களை, மூல மூர்த்தியின் சிலையில் இருந்தது என்று தெரிய வருகிறது.

இவ்வாறு இவை அனைத்தும் தங்க, வெள்ளி கவசங்களைக் கொண்டு ஸ்ரீனிவாஸனின் மூல மூர்த்தியை மூடுவதற்கு முன்னர், நாம் காணக்கூடிய ஆபரணங்கள் ஆகும். ஆகையாலேயே இங்கு ஆபரணங்களுடன் கிரீடத்தின் குறிப்பினை தாசர் செய்யவில்லை.

ஏனெனில், ஶ்ரீனிவாஸன் ஜடாதாரியே தவிர, வைடூரிய கிரீடம் அணிந்தவன் அல்ல என்று சொல்லப்படுகிறது. பழைய சம்ஸ்கிருத குறிப்புகளும், 'தாள் ஜடையும் நீள் முடியும்' என்னும் பேயாழ்வாரின் பாசுரமும் இந்த விளக்கத்தையே சொல்கின்றன.

இந்த அனைத்து விவரங்களால் நமக்கு தெரியும் விஷயம் இதுவே. ஶ்ரீனிவாஸனுக்கு அலங்கார பூஜை ஆவதற்கு முன்னர் நிர்மால்ய விசர்ஜனை ஆகி, மூல பிம்பத்தின் பூர்ண தரிசனம் ஆகும் விடியற்காலையிலேயே தாசர் விக்ரகத்தின் முன்னர் நின்று இந்த பாடலை பாடியிருக்கிறார். தாசர் கண்ட இந்த மூலரூபம், வசுதேவன் கண்ட மூலரூபமே ஆகும். ஆகையாலேயே, வட நாட்டவர்களுக்கு, இன்றைக்கும் ஶ்ரீனிவாஸன், பாலாஜி என்றே அழைக்கப்படுகிறான்.

இங்கு இன்னும் ஒரு குறிப்பிடத்தக்க விஷயம் இருக்கிறது. ஶ்ரீனிவாஸனின் மூர்த்தியில் மேல் வலது கையில் சக்கரம் இருக்கிறது. மேல் இடது கையில் சங்கு இருக்கிறது. தாசரின் இதையே 'பிடித்த சக்ர ஷங்க' என்று சொல்வதற்கு பதில், 'பிடித ஷங்க-சக்ர' என்று ஏன் மாற்று கூறினார்?. இதில் உபாசனையின் ரகசியம் ஒன்று உண்டு. உபாசனையின் விதத்தை சொல்லும் பல வசனங்களில் இதே கிரமத்தில் ஆயுதங்களை நாம் பார்க்கலாம்.

நீலோத்பலதளஷ்யாமம் ஷங்கசக்ர கதாதரம் || (பாக 3.29.13)

(நீல குவளை மலரைப் போல கருமை வண்ண தேகம்; கைகளில் ஷங்க சக்ர கதைகளை தரித்த பகவந்தனின் ரூபத்தை தியானம் செய்ய வேண்டும்).

ஷங்கசக்ர கதாபத்ம தராஷ்சிந்த்யா ஹரேர்புஜா: ||
(த்வாதஸ ஸ்தோத்திரம்)

(சங்கு, சக்ர, கதா, பத்மங்களை தரித்த ஹரியின் தோள்களை சிந்திக்க வேண்டும்).

ப்ருதுதீர்க்க சதுர்பாஹும் ஷங்கசக்ர கதாம்புஜை: |
யுக்தமுன்னித்ரபத்மாக்ஷம் ஸ்புரன் மகர குண்டலம் ||

(ஓம் தத்ஸத் பிரணவகல்ப)

(புஷ்டியான நீளமான நான்கு தோள்கள். அவற்றில் சங்கு சக்ர கதா பத்மங்கள். மலர்ந்த தாமரைகளைப் போல கண்கள். காதில் ஒளிரும் மகர குண்டலங்கள். இத்தகைய பகவந்த ரூபத்தை சிந்திக்க வேண்டும்).

இங்கு அனைத்து இடங்களிலும், சங்கு குறிப்பே முதலில் வருகிறது. பிறகு சக்ர. இவை அனைத்தும் இதயத்தில் பகவந்தனின் உபாசனையின் கிரமத்தை சொல்ல வந்தவை. இவ்வாறு தியான பிரகரணத்தில் முதலில் சங்கு என வரும் இந்த கிரமம் தற்செயலாக வந்தது அல்ல. இதற்கு ஒரு காரணம் உண்டு.

சக்ர - துஷ்ட சக்தியை அழிப்பதற்கான குறியீடு. சங்கு - அமைதியின் குறியீடு. சங்கு - மங்களத்தின், வளமையின் குறியீடு. சக்ர - தமோ மானினியான துர்க்கையின் ரூபம். சங்கு - ஸத்வ மானினியான லட்சுமியின் ரூபம். இந்த இரு சக்திகளும் ஒன்றே ஆனாலும், அனுசந்தானத்தின்படி வெவ்வேறு ஆகும். உபாசனையில் எதற்கு அதிக மதிப்போ அது முதலில் வருகிறது. துஷ்ட நிக்ரஹ ஆகிய செயல்களை சொல்லும் உபாசனையில் சக்ரம் முதலில் வருகிறது. விதிகளை சொல்லக்கூடிய அமைதியான உபாசனையில் சங்கு முதலில் வருகிறது. கரிராஜன் அழைத்தபோது சக்ரத்தை பிடித்து வந்தான்; த்ருவன் அழைத்தபோது சங்கினால் அவனின் கன்னத்தை தொட்டவன் அல்லவா?.

இங்கும் அவ்வாறே. ‘என் கஷ்டங்கள் தூர விலகட்டும்’ என்பதைவிட ‘பகவந்தனைக் காணும் என் விருப்பம் நிறைவேறட்டும்’ என்பது தாசரின் பிரார்த்தனையின் நோக்கம் ஆனபோது, சங்கு முதலில் வந்தது. சங்கு பரம ஷாந்தமானது. இத்தகைய உபாசனையும் மங்களகரமானவை.

உபாசனையின் வகையில் சங்கு முதலாதவதாக இருந்தாலும், பலன் வகையில் எப்போதும் சக்ரமே முதலில் வருகிறது. பிறகு சங்கு. ஏனெனில், துஷ்ட நாசம் முதலில். இஷ்ட லாபம் பிறகு. ம்ருத்யு ரூபமான சம்சாரத்தின் நாசம் முதலில். அம்ருதத்வ

ரூபமான மோட்ச சுகத்தின் லாபம் பிறகு. 'அவித்யாயா ம்ருத்யும் தீர்த்தா வித்யயாऽம்ருதமாஷ்னுதே'. ஸ்ரீபாதத்தை சரணடைந்தவர்களுக்கு, இந்த இரு வரங்கள் முறையே வருகின்றன என்று குறிப்பிடுவதற்காகவே, ஸ்ரீனிவாஸனின் கையில் சக்ர முதலிலும், சங்கு பிறகும் வந்திருக்கிறது. ஆகையாலேயே, மோட்ச பிரதனான பரவசுதேவனின் கையில் இதே வகையில் ஆயுதங்கள் இருக்கின்றன. சக்ர சங்கு கதா பத்ம.

இங்கு நினைக்க வேண்டிய இன்னொரு விஷயமும் இருக்கிறது. இது விடியற்காலையில் சொல்ல வேண்டிய பாடல் ஆகும். விடியலில் தேவதை கேஷவ என்று பார்த்தோம். மேல் வலது கையில் பிரதட்சிணையாக சங்கு சக்ர கதா பத்மங்கள் கேசவனின் ஆயுத கிரமம் ஆகும். அந்த கேசவனே இந்த ஸ்ரீனிவாஸன் அல்லவா? ஆகையால், தாசர், ஸ்ரீனிவாசனை விடியற்காலையில் கேசவனின் ரூபத்தினால் கண்டு பாடினார். இவ்வாறு இந்த கிரமம் வந்திருப்பதில் பல நோக்கங்கள் உள்ளன.

பக்தியின் உபாசனையில் பல விதம். சிலருடையது, கோபிகா ஸ்த்ரியர்களைப் போல காமபக்தி. சிலருக்கு, அக்ரூர உத்தவர்களைப் போல, பாந்தவ்ய பக்தி. சிலருக்கு, பாண்டவர்களைப் போல ஸக்ய பக்தி. மேலும் சிலருக்கு, நாரதாதி ரிஷிகளைப் போல தாஸ்ய பக்தி. 'நீ ஸ்வாமி, நான் தாஸன்' என்னும் ஆராதனையே இந்த வகையினரின் மூல நோக்கம். அனைத்து பக்தியிலும் இது அடங்கியிருந்தாலும், தாஸ்ய பக்தியில் இது தெளிவாக தெரியும் அம்சம் ஆகும்.

நாரதரைப் போல புரந்தரதாசரும், இந்த தாஸ்ய பக்திக்கு முக்கியத்துவம் கொடுத்தவர். 'ஸோऽஹம்' என்னும் கர்வத்தைத் துறந்து, 'தாஸோऽஹம்' என்று கூறியவர். அதற்காகவே அத்தகைய தாஸத்வத்தின் தீக்ஷையை அடுத்த பத்தியில் இவ்வாறு பிரார்த்திக்கிறார்.

ஒடெய நீனெனகெ அனாதி காலதிந்த
படவ நா நின்ன தாஸனய்ய ।
கருகருணதிந்த தாஸத்வ நீடு க

ருடகமனனே வெங்கடேஷ என்ன மனகெ ||

ஒடெய என்றால் இரு அர்த்தங்கள். செல்வந்தன் மற்றும் எஜமானன். இந்த இரு அர்த்தங்களையும் தாசர் இங்கு சரியாக பொருந்துமாறு பயன்படுத்திருக்கிறார். நீ ஒடெய. ஸிரியின் ஒடெய. ஸ்ரீனிவாஸன். நானோ ஏழை. நீ எனது எஜமானன். பிரபு. நான் தாஸன். நீ மொத்த உலகின் தலைவன்.

இந்த உலகில் இருக்கும் எனக்கும்கூட. பிரம்மாதிகள் கூட உன் தாசர்கள். அத்தகைய மிகப்பெரிய தாசர்களின் முன் மிகச்சிறியவனான நான் மிக ஏழையான தாஸன் ஆகிறேன். இந்த ஏழையின் மேலும் உன் கருணை வரவேண்டும். என்னை அருள்வதற்கு சாதாரண கருணை போதாது. கடுகருணை (அதிக) வேண்டும்.

நீ தலைவன். நான் ஏழை. இது அனாதி காலத்திலிருந்து நடந்து வரும் உண்மை. நான் நவகோடி நாராயணன் என்று அழைக்கப்பட்டபோதும், அந்தரங்கத்தில் ஏழையாகவே இருந்தேன். அப்படியே, நீ என் தலைவன். என் பிரபு. ஸ்வாமி. இந்த ஸ்வாமி-தாஸன் என்னும் சம்பந்தம், ஏதோவொரு நொடிப் பொழுதில் ஏற்பட்ட சம்பந்தம் கிடையாது. அனாதி காலத்திலிருந்தும் வரும் உண்மையான விஷயம் ஆகும். நித்ய ஸத்ய. இந்த சம்பந்தம் அனாதி காலத்திலிருந்து இருந்தாலும், அறிவு அனாதியல்ல. சம்பந்தம் இருந்தாலும், அதன் அறிவு இருந்திருக்கவில்லை. 'நானே தலைவன்; நானே நவகோடி நாராயணன். என்னைப் போன்ற செல்வந்தன் யார்?. நானே பிரபு. நான் யாருடைய தாஸனும் அல்ல' என்னும் கர்வத்தினாலேயே வாழ்ந்திருந்தேன். அறிவு இல்லாமல் வாழ்ந்திருந்தேன். அதற்காக 'கருகருணதிந்த தாஸத்வ நீடு'. இந்த தாஸனுக்கு தாஸத்வத்தின் அறிவினைக் கொடு. இந்தப் பிறவியில் உன் கடு-கருணையால் அத்தகைய சந்தர்ப்பம் கிடைத்தது. அடுத்து என்றும் எந்தப் பிறவியிலும் இந்த அறிவு எனக்கு இருக்கட்டும். அனைத்து பிறவிகளிலும் தாஸத்வத்தைக் கொடு.

எந்தப் பிறவியில் வந்தாலும், உன் தாஸனாகவே நான் வருமாறு செய். ஹே கருடகமனனே, ஹே வெங்கடேஷனே, அனைத்து மனதிற்கும் தாஸத்வத்தின் அறிவினைக் கொடு. தாஸத்வத்தின் தீக்ஷையைக் கொடு. அனைத்து மனதிலும் ஸ்வாமியாக, அந்தர்யாமியாக அமர்வாயாக. 'நா நின்ன தாஸனய்ய' என்னும் உபாசனையை தினமும், ஒவ்வொரு நொடியும் மனதில் அமர்ந்து சிந்தனைக்குக் கொடு.

அனைத்து வேதங்களின் அறிவினை நமக்குக் கொடுக்கும் மனோ தேவதை - கருடன். 'ஸுவர்ணோऽகில வேதானாம்'. ஆகையாலேயே, அவனை வேதமய, சந்தோமய என்று அழைக்கிறோம். ஆகையால், கருடன் மொத்த வேத உலகின் குறியீடு. கருடகமன என்றால் அனைத்து வேதங்களில் போற்றப்பட்டு சஞ்சரிப்பவன். 'சந்தோமயேன கருடேன ஸமுஹ்யமான:'. அனைத்து சராசரங்களுக்கும் தலைவன் நீ என்று அனைத்து வேதங்களும் போற்றுகின்றன. ஹே வேதைகவேத்யனான ஹரியே, எனக்கும் அந்த அறிவினைக் கொடு.

நீ கஜேந்திரனின் பக்திக்கு மெச்சி அவன் அழைத்தபோது கருடகமனனாக வந்து அவனுக்கு அருளவில்லையா? இவ்வாறு ஹீன யோனியில் வந்த பக்தனையும் புறக்கணிக்காமல் வந்து அருளியவன் நீ. இந்த ஏழை-தாசனின் மேலும் உன் அந்த கருணையைக் காட்டு. கருட கமனான, 'வேதவேத்யனான ஜகன்னாதனே, இந்த வேங்கடத்தின் வெங்கடேசனாக நின்றிருக்கிறாய். உன் இந்த வெங்கடேஷமூர்த்தியின் முன் ஏழையான தாசன் நான் நின்றிருக்கிறேன். நின்று வேண்டுகிறேன். 'கடுகருணதிந்த தாஸத்வத தீக்ஷெ நீடு என்ன மனகெ'.

பகவந்தனின் இருப்பிடமான இந்த தேகத்தில் பகவந்தன் ஒருவனே இருப்பதில்லை. அனைத்து தத்வாபிமானி தேவதைகளும் இங்கு இருக்கின்றனர். இந்த பிண்டாண்டத்திற்குள் மொத்த பிரம்மாண்டமே இருக்கின்றன என்கிறது அடுத்த (கடைசி) பத்தி.

பரிய மனெயல்லவோ பரிவார உண்டு

பரம புருஷ நின்ன ரூபகளுண்டு |
ஸிரிதேவி ஸஹிததி புரந்தரவிட்டலனெ
கருணதிந்தை மன்மந்திரதொளகெ ||

இது வெறும் காலி வீடு அல்ல. மக்கள் நடமாட்டம் இல்லாத, பாழடைந்த வீடு அல்ல. இங்கு ஒவ்வொரு அடிக்கும் உனக்கு சேவை செய்வதற்காக பலர் இருக்கின்றனர்.

* இந்த அன்னமய கோஷத்தில் ப்ருதிவி-ஜலங்களின் அபிமானிகளான சனி-புதன் இருக்கின்றனர்.
* பிராணமய கோஷத்தில் அக்னி-வாயு- ஆகாஷங்களின் அபிமானிகளான பாவக-மருத் மற்றும் கணேஷர் இருக்கின்றனர்.
* மனோமய கோஷத்தில் மனஸ்-புத்தி- அஹங்காரங்களின் அபிமானிகளான கருட-சேஷ-ருத்ரர் இருக்கின்றனர்.
* விக்ஞானமய கோஷத்தில் சித்த-சேதனர்கள், மஹத் தத்வத்தின் அபிமானிகளான பிரம்ம வாயுகள் இருக்கின்றனர்.
* ஆனந்தமய கோஷத்தில் அவ்யக்த தத்வத்தின் அபிமானினியரான ரமா, உன் சேவைக்காக நிலைத்திருக்கிறாள்.

அப்படியே, ஷோடஷ கலாஸ்வாமியான உன் சேவைக்காக, ஷோடஷ கலைகளில் கலாபிமானிகள் நிலைத்திருக்கின்றனர்.

* ஜீவ கலையில் பிராணதேவர் இருக்கிறார்.
* ஶ்ரத்தா கலையில் பாரதிதேவி இருக்கிறாள்.
* மனஸ் கலையில் ருத்ரதேவர் இருக்கிறார்.
* இந்திரிய கலையில் இந்திரன் இருக்கிறான்.
* அன்ன கலையில் சந்திரன் இருக்கிறான்.
* வீர்ய கலையில் வருணன் இருக்கிறான்.
* தபஸ் கலையில் (ஆலோசன சக்தி) வன்ஹி இருக்கிறான்.
* ஆகாஷ கலையில் கணபதி இருக்கிறான்.
* வாயு கலையில் முக்யவஅயு புத்திரனான மருத இருக்கிறான்.
* அக்னி கலையில் வன்ஹி புத்திரனான பாவக இருக்கிறான்.
* லோக கலையில் பர்ஜன்யன் இருக்கிறான்
* மந்திர கலையில் அக்னிபதியான ஸ்வாஹாதேவி இருக்கிறாள்.
* ஜல கலையில் புதன் இருக்கிறான்.

* நாம கலையில் (பெயர் / புகழ்) அஷ்வினி தேவதைகளின் பத்னியான உஷாதேவி இருக்கிறாள்.
* ப்ருத்வி கலையில் சனி இருக்கிறான்.
* கர்ம கலையில் வருண புத்ரனான புஷ்கரன் இருக்கிறான்.

இந்திரியாபிமானிகள் இந்திரியங்களில் நிலைத்து, சேவைக்கு தயாராக இருக்கிறார்கள்.

* மனதில், பிரம்ம, வாயு, கருட, சேஷ, ருத்ர, இந்திர, காம, அனிருத்த, பிருஹஸ்பதி, சந்திர, வருண மற்றும் பர்ஜன்ய என 12 தேவதைகள் உன் சேவைக்காக நிலைத்திருக்கின்றனர்.
* காதுகளில் சந்திர, யம, வருண, மித்ர மற்றும் குபேரர்கள் இருக்கின்றனர்.
* கண்களில் சூர்ய, சந்திரர் மற்றும் அக்னி - இந்த மூவரும் இருக்கின்றனர்.
* மூக்கில் கோணாதிபதியான நாஸிக்யவாயு (பிரவஹ) மற்றும் நாஸத்ய தஸ்ரர் இருக்கின்றனர்.
* நாக்கினில் ரஸமானி வருணன் இருக்கிறான்.
* த்வக் இந்திரியத்தில் ஸ்பர்ஷ (பிரவஹ) இருக்கிறான். குபேரன் இருக்கிறான். முக்யவாயு புத்திரனான பிராணன் இருக்கிறான்.
* வாக் இந்திரியத்தில் சரஸ்வதி பாரதியர் இருக்கின்றனர். பார்வதி இருக்கிறார். (இவர்களே புத்தியிலும்

இருந்து, ப்ரேரணை செய்கின்றனர் மற்றும் நாக்கினால் சொல்ல வைக்கின்றனர்). இவர்களுடன் அக்னி இருக்கிறான். அக்னிபதி ஸ்வாஹாதேவி இருக்கிறாள்.
* கைகளில் குஷல கர்மகாரகனான இந்திரன் இருக்கிறான். தக்ஷ ப்ரஜாபதி இருக்கிறான்.
* பாதங்களில் கதி-காரகனான இந்திரபுத்ர ஜயந்தன் இருக்கிறான். ஷம்பு நாமகனான இன்னொரு தேவதையும் இருக்கிறான்.
* பாயுவில் விஸர்க காரகனான யமன் இருக்கிறான். மித்ர நாமகனான ஆதித்யன் இருக்கிறான்.
* உபஸ்தத்தில் போக காரகனாக தக்ஷ ப்ரஜாபதி இருக்கிறான். ஸ்வாயம்புவ மனு இருக்கிறான்.

இப்படி, உன் சேவைக்காகவே, இந்த தேகத்தில் 25 தத்வங்களின் அபிமானிகளாகவும், இந்த தேகத்தின் அனைத்து இடங்களிலும் நிலைத்திருக்கின்றனர்.

* புருஷ (ஜீவ) தத்வத்தில் பிரம்மவாயுகள்
* அவ்யக்த தத்வத்தில் சரஸ்வதி பாரதியர்கள்
* மஹத் தத்வத்தில் மறுபடி பிரம்ம வாயுகள்.
* அஹங்கார தத்வத்தில் கருட, சேஷ ருத்ரர்கள்
* மனஸ் தத்வத்தில் இந்திர, ஸ்கந்த (காம)
* இந்திரிய தத்வத்தில் முன்னர் கூறிய இந்திரியாபிமானி தேவதைகள்.

* ஷப்தத்தில் ப்ருஹஸ்பதி மற்றும் பிராண
* ஸ்பர்ஷத்தில் அபான
* ரூபத்தில் வியான
* ரஸத்தில் உதான
* கந்தத்தில் ஸமான

* ஆகாஷத்தில் வினாயக
* வாயுவில் ப்ரவஹ வாயு
* அக்னியில் வன்ஹி
* ஜலத்தில் வருண
* ப்ருத்வியில் தராதேவி

* ஷப்த ஸ்பர்ஷங்களில் கருட பத்னியான ஸுபர்ண இருக்கிறாள்.
* ரூப ரஸங்களில் சேஷபத்னியான வாருணி இருக்கிறாள்.
* கந்தத்தில் பார்வதி இருக்கிறாள்.
* பஞ்சப்ராண புத்திரர் மற்றும் ருத்ர புத்திரருடன் இவரும் உன் சேவை செய்கிறார். இந்த த்ரிமூர்த்திகளே கர்மேந்திரியங்களின் விஷயங்களிலும் நிலைத்திருக்கின்றனர்.
* வாக்கு மற்றும் கரங்களில், ஸுபர்ணி,
* கதி மற்றும் விஸர்ஜன க்ரியையில், வாருணி,
* போக க்ரியையில் பார்வதி

அனைத்தையும்விட அதிகமாக முக்யபிராணனே வலது கண்ணில் இருந்து கொண்டு, உன் வாமன ரூபத்தின் உபாசனை செய்கிறான்.

அவனுடன் ஏழு தேவதைகள் அங்கு நிலைத்திருக்கின்றனர். ருத்ர, பர்ஜன்ய, ஆதித்ய, அக்னி, இந்திர, ப்ருதிவி மற்றும் பாரதி.

அப்படியே மூக்கில் ப்ராண பாரதியர்கள், உன் ஹம்ஸரூபத்தின் உபாசனை செய்கின்றனர். வலது காலின் கட்டை விரலில், பாரப்ருத் நாமகனான பிராண, உன் சேவைக்காக நின்றிருக்கிறான்.

பிராணனின் சேவை இத்துடன் முடியவில்லை. பிராண அபான வியான உதான ஸமான என்னும் ஐந்து ரூபங்களால் பஞ்சப்ராணங்களில் நிலைத்திருக்கிறான். உடன், இதே பெயர்களால் ஐவர் பிராண புத்திரர்கள் மற்றும் ஐவர் ருத்ர புத்திரர்கள், ஷப்த ஸ்பர்ஷ, ரூப, ரஸ, கந்தங்களின் அபிமானிகளாக இங்கு நிலைத்திருக்கின்றனர். இவர்கள் மட்டுமல்ல, நாக, கூர்ம, க்ருகல, தேவதத்த, தனஞ்சய என்னும் ஐந்து பேர் அமுக்யவாயுகளும் உன் சேவைக்காக அங்கும் இங்குமாக சஞ்சரிக்கின்றனர்.

ஜீவாபிமானியாக சதுர்முகன் இருக்கிறான். முக்யபிராணன் இருக்கிறான். தேகாபிமானியாக அஹங்காரிக பிராணன் இருக்கிறான். ஸ்வாயம்புவ மனு இருக்கிறான். தேகத்தின் ஒவ்வொரு இடத்திலும், மூலைமூலைகளில் தேவதைகள் சேவைக்காக காத்து நின்றிருக்கின்றனர்.

* கண்ணின் நடுவில் உள்ள வெள்ளைப் பகுதியில் அஷ்டதிக் பாலகர்கள் இருக்கின்றனர்.
* வலது காதில் அனைத்து தீர்த்தாபிமானி தேவதைகளும் இருக்கின்றனர்.
* நாடிகளில் 72,000 நதி தேவதைகள் இருக்கின்றனர்.
* அவ்வளவே முக்ய பிராணனின் ரூபங்களும் இங்கு நிரம்பியிருக்கின்றன.
* ரோம ரோமங்களில் பாரிஜாதாதி வனதேவதைகள் இருக்கின்றனர். வஸந்த தேவதை இருக்கிறான்.
* தலையில் பிரம்மன் இருக்கிறான். வனதேவதைகள் இருக்கின்றனர்.
* கபோலத்தில் காமன் இருக்கிறான்.

இவ்வாறு இந்த தேகம் ‘பரிய மனெயல்லவோ’. இங்கு உன் சேவைக்காக நின்றிருக்கும் ஒரு குழுவே இருக்கிறது.

இவ்வாறு இந்த வீடு, அனேக தாஸ தாஸியர்களால் நிரம்பியிருக்கிறது. இவர்களிடமிருந்து சேவை பெற்றுக்கொள்வதற்காக பகவந்தனும் பற்பல ரூபங்களால் லீலைகளை செய்கிறான் என்கிறார் தாசர். பரமபுருஷ நின்ன ரூபகளுண்டு.

அன்னமய கோஷத்தில் அனிருத்த
ப்ராணமய கோஷத்தில் பிரத்யும்ன
மனோமய கோஷத்தில் சங்கர்ஷண
விக்ஞானமய கோஷத்தில் வாசுதேவ
ஆனந்தமய கோஷத்தில் நாராயண.

இவ்வாறு இந்த தேகம் என்னும் வீட்டின் பஞ்ச கோஷங்களில் உன் பஞ்ச ரூபங்கள் இருக்கின்றன.

நாகத்தில் க்ருத்தோல்க;
கூர்மத்தில் மஹோல்க;
க்ருகலத்தில் வீரோல்க;
தேவதத்தத்தில் த்யூல்ய;
தனஞ்சயத்தில் சஹஸ்ரோல்க;
என ஐந்து உப பிராணங்களில் உன் பஞ்ச ரூபங்கள் இருக்கின்றன.

தலையில் நாராயண
மத்ய தேகத்தில் வாசுதேவ
பாதங்களில் சங்கர்ஷண
வலது தோளில் பிரத்யும்ன
இடது தோளில் அனிருத்த
என இந்த வீட்டின் ஐந்து பக்கங்களில் உன் ஐந்து ரூபங்கள் இருக்கின்றன.

இதயத்தில் புருஷ, ஆத்ம மற்றும் அந்தராத்ம.
சுஷும்னா நாடியில் ஏகாத்ம.
இவ்வாறு உள் வீட்டில் உன் ரூபங்கள் இருக்கின்றன.

பூமியில் விஷ்வ.
தண்ணீரில் தைஜஸ
நெருப்பில் பிராக்ஞ
வாயுவில் துரீய
ஆகாஷத்தில் ஆத்ம.
மனஸில் அந்தராத்ம
புத்தியில் பரமாத்ம.
அஹங்காரத்தில் ஞானாத்ம.
என இந்த தேகத்தின் அஷ்டவித ப்ரக்ருதிகளில் உன் அஷ்ட ரூபங்கள் இருக்கின்றன.

ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள் மற்றும் அந்த:கரணத்தில் ஷக்தி, ப்ரதிஷ்டா, ஸம்வித், ஸ்பூர்த்தி, ப்ரவ்ருத்தி, கலா, வித்யா, மதி, நியதி, மாயா, கால என்று உன் 11 ரூபங்கள் இருக்கின்றன. அப்படியே இந்த 11 இந்திரியங்களில் மனதில் நாராயண, ஞான கர்மேந்திரியங்களில் மத்ஸ்யாதி தஷரூபங்கள் - என உன் 11 ரூபங்கள் இருக்கின்றன.

அப்படியே சதுர்விம்ஷதி 24 தத்வங்களில் நீ நிரம்பியிருக்கிறாய்.
அவ்யக்த தத்வத்தில் கேஷவ,
மஹத் தத்வத்தில் நாராயண
அஹங்கார தத்வத்தில் மாதவ
மனஸ் தத்வத்தில் கோவிந்த
ஸ்ரோத்ரத்தில் விஷ்ணு
த்வக்கினில் மதுஸூதன
சக்ஷுஸ்ஸில் த்ரிவிக்ரம
நாக்கில் ஶ்ரீதர
வாக்கினில் ஹ்ருஷிகேஷ
பாணியில் பத்மனாப
பாதத்தில் தாமோதர
வாயுவில் சங்கர்ஷண
உபஸ்தத்தில் வாசுதேவ
ஷப்தத்தில் பிரத்யும்ன
ஸ்பர்ஷத்தில் அனிருத்த,
ரூபத்தில் புருஷோத்தம

ரஸத்தில் அதோக்ஷஜ
கந்தத்தில் நரஸிம்ஹ
ஆகாஷத்தில் அச்யுத
வாயுவில் ஜனார்த்தன
அக்னியில் உபேந்திர
ஜலத்தில் ஹரி
நிலத்தில் கிருஷ்ண
என தத்வங்களில், தத்வாபிமானிக்ளில் 24 ரூபங்கள் இருக்கின்றன.

நீ எந்த ரூபத்தை எடுத்திருக்கிறாயோ, அவ்வளவே ரூபங்களில் லட்சுமிதேவியும் உன் உடன் இருந்து சஞ்சரிக்கிறாள். ஆகையால் 'ஸிரிதேவி ஸஹிதத்தி நின்ன ரூபகளுண்டு'. ஸ்ரீதேவி ஸஹிதனாகவே நீ லீலாரூபங்களை செய்து, இந்த தேகம் என்னும் உன் புரத்தில், அரண்மனையில் அல்லது ரதத்தில் சஞ்சரிக்கிறாய்.

ஆகையாலேயே நீ பரமபுருஷன். உன் பெருமைக்கு இணையில்லை. உன் பெருமையின் முனையைக் கண்டவர்களும் இல்லை. தாய் ரமாக்கும் சிக்காத பரமபுருஷன் நீ. 'ந தே விஷோ ஜாயமானோ ந ஜாதோ தேவ மஹிம்ன: பரமந்தமாப'.
இந்த புரத்தில் நான் இருந்தாலும், நான் வெறும் புருஷ. நீ ஒருவனே பரமபுருஷ. ஏனெனில், இங்கு இருக்கும் குடும்பம் அனைத்தும் உனக்காகவே தவிர எனக்காக அல்ல. நீ இருந்தால் நான் இருக்கிறேன். நீ புறப்பட்டால் நானும் புறப்பட வேண்டியிருக்கிறது. ஆகையால், நான் உண்மையான அர்த்தத்தில் புருஷனும் அல்ல. ஏனெனில் நான் இந்த புரத்தின் தலைவன் அல்ல. நீயே உண்மையான புருஷன். ஆகையால் நீயே பரமபுருஷன்.

இத்தகைய பரதெய்வமான நீ உன் இருப்பின் அறிவினை எனக்குள் மூட்டு.

ஸிரிதேவி ஸஹிதத்தி புரந்தர விட்டலனெ
கருணதிந்தலி மன்மந்திரதொளகெ
பாரய்ய வெங்கடரமண ||

ஹே புரந்தர விட்டலனே, ஸ்ரீதத்வ ஸஹிதனாக, ஸ்ரீனிவாஸனாக நீ என் மனோமந்திரத்தில் வந்து நிலைக்க வேண்டும். சித்தத்தில் உன் ஸ்மரணை, உன் தியானம் நிரந்தரமாக நடக்குமாறு அருள்வாயாக. இது என் ஸாதனையின் அஹங்காரத்தின் வேண்டுதல் அல்ல. உன் கருணையினாலேயே இது சாத்தியம் என்னும் அறிவினால் செய்யும் பிரார்த்தனை ஆகும். இந்த தீனனை அருளும் கருணாளுவாக நீ வருவாய் என்னும் நம்பிக்கையின் பிரார்த்தனை ஆகும்.

***

## ஸ்ரீகிருஷ்ண - ஸ்ரீனிவாஸ

வேணுநாத பாரோ வெங்கடரமணனே பாரோ
பாணன பஞ்சிஸிதந்த பாவஜனய்யனெ பாரோ ||ப

பூதனெய மொலெயுண்ட நவ
நீத சோரனே பாரோ |
தைத்ய ராவணன ஸம்ஹரிஸித ஸீதா நாயக பாரோ ||1

பில்லு முரிது மல்லர கெத்த புல்ல நாபனெ பாரோ |
கொல்லதியரொடனெ நலிவ செல்வ மூருதி பாரோ ||2

மந்தரகிரி எத்திதந்த இந்திரமணனெ பாரோ |
குந்ததெ கோவுகள காய்து நந்தனந்தனனெ பாரோ ||3

நாரியர மனெகெ போப வாரிஜாக்ஷனெ பாரோ |
ஈரேளு புவனவ காய்வ மாரனய்யனெ பாரோ ||4

சேஷஷயன மூருதியாத வாஸுதேவனெ பாரோ |
தாஸரொளு வாஸவாத ஸ்ரீஷ புரந்தரவிட்டல பாரோ ||5

வெங்கடரமணன் என்றால், வெங்கடத்தில் நிலைத்த நாராயணனுடைய ரூபமே ஆகும். இவனே பாற்கடலில் படுத்திருக்கும் சேஷசயனன். அவனே கிருஷ்ணன், ஸ்ரீனிவாஸன், புரந்தரவிட்டலன். கிருஷ்ணாவதாரத்தின் லீலையின் இரு

முகங்களே இவை. அதற்காகவே கிருஷ்ணனின் லீலைகளை நினைவுபடுத்துவதாகவே பத்யத்தின் பல்லவி துவங்குகிறது.

வேணுநாத பாரோ வெங்கடரமணனே பாரோ

கோகுலத்தில் குழல் ஊதியவாறு, கோபியர்களை மயக்கிய ஸ்ரீகிருஷ்ணனே, வெங்கடகிரியில் வெங்கடரமணனாக நிலைத்திருக்கிறான். இதையே கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளியில் 'வேணு நாத விஷாரத:' என்று குறிப்பிட்டுள்ளனர்.

இது த்வாபரத்தின் கோபியரின் கதையாக மட்டும் இருக்கக்கூடாது. இப்போதும் இந்த பக்தனின் மேல் கருணையுடன் வேணுவை ஊதி, வேணுநாதனாக வாராய். உன் அந்த குழலின் இன்னிசையை நானும் கேட்குமாறு செய்வாய். சங்கு சக்ரத்தை தாங்கிய வெங்கடரமணனே, கையில் குழலினை தாங்கிய கிருஷ்ணனாக வந்து, எனக்கு தரிசனம் கொடுப்பாயாக. உன் தூக்கத்திலிருந்து எழுந்து வாராய்.

கிருஷ்ணாவதாரத்தின் இன்னொரு லீலா நாடகத்தை பல்லவியின் அடுத்த பத்தி இவ்வாறு சொல்கிறது.

பாணன பஞ்சிஸிதந்த பாவஜனய்யனே பாரோ

பாணனை வஞ்சித்த கதை பாகவதத்தில் வந்திருக்கிறது.

பலிசக்ரவர்த்தியின் மகன் பாணாஸுரன். 1,000 தோள்களைக் கொண்ட மகாவீரன். அவனின் வீரத்திற்கு தேவதைகளும் தோற்றனர். அவனின் தவத்திற்கு மெச்சிய சிவனும், அவனுடைய தலைநகரான ஷோணிதபுரத்தில் காவலுக்காக நின்றான். பாணாஸுரனின் மகள் உஷை. இவள் கிருஷ்ணனின் பேரன், பிரத்யும்னனின் மகனான அனிருத்தனை கனவில் கண்டு மயங்கினாள். இவளின் விருப்பத்தை இவளுடைய தோழியான சித்ரலேகா என்னும் அப்சரஸ் அறிந்தாள். தன்னுடைய மந்திர சக்தியால், துவாரகைக்கு சென்று, படுத்திருந்த அனிருத்தனை அபகரித்து, மந்திர பலத்தினால் அந்தரிக்ஷ மார்க்கமாக வந்து உஷையிடம் சமர்ப்பித்தாள். இந்த விஷயத்தை அறிந்த

பாணாஸுரன் கோபம் கொண்டான். அனிருத்தனை சிறையில் அடைத்தான்.

அனிருத்தனை காணாமல் யாதவர்கள் கவலைப்பட்டனர். அனிருத்தன், பாணனின் சிறையில் இருக்கிறான் என்னும் செய்தியினை நாரதர் மூலம் அறிந்தனர். கிருஷ்ணனின் தலைமையில் யாதவர்கள் பாணனின் ஷோணிதபுரத்திற்கு சென்றனர். கிருஷ்ணன், பாணாஸுரனின் தோள்களை கத்தரித்தான். சிவனின் பிரார்த்தனையின்படி அவனை கொல்லாமல் விட்டான். பாணனின் சிறையிலிருந்து அனிருத்தனை விடுவித்து த்வாரகைக்கு அழைத்துச் சென்றான்.

கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளியிலும் இந்த கதையை வர்ணிக்கும் பெயர் வந்திருக்கிறது. 'பாணாஸுர கராந்தக:'. அதையே தாஸர் பாடினார். பாணன பஞ்சிஸிதெ அய்யனெ பாரோ, அனிருத்தன அஜ்ஜனெ பாரோ.

நீ பாணனின் கர்வத்தை அடக்கினாய். பாணனின் தோள்களை கத்தரித்தாய். எனக்குள்ளும் லோகாபிமானியான உஷெ இருக்கிறாள். என் சொத்து, என் செல்வம், என் மனைவி மக்கள், என் லோகம் என்னும் மோகம், பாணாஸுரனைப் போல 1,000 தோள்களைக் கொண்டு என்னை அழிக்கிறது. நீ சக்ரபாணியாக வந்து எனக்குள் இருக்கும் பாணனின் தோள்களை கத்தரிக்க வேண்டும் / அடக்க வேண்டும். அதற்காக, பாணன பஞ்ஸிதந்த அய்யனே பாரோ.

'பாவஜனய்யனெ பாரோ'. பாவ என்றால் மனஸ். அங்கு பிறந்தவன். நிலைத்தவன் பாவஜ. நீ - பாவஜனய்யன். காமனின் தந்தை. இந்த காமனே ருக்மிணியில் பிரத்யும்னனாக பிறந்தான். அவனின் மகனாக ருக்மியின் மகள் ருக்மவதியில் அனிருத்தன் பிறந்தான். ஆகையால் நீ அனிருத்தனின் தாத்தா. காமனின் தந்தை. பாவஜனய்ய. இதையே அஷ்டோத்தர ஷத நாமாவளில் 'காமஜனக:' என்று சொல்லியிருக்கின்றனர்.

காமனின் தந்தையான நீ, அவனின் மகனின், உன் பேரனின் திருமணத்திற்கு தடையாக இருந்த பாணனின் கர்வத்தை அடக்கி, அவனை வென்றாய்.

இந்த பாவஜனான காமதேவனே, ராமாவதாரத்தில் பரதனாக வந்து, உன் சேவையை செய்தான். நீ பாவஜனய்யனாக, பரதனின் அன்பு அண்ணனாகி அவனுக்கு யுவராஜ பதவியைக் கொடுத்து அருளினாய்.

இந்த பாவஜனான காமதேவனே, ருக்மிணியில் பிரத்யும்னனாக அவதரித்ததைப் போல, ஜாம்பவதியில் ஸாம்பனாக அவதரித்தாய். நீ பாவஜனய்யனாக ஸாம்பனின் அன்பு தந்தையாகி, அவனின் புகழை வளர்த்தாய்.

இந்த பாவஜனான காமதேவனே, ஸனகாதிகளுடன் ஸனத்குமாரனாக பிறந்தான். நீ ஸனத்குமார ரூபத்தினால் அவதரித்து பிரம்மபுத்திரனான அந்த ஸனத்குமாரனுக்கு பிரம்மசர்யத்தை உபதேசித்து அருளினாய். இவ்வாறு நீ பாவஜனய்யன் ஆனாய். பாவஜனான ஸனத்குமாரனின் குருவானாய்.

இந்த பாவஜனான காமதேவனே, ருத்ர புத்திரனாகி ஸ்கந்தனாகி பிறந்தான். ஷிவ பக்தனான பாணாசுரனுடன் நீ போர் புரிந்தபோது, பக்தவத்ஸலனான ஸ்கந்தனும் பாணனின் சார்பில் நின்று, யாதவர்களுடன் போர் புரிவதாக நாடகம் ஆடினான். இவ்வாறு இங்கு பிரத்யும்னனாக, அங்கு ஸ்கந்தனாக, ஒரே தத்வத்தின் இரு ரூபங்கள் எதிரெதிராக போர் புரியும் நாடகத்தை நீ ஆடினாய்.

பாவஜனய்யனான, நியாமகனான உன் இச்சைக்கு தக்கவாறு, ஸ்கந்த, காம இருவரும், நாடகமாடினர். இவ்வாறு காமனின் அனைத்து ரூபங்களிலும் அவனை அருளியவனே. என்னிடம் வா. நானும் காமத்திற்கு பலி ஆகாதவாறு செய்வாயாக.

திருப்பதி மலையில் ஒரு காலை வேளையில் இந்தப் பாடலை பாடிய தாசர், அந்த சமயத்தில் பாணாஸுர விஜயத்தின் கதையை நினைப்பதற்கு ஒரு விசேஷ காரணமும் இருக்கிறது.

சிவபக்தனான பாணாஸுரனை வென்ற, இந்த கிருஷ்ண விஜயத்தின் கதையை, காலை வேளையில் சிந்திப்பவர்களுக்கு வாழ்க்கையில் தோல்வி என்பது இல்லை என்று பாகவதம் சொல்கிறது.

ய ஏவம் கிருஷ்ணவிஜயம் ஷங்கரேண ச ஸம்யுகம் ।
ஸம்ஸ்மரேத் ப்ராதருத்தாய ந தஸ்ய ஸ்யாத் பராஜய: ।।

(பாணனுக்காக நடந்த இந்த சிவ கேஷவனின் யுத்தத்தை, போரில் ஸ்ரீகிருஷ்ணனின் விஜயத்தை, காலையில் எழுந்து நினைப்பவர்கள் என்றும் வாழ்க்கையில் தோற்பதில்லை).

அதற்காகவே, தாசர் சுப்ரபாதத்தில் ஸ்ரீனிவாஸனை இவ்வாறு பாடி அழைத்தார். பாணன பஞ்சிஸிதந்த பாவஜனய்யனெ பாரோ.

அடுத்த பத்தியின் துவக்கத்தில், கிருஷ்ணனின் பால சரித்திரத்தையும், பிற்பகுதியில் ராமாவதாரத்தின் கதையையும் ஒன்றாக வர்ணித்திருக்கிறார்.

பூதனிய மொலெயுண்ட நவ நீத சோரனெ பாரோ ।
தைத்ய ராவணன ஸம்ஹரிஸித ஸீதா நாயகனே பாரோ ।।

பூதனியின் விஷம் தடவிய முலைப் பாலைக் குடித்து, கொல்லதியர்களின் வீட்டு வெண்ணையை திருடித்தின்று வளர்ந்த சிறுவன் அல்லவா நீ?. என் அகத்தில் இருக்கும் மோகம் என்னும் விஷத்தை பறிப்பாயாக. என் இதயத்தில் இருக்கும் பக்தி என்னும் வெண்ணையை திருடி தின்பதற்கு வாராய்.

அஷ்டோத்தர ஷத நாமாவளியிலும் இதே விஷயங்கள் வருகின்றன. கிருஷ்ணனை 'பூதனாஜீவிதஹர:' என்று அழைத்த இந்த ஸ்தோத்திரம், அவனின் வெண்ணெய்க் காதலை பல சொற்களில் வர்ணிக்கிறது. 'நவநீத விலிப்தாங்கோ நவநீத நடோऽனக: । நவநீத நவாஹார:'.

வெண்ணையை திருடியபோது, அந்த பானையை உடைத்து, உடம்பெல்லாம் வெண்ணையை தடவிக் கொண்டவன். தன்னை

விரும்பியவர்களின் வெண்ணெய் என்றால் இவனுக்கு மிகவும் பிடித்தமானது. இவன் இத்தகைய வெண்ணையை திருடுவதாக நடிக்கும் மிகப்பெரிய நடிகன். அவன் திருடினாலும் திருடன் அல்ல; ஏனெனில் அவன் அனக; தோஷம் இல்லாதவன். அவன் நம் பாவங்களை போக்குபவன். நம் பக்தியின் வெண்ணையை திருடுகிறான். அவன் திருட வேண்டும் என்று நாம் காத்திருக்கிறோம். அவன் இத்தகைய திருடன் என்றே நாம் அவனை இதயத்தில் தாங்கு பூஜிக்கிறோம்.

கிருஷ்ணன் ஒருவனே இத்தகைய சித்த-சோரன் அல்ல. பகவந்தனின் அனைத்து ரூபங்களும் ஒன்றே. இந்த ஸ்ரீனிவாஸனே த்வாபரத்தின் கிருஷ்ணன். இவனே த்ரேதையின் ராமன். பகவந்தனின் ரூபங்களில் பேதம் கூறினால், அது நரகத்திற்கான வழி. கிருஷ்ணனை போல ராமனும் ஆத்யாத்மத்தின் நவநீத-சோரன். இதற்காகவே அடுத்த பத்தியில் தாசர், ஸ்ரீனிவாஸனை ராம ரூபத்தினால் கொண்டாடுகிறார்.

தைத்ய ராவணனன ஸம்ஹரிஸி
ஸீதா நாயக பாரோ

சீதைக்காக இலங்கைக்குச் சென்றாய். சீதையை கடத்திய ராவணனைக் கொன்றாய். பர ஸ்த்ரீயர்களை விரும்பும் அவனின் தைத்ய ஸ்வபாவத்திற்கு தக்க தண்டனையைக் கொடுத்தாய். அந்த சீதா நாயகனே, இந்த வேங்கடத்திற்கு வந்து நின்றிருக்கிறாய். என் இதயக் கோயிலிலும் வாராய்.

கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளி கிருஷ்ணனை ‘தானவேந்த்ர வினாஷன:’ என்று அழைக்கிறது. இது பகவந்தனின் அனைத்து அவதாரங்களிலும் நடக்கும் தானவ ஸம்ஹாரத்தின் அர்த்தத்தை அடக்கிய சொல் ஆகும். ராமாவதாரத்தில் ராவண என்னும் தானவேந்திரனைக் கொன்றான். கிருஷ்ணாவதாரத்தில் ஷிஷுபால என்னும் தானவேந்திரனைக் கொன்றான். அதைப் போலவே மாரீச, கும்பகர்ணாதிகளையும், கம்ஸ தந்தவக்ராதிகளையும் கொன்றான். வெங்கடேஷ ஸ்தொத்திரம், ஸ்ரீனிவாஸனை ராமஸ்வரூபத்தினால் துதிக்கிறது. ‘ஸ்ரீராமோ

ராமபத்ரஸ்ச பவபந்தைக மோசக:'. அதற்காகவே தாசர் பாடினார். 'தைத்ய ராவணன ஸம்ஹரிஸித ஸீதா நாயக பாரோ'.

ராமாவதார கிருஷ்ணாவதார என இரண்டிற்கும் பொருந்தக்கூடிய குறிப்புகளில் தொடங்கி, கிருஷ்ணாவதாரத்தின் கதையையே சொல்கிறார், அடுத்த பத்தியில்:

பில்லு முரிது மல்லர கெத்த புல்ல நாபனெ பாரோ |
கொல்லதியரொடனெ நலிவ செல்வமூருதி பாரோ ||

ராமாவதாரத்தில் சீதையின் ஸ்வயம்வரத்தில் சிவனின் வில்லினை முறித்தவன். கிருஷ்ணாவதாரத்தில் வில் விழாவிற்காக மதுராவிற்கு வந்து, அங்கும் சிவனால் கொடுக்கப்பட்ட கம்ஸனின் வில்லினை முறித்தான். அடுத்து, கம்ஸனின் முன்னிலையில் மல்லர்களைக் கொன்றான்.

சாணூர, சல, கோஸலர் என்னும் மூவர் மல்லர்களை தானே கொன்றான். முஷ்டிக, கூட என்னும் இரு மல்லர்களை பலராமனின் உள் இருந்து, பலராமன் மூலமாக கொன்றான். இந்த சம்பவத்தையே, கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளியில் ஒரு நாமமாக வந்திருக்கிறது. முஷ்டிகாசுர சாணூர மல்லயுத்த விஷாரத:.

இவ்வாறு ராமனாக ராவணனை கொன்றான். கிருஷ்ணனாக கம்ஸனின் வில்லினை முறித்து மல்லர்களைக் கொன்றது யார்? புல்லனாபனான மூலரூபி நாராயணனே அல்லவா? பூர்ணமத: பூர்ணமிதம். மூல ரூபத்தைப் போலவே, அவதார ரூபமும் பரிபூர்ணம். அந்த மூல ரூபத்திற்கும், அவதார ரூபங்களுக்கும் சிறிதளவும் வேறுபாடுகள் இல்லை. ஆகையால், இந்த அனைத்து அவதார லீலைகளை ஆடிய நாராயணனே, வாராய்.

'புல்ல' என்பது சம்ஸ்கிருதத்தில் 'மலர்ந்த' என்பதை குறிக்கும் சொல். கன்னடத்தில் இதற்கு 'மலர்ந்த பூ' என்னும் அர்த்தமும் உண்டு. ஆகையால், புல்லனாப என்றால், மலர்ந்த பூவினை நாபியில் தாங்கியவன். 14 உலகங்கள் என்னும் இதழ்களை மலரச்

செய்த தாமரையே அந்த மலர்ந்த பூ. ஆகையால் புல்லனாப என்றால் பத்மனாப.

ஸ்ருஷ்டி செய்வதற்காக பாற்கடலில் படுத்திருக்கும் பகவந்தனின் ரூபம் பத்மனாப. இதையே புருஷ ரூப என்றும் அழைக்கிறார்கள். இதுவே பகவந்தனின் முதல் ரூபம். முதல் அவதாரம். அடுத்த அனைத்து அவதாரங்களுக்கும் இந்த ரூபமே மூலம்.

ஏதன்னானாவதாராணாம்
நிதானம் பீஜமவ்யயம் || (பாக. 1.3.5)

ஆதௌ க்ருஹீதமவதார ஷதைகபீஜம்
யன்னாபி பத்மபவனாதஹ மாவிராஸம் || (பாக. 3.10.2)

ஸ்ரீனிவாஸனை பத்மனாப என்று வெங்கடேச ஸ்தோத்திரம் சொல்கிறது. ஜனார்தன: பத்மனாபோ வெங்கடாசல வாஸின: ||

இவன் மல்லர்களையும் வென்றான். அது மட்டுமல்ல, கொல்லதிகளையும் (கோபிகா ஸ்த்ரீகளை) வென்றான் என்கிறார் அடுத்த பத்தியில். கொல்லதியரொடனெ நலிவ செல்வ மூருதி பாரோ

மகா துஷ்டர்களையும் நடுங்க வைத்த மகாவீரனும் நீயே. கொல்லதியர்களுடன் விருந்தாவனத்தில் ஆடியவனும் நீயே. உன்னைப் போன்ற அழகான மூருதியைக் கண்ட கோபியர்கள் வேறு யாரைக் கண்டு மயங்குவார்கள்?.

ஸ்வர்க்க லோகத்தின் அப்ஸரஸ்களே கிருஷ்ண சேவைக்காக கோகுலத்தில் கொல்லதியர்களாக பிறந்தனர் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. காம-பக்தியே அவர்களின் தர்மம். இந்த கோபி ஜன்மத்திலும் அவர்கள் கிருஷ்ணனை பக்தியுடன் விரும்புகின்றனர். காமத்தின் பின் இருக்கும் பாவம் - பக்தி. ஆகையாலேயே, அவர்களுடைய காமத்தின் பக்திக்கு பக்திகாமனான கிருஷ்ணன் தரிசனம் அளித்தான். அவர்களுடனேயே ஆடினான். அதற்காகவே, கிருஷ்ண அஷ்டோத்தர ஷதநாமம் அவனை 'கோபகோபீஷ்வர:' என்று

அழைக்கிறது. ‘ஜலக்ரீடாஸமாஸக்த கோபிவஸ்த்ராபஹாரக:’ என்று கோபியர்களுடன் அவன் ஆடிய ஆட்டத்தை குறிப்பிடுகிறது.

கோபியர்கள் ஸ்னானம் செய்ய தண்ணீரில் இறங்கியபோது, அவர்களின் ஆடைகளைத் திருடி, அவர்களின் அந்த நிலையைக் கண்டு ஆடியவன் நீயே. நானும் உன் முன் நிர்வாணம் ஆக வேண்டும். இந்த பஞ்ச கோஷத்தின் அங்கியை கழற்றி, லிங்க தேகத்தின் உறையையும் கழற்றி, என்னை நிர்வாணம் ஆக்குவதற்கு வாராய்.

உன்னைப் போன்ற அழகான மூர்த்தி நீ ஒருவனே. கோபியர்கள் மட்டுமே அல்ல. வேதங்களில் வல்லவர்களான ரிஷிகள்கூட ‘யத் தே ரூபம் கல்யாணதமம் தத் தே பஷ்யாமி’ என்று பாடியவாறு, வாழ்க்கை முழுவதும் உன் அழகான கல்யாண மூர்த்தியை காண்பதற்கு விரும்புகிறார்கள். அவர்களின் வாழ்க்கையின் பரம புருஷார்த்தமே அதுதான்.

கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளியில் ஸ்ரீகிருஷ்ணனின் அழகான மூர்த்தியைப் பற்றி பல நாமங்கள் உள்ளன. லீலாமானுஷ விக்ரஹ:, ஸச்சிதானந்த விக்ரஹ:, த்ரிபங்கீ மதுராக்ருதி:, தமாலஷ்யாமலாக்ருதி:.

32 அழகான லட்சணங்களைக் கொண்ட மூர்த்தி அல்லவா பகவந்தனுடையது. அதுவே திவ்ய மங்கள விக்ரகமானது, உலகத்தை காப்பதற்காக, மனித உருவத்தைக் கொண்டு, நந்தகோகுலத்தில் நடமாடியது அல்லவா?

அது என்ன நம்மைப் போன்ற பஞ்சபூதங்களால் ஆன ப்ராக்ருத சரீரமா?. அவன் சச்சிதானந்த விக்ரகன். பரிசுத்தமான ஞான ஆனந்தங்களால் ஆன அழகான மூருதி. அந்த அழகிற்கு வேறு இணை உண்டா?.வ்ருந்தாவனத்தில் ஷரத் காலத்தில், குழல் ஊதியவாறு, மூன்று உலகங்களின் மனதையும் இழுக்கும் அந்த அழகான மூருதியைக் கண்டு மயங்காத கண் இருக்கிறதா?

ஆசார்ய மத்வர், ஸ்ரீகிருஷ்ணனின் அழகினை ‘கோகுலசந்த்ர’ என்று, ‘ஸுந்தரரூப’ என்றும் கூறினார். அத்தகைய அழகான மூருதியை

எனக்கும் காட்டுவதற்கு வருவாயாக. அவதார ரூபங்களை மற்றும் மூல ரூபத்தை பேதம் இன்றி துதிக்கும் பத்ததியையே அடுத்த பத்தி விவரிக்கிறது.

மந்தரகிரி எத்திதந்த இந்திரா ரமணனே பாரோ |
குந்ததெ கோவுகள காய்த நந்தனந்தனனே பாரோ ||

மந்தரகிரியை தாங்கியவன் என்று கூறும் பேச்சு, இரு அவதாரங்களின் கதையினை சொல்கிறது. பாற்கடலைக் கடையும் காலத்தில் கூர்ம ரூபத்தினால் மந்தரகிரியை தூக்கினான் என்பது ஒரு அர்த்தம். அதைப் போல, மந்தரகிரி என்றால் கோவர்த்தன மலை என்றும் ஆகும். மந்தரகிரியை தூக்கிய கூர்மனே, கிருஷ்ணனாக கோவர்த்தன கிரியை தூக்கினான். அதற்காகவே, கிருஷ்ண அஷ்டோத்தர நாமம், அவனை 'கோவர்த்தனாசலோத்தர்த்தா' என்று கொண்டாடுகிறது.

கோவர்த்தனவையும், மந்தரவையும் ஒன்று சேர்த்து சொல்வது, பழங்காலத்திலிருந்தே இருக்கும் பழக்கம். மந்தரகிரி என்றால் பாரமான, திடமான, பெரிய மலை. ஆகையால், கோவர்த்தனமும் மந்தரகிரியே ஆகிறது. உடன் இவ்வாறு சொல்வதால், கூர்மாவதார மற்றும் கிருஷ்ணாவதார ரூபங்களுக்கு அபேதமும் சொல்லியதைப் போல ஆயிற்று. அதற்கே, ஆசார்யரும் கிருஷ்ணனை துதிக்கும்போது 'மந்தரதர கோவிந்த வந்தே' என்று சொல்கிறார். புரந்தரதாசரின் இந்த கிருதியின் பின்னணியில், ஆசார்ய மத்வரின் இந்த ஸ்தோத்திரமே இருக்கிறது.

மந்தரகிரியை தூக்கிய இந்த கூர்மனே, கோவர்த்தனகிரியை தூக்கிய இந்த கிருஷ்ணனே - லட்சுமிபதியான நாராயணன் என்கிறது அடுத்த பத்தி: இந்திரா ரமணனே பாரோ.நீ இந்திராவின் ரமணன். ஸிரியின் அரசன். ஸ்ரீசைலத்தில் நின்ற ஸ்ரீனிவாஸன். கிருஷ்ண ரூபத்தில் இந்த இந்திராவே ருக்மிணியாக ஸத்யபாமையாக உன் சேவையை செய்தாள். நீ துவாரகையில் அவருடன் க்ரீடை செய்தாய். ராம ரூபத்தில் இந்த இந்திராவே ஸீதை ஆனாள். நீ ஸீதா நாயகன் ஆனாய். இவ்வாறு மூலரூபத்தைப் போல, அனைத்து அவதாரங்களிலும் நீ இந்திரா

ரமணன் ஆனாய். ஏனெனில், அவள் உன் நித்யாவியோகினியான மனைவி. இத்தகைய தாய் இந்திராவுடன் கூடிய உன் அழகான மூருதியை எனக்கும் காட்டுவதற்கு வாராய்.

ஆசார்ய மத்வர் இதையே 'ஸுந்தரீநாத' என்றும் 'ருக்மிணீவல்லப' என்று பாடினால், கிருஷ்ணாஷ்டோத்தர ஷத நாமாவளியில் 'கமலாநாத:' என்றும் 'ஸத்யபாரதோ ஜயீ' என்று சொல்கிறார். வெங்கடேஷ ஸ்தோத்திரம் இதையே 'ரமாநாதோ மஹீபர்த்தா' என்று சொல்கிறது. ஸ்ரீபூ ஸஹிதனான நாராயணனே வாராய். ருக்மிணி ஸத்யபாமா ஸமேதனான ஸ்ரீகிருஷ்ணனே வாராய்.

குந்ததெ கோவுகள காய்து நந்த நந்தனனே பாரோ ।

மூன்று உலகங்களையும் காக்கும் நீ - பசுக்களை காப்பது எவ்வளவு கீழான செயல் என்று நினைக்காமல், நந்தகோகுலத்தில் இடையனாக பசுக்களை காக்கிறாய். ஆகையால், கோபாலகரிலும் கீழ்மை சிந்தனைகள் நீங்கி, தன்னம்பிக்கை நிரம்பியது. பெரியவர்கள் சிறிய வேலைகளை செய்தால், அதனால் அவர்கள் சிறியவர்கள் ஆவதில்லை. மாறாக அந்த வேலையின் பெருமையே அதிகரிக்கிறது.

ராஜசூயத்தில் அக்ர பூஜையை ஏற்றுக்கொண்ட நீயே, ஒரு பிராமணரின் கால்களைப் பிடித்து கழுவவில்லையா? நீயே அர்ஜுனனின் சாரதி ஆகவில்லையா?.
இப்படியாக கோபாலகனாக, கொல்லர்களின் தலைவனான நந்தகோபனுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்த நந்தகுமாரன் ஆனாய். எனக்கும் அந்த ஆனத்தத்தினைக் கொடுப்பாயாக. என்னிடம் வாராய்.

இதையே கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளி இவ்வாறு அழகாக சொல்கிறது. 'கோபால: ஸர்வபாலக:'. நந்தநந்தனன் என்பது இங்கு 'நந்தகோப ப்ரியாத்மஜ:' என்று வந்திருக்கிறது. வெங்கடேஷ ஸ்தோத்திரமும் 'கோவிந்தோ கோபதி: க்ருஷ்ண:' என்கிறது. தாஸரின் இந்த இரு பத்திகளில் வந்த விஷயம், ஆசார்ய மத்வரின் கிருஷ்ண ஸ்தோத்திரத்தில் இவ்வாறு வந்திருக்கிறது. 'தேவகி நந்தன நந்தகுமாரா நந்தித கோகுல

வந்திதபாத'. இந்த அனுபாவத்தின் பேச்சுக்கள் அனைத்தும், தாசரின் இந்த பாடலின் பின்னணியில் இருக்கிறது.

அடுத்த பத்தி:

நாரியர மனெகெ போப வாரிஜாக்ஷனெ பாரோ ।
ஈரேளு புவனவ காய்வ மாரனய்யனெ பாரோ ।।

வெண்ணெய் திருடுவதற்காக பெண்களின் வீட்டிற்கு சென்றவன். சென்று வெண்ணையை திருடியவன். வெண்ணையுடன் பெண்களின் மனதையும் கவர்ந்தவன். உன் கண் பார்வைக்கு அவர்கள் சரணடைந்தனர். ஏனெனில், நீ வாரிஜாக்ஷன் அல்லவா? தாமரை போன்ற உன் மலர்ந்த கண்ணினைப் பார்த்து மயங்காதவர்கள் யாரேனும் உண்டோ?. உன் கண்ணின் அழகினைப் பார்த்தபிறகு, அந்த பெண்களுக்கு தம் கண்ணின் சக்தியைப் பற்றி இருந்த அபிமானம் கரைந்து போயிருக்க வேண்டும்.

உன் அந்த தாமரைக் கண்ணின் கருணைப் பார்வையின், அருளை என்னிடமும் செலுத்துவாயாக. 'நாரியர மனெகெ போப வாரிஜாக்ஷனெ'. என் மனதிலும் வந்து நிலைப்பாயாக. கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமம், பகவந்தனை 'கஞ்சலோசன:' என்கிறது. வெங்கடேஷ ஸ்தோத்திரம் 'புண்டரீகாக்ஷ:' என்று கொண்டாடுகிறது. ஆசார்ய மத்வரோ இந்த தாமரைக் கண்ணின் புருஷ- ஸௌந்தர்யத்தை 'இந்திவரோதர தள நயனா' என்று பாடுகிறார்.

ஈரேளு புவனவ காய்த மாரனய்யனெ பாரோ ।।

14 உலகங்களாக பிரிக்கப்பட்ட இந்த உலகத்தை, விஷ்ணு ரூபத்தினால் நீ காக்கிறாய். பற்பல அவதாரங்களில் தைத்யர்களை சம்ஹரித்து, உலகத்தின் பாரத்தினை குறைத்து காக்கிறாய். கடைசியில் மாரக-ஷக்தியான சிவனுக்கும் தலைவனாகி, ஸ்வாமியாகி, 'ஷிவரூபி ஷிவே ஸ்தித:' என்னும் புராண வசனத்திற்கேற்ப, சிவனுக்குள் சிவனாக இருந்து, சம்ஹரிக்கிறாய்.

இவ்வாறு ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களால் ஈரேழு உலகங்களையும் காக்கும் ஹே மாரனய்யனே, 'ஸாக்ஷான் மன்மத மன்மத:' என்று பாகவதத்தில் கொண்டாடப்பட்ட த்ரிலோக ஸுந்தரனே. தியான சமயத்தில் என் சித்தத்தில் அத்தகைய திவ்ய சுந்தர ரூபம் எனக்கு தெரியுமாறு செய்வாயாக. வாராய். வந்து என் சித்தத்தில் நிலைப்பாயாக.

வியாஸ, கபில, தத்த, ஐதரேய, ஹம்ஸ, ஹயக்ரீவாதி ரூபங்களால் பிரம்மாதிகளுக்கும் குருவாக ஞானத்தை உபதேசித்து, ஸன்மார்க்கத்தில் வழியைக் காட்டி, ஈரேழு உலகத்தை காக்கிறாய். புத்த, வ்ருஷப ஆகிய ரூபங்களால் துர்ஜனர்களில் அவித்யையை, மயக்கத்தை உண்டுபண்ணி, சஜ்ஜனர்களை காத்தாய். மாரனே குமாரனாக சிவனிடம் பிறந்தபோது, நீ மாரனய்யனாக, ஸ்கந்தனின் தந்தையாகி சிவனில் நிலைத்து, தாமஸர்களை மயக்கினாய். இவ்வாறு உலகில், லீலா நாடக ஸூத்ர தாரியான ஸ்ரீகிருஷ்ணனே, ஸ்ரீனிவாஸனே, வாராய். என் அஞ்ஞானத்தின் இருட்டினை களைந்து, ஞானத்தின் வெளிச்சத்தை பாய்ச்ச வாராய்.

கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளி 'ஸர்வபாலக: ஜகத்குரு: ஜகன்னாத:' என்னும் நாமங்களில், இந்த அனைத்து விளக்கங்களும் அடங்கியிருக்கின்றன. வெங்கடேஷ ஸ்தோத்திரத்தின் 'ஸ்ருஷ்டிகர்த்தா ஜகன்னாதோ:, பிரம்மாதீனாம் வரப்ரத:' என்னும் பெயர்களும் இதையே சொல்கின்றன. ஆசார்ய மத்வரின் 'ஸ்கந்தஸநந்தன வந்திதபாத' என்னும் வாக்கு 'ஸ்கந்தனை மகனாகப் பெற்ற ருத்ரனாலும் வணங்கப்படுகிறாய்' என்னும் அர்த்தமும் வந்திருக்கிறது.

'மாரனய்யனெ' என்னும் சொல்லுக்கு ஒரு புதிய அர்த்தத்தையும் கொடுப்பதாக இருக்கிறது. பாடலில் கடைசி பத்தி:

ஸேஷஷயன மூருதியாத வாஸுதேவனெ பாரோ |
தாஸரொளு வாஸவாத ஸ்ரீஷ புரந்தர விட்டல பாரோ ||

பாற்கடலில் சேஷனின் மேல் படுத்திருக்கும் பரமாத்மனே. எழுந்து என்னிடம் வாராய். இங்கு மூருதி என்றால் சரீரம். பகவந்தனின் சரீரம் வேறு அல்ல; பகவந்தன் வேறு அல்ல; ஏனெனில், அவன்

ஞானானந்தமய சரீரம் கொண்டவன். நம்மைப் போல பிறப்பு இறப்புகளுக்கு உள்ளாகும் பௌதிக சரீரம் இல்லை. அவனுடைய அப்ராக்ருத சரீரமே அவனுடைய ஸ்வரூபம். இந்த பிரமேயத்தை குறிப்பதற்காகவே 'சேஷஷயன' என்பதற்கு பதில் 'ஸேஷஷயன மூருதி' என்னும் பதத்தை தாசர் கூறியிருக்கிறார்.

இங்கு சேஷஷயன என்னும் பெயர், இந்தப் பாடலில் பின்னணியில் ஒரு சிறப்பு அர்த்தத்தையும் சொல்கிறது. சேஷாத்ரியின் மேல் படுத்திருக்கும் ஸ்ரீனிவாஸனே சேஷஷயன. சேஷாத்ரியில் படுத்தது போதுமய்யா. காலை ஆயிற்று. எழுந்து வாராய் - என்கிறார் தாசர். இந்த சேஷஷயனனே வாசுதேவ என்கிறது அடுத்த பத்தி. 'வாஸுதேவனே பாரோ'. சேஷாத்ரியில் நிலைத்திருக்கும் வெங்கடேஷனே வாசுதேவ என்று வெங்கடேஷ ஸ்தோத்திரம் சொல்கிறது.

வெங்கடேஷோ வாசுதேவ: பிரத்யும்னோs மிதவிக்ரம: |
ஸங்கர்ஷணோs நிருத்தஷ்ச சேஷாத்ரி பதிரேவ ச ||

கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமத்திலும் இந்த பெயர் வந்திருக்கிறது.

ஸ்ரீகிருஷ்ண: கமலாநாதோ வாஸுதேவ: ஸனாதன: |
வஸுதேவாத்மஜ: புண்யோ லீலாமானுஷவிக்ரஹ: ||

வாஸுதேவ நாமக ரூபங்கள் நான்கு உள்ளன:

1. அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் சதுர் ரூபங்களில் சேர்ந்த, பிரணவ நாதத்தினால் வாச்யனான, மோட்ச பிரதனான துரீய ரூபம் - பரவாஸுதேவ.

2. ஸ்வாயம்புவ மனு புத்ரியான தேவஹூதி மற்றும் கர்தம முனிவருக்கு அவதரித்த ரூபம் : கபில வாசுதேவ. பத்ம புராணத்தில் இது தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது.

கபிலோ வாஸுதேவாக்ய
தந்த்ரஸாங்க்யம் ஜகாத ஹ || (பாக. தாத். 1.3.10)

3. வாஸுதேவ மந்திரத்தை ஜபிக்கும் பாலக த்ருவனுக்கு தரிசனம் அளித்த ரூபம்: வரத வாசுதேவ. பிரகாஷ ஸம்ஹிதையில் இந்த ரூபம் சொல்லப்பட்டிருக்கிறது.

அவதாரோ மஹாவிஷ்ணோ: வாஸுதேவ இதீரித: |
யோ த்ருவாய நிஜம் ப்ரதாத் ஸ்தானமன்யானதிஷ்டிதம் ||
(பாக. தாத். 2.7.8)

4. வஸுதேவ சுதனாக பிறந்த ஸ்ரீகிருஷ்ணனின் ரூபம். யாதவ வாஸுதேவ. இந்த அனைத்து அர்த்தங்களும் இங்கு சரியாக பொருந்தியிருக்கின்றன. மோக்ஷ ப்ரதனான பர வாசுதேவனே, பாரோ, இந்த பக்தனை பவ பந்தனத்திலிருந்து விடுவிப்பாய். முக்தியின் வழியில் நடத்துவாய்.

வேதமூலமான ஸாங்க்யா சாஸ்திரத்தின் ரகசியத்தை பிரம்மாதிகளுக்கு உபதேசித்த கபில வாசுதேவனே வாராய். என்னை காப்பாற்று. என் அகத்திலும் சாங்க்ய தத்வ வெளிச்சத்தை பாய்ச்சுவாயாக.

த்ருவ வரத வாசுதேவனே வாராய். என்னை, எதுவும் அறியாத சிறுவன் என்று எண்ணி, அருள்வதற்கு வாராய். ஹே வஸுதேவ தனயனான வாசுதேவ ஸ்ரீகிருஷ்ணனே வாராய். உன் விஷ்வரூபத்தை காட்டுவாயாக. கீதையின் வெளிச்சத்தை வீசு. கண் நிறைய வாத்ஸல்யத்தை நிரப்பிக் கொண்டு என்னை பார்ப்பாய். பாரோ பாரய்யா வாஸுதேவனே.

இவ்வாறு 10 வித அவதாரங்களில், பக்த வாத்ஸல்யத்தை காட்டும் பகவந்தன், தன்னை மறப்பது சாத்தியம் இல்லை என்னும் நம்பிக்கையுடன் தாசர் இந்த பத்தியை பாடுகிறார்.

தாஸரொளு வாஸவாத ஸ்ரீஷ புரந்தரவிட்டல பாரோ ||

தாஸருக்குள் மட்டுமல்ல. அனைவருக்குள்ளும் வசிக்கிறான். 'ஈஷாவாஸ்யமிதம் ஸர்வம்'. ஆனால் மற்றவர்களுக்கு அவனின் இருப்பு தெரிவதில்லை. ஆகையால், அத்தகையவர்களில் அவன் இருந்தும் இல்லாததைப் போல. தாசருக்கோ அவனுடைய இருப்பு

தெரிந்திருக்கிறது. அதற்காகவே அவர் தாசர். தன் இந்த தேகம் 'ஈஷாவாஸ்ய' என்று அறிந்தவர். அந்த அறிவு இருந்ததாலேயே, தாஸ்ய பக்தியில் மெய் மறந்தவர். பகவந்தனுக்கு தன்னை அர்ப்பித்துக் கொண்டவர். ஆகையாலேயே எப்போதும் பகவந்தனின் அருளுக்கு பாத்திரமானவர். நமே பக்த: ப்ரணஷ்யதி: (கீதை 9.13).

தாசர் அவனில் வசித்தார். அதன் பலனாக, அவனும் தாஸரின் வசித்தான். 'மயி தே தேஷு சாப்யஹம்' (கீதை 9.29). மற்றவர்கள் பகவந்தனில் தம் வசிப்பினை அறிந்தவர்கள் இல்லை. பகவந்தனும் அவர்கள் மனதில் வந்து வசிக்கவில்லை.

ஸ்ரீகிருஷ்ணன் இதனை மேலும் தெளிவாக கீதையில் இன்னொரு இடத்தில் சொல்லியிருக்கிறான்.

தஸ்யாஹம் ந ப்ரணஷ்யாமி
ஸ ச மே ந ப்ரணஷ்யதி || (கீதை 6.30)

நான் பக்தர்களுக்கு என்றும் தூரத்தில் இருக்கும் வஸ்து அல்ல. அவனுடைய யோக க்ஷேமத்தினை காத்தவாறு, அவனுக்குள்ளேயே இருக்கிறேன். அவனும் என்னை மறந்து என்றும் என்னிடமிருந்து தூரமாக இருப்பதில்லை. எப்போதும் என் நினைவே அவனுடைய வாழ்க்கையின் சாரமாக இருக்கிறது. இதற்கு எதிராக, அ-பக்தராதவர்கள், பகவந்தனிடமிருந்து தூரமாக இருக்கிறார்கள். ஆகவே, பகவந்தனும் அவர்களிடமிருந்து தூரமாகவே இருக்கிறான். இருவரையும் அருகருகில் கொண்டு வந்து சேர்க்கும் பக்தி ஸூத்ரம் இல்லாதபோது, இந்த வேறுபாடு வளர்ந்து கொண்டே போகிறது. அத்தகையவர்களுக்கு பகவந்தன் 'தூராத் தூரதரம்' ஆகிறான். தாஸர் மட்டுமே இந்த அம்சத்தை போக்கிக் கொண்டவர். ஆகையாலேயே, தாஸர் பாடினார் 'தாஸரொளு வாஸவாத'.

அனன்யாஷ்சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||
(கீதை 9.22)

யார் அனைத்தையும் மறந்து என்னையே சிந்திக்கிறார்களோ, அத்தகைய ஏகாந்த நிஷ்டையின் பக்தர்களின் யோகக்ஷேமத்தின் பொறுப்பினை நான் தாங்குகிறேன். இவ்வாறு - நீயே என் அனைத்தும் என்று பகவந்தனில் தன்னை அர்ப்பித்துக்கொண்ட தாஸர் 'தாஸரொளு' யோகக்ஷேமத்தின் பொறுப்பினை தாங்கி 'வாஸவாத' பகவந்தனை இங்கு நினைக்கிறார். நானும் உன் தாஸன். என் யோகக்ஷேமத்தின் பொறுப்பும் உன்னுடையது என்று பகவந்தனிடம் சொல்வதைப் போல - இந்த பிரார்த்தனை இருக்கிறது.

வெங்கடேஷ ஸ்தோத்திரமும் இந்த விஷயத்தை சொல்கிறது. மாதவோ பக்த வத்ஸல: கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாமாவளி, அவனுடைய பக்த வாத்ஸல்யத்தை விளக்குவதான பல பெயர்களை நம் முன் வைக்கிறது. 'முசுகுந்த ப்ரஸாதக்ருத்', 'குப்ஜாகந்தானுலிப்தாங்க:', 'கிருஷ்ணாவ்யஸனகர்ஷக:', 'விதுராக்ரூரவரத:', 'யுதிஷ்டிர ப்ரதிஷ்டாதா', 'பார்த்தஸாரதி:'.

இத்தகைய, தாஸரில் வசிப்பவனான ஸ்ரீஷனே பாரோ, புரந்தரவிட்டலனே பாரோ. 'ஸ்ரீனிவாஸ: ஸ்ரீய:பதி:' என்கிறது வெங்கடேஷ ஸ்தோத்திரம். தேவகினந்தன: ஸ்ரீஷ: என்கிறது கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாம ஸ்தோத்திரம். அந்த பின்னணியில் தாஸரும் 'ஸ்ரீஷ' என்று அழைக்கிறார். ஸ்ரீஷ என்றால் லட்சுமிபதியும் ஆகிறான். ஸ்ரீஷைலத்தில் நிலைத்திருக்கும் ஈசனும் ஆகிறான். 'ஸ்ரீஷைலாதி நிவாஸாய ஸ்ரீனிவாஸாய தே நம:'.

***

# முத்து கொடுவெனு பாரோ

வெங்கடரமணனே பாரோ சேஷாசல வாஸனே பாரோ ||ப

பங்கஜனாபனெ பரமபவித்ரனெ ஷங்கரமித்ரனே பாரோ ||அப

முத்து முகத மகுவெ நினகெ
முத்து கொடுவெனு பாரோ |
நிர்த்தயவேகோ நின்னொளு நானு
பொந்தித்தேனெ பாரோ ||1

மந்தரகிரியானெத்திதா
நந்தமூர்த்தியே பாரோ |
நந்தனகந்த கோவிந்த
இந்திரெயரஸனெ பாரோ ||2

காமனய்ய கருணாளு
ஷ்யாமல வர்ணனெ பாரோ |
கோமலாங்க ஸ்ரீபுரந்தரவிட்டலனெ
ஸ்வாமிராயனெ பாரோ ||3

புரந்தரதாசர் ஒரு முறை திருப்பதி மலை மேல் ஸ்ரீனிவாஸன் முன் நின்றிருந்தார். ஸ்ரீனிவாஸனின் திவ்ய மூர்த்தியை பார்த்தவாறு, பகவந்தனின் லீலா விபூதிகளை தனக்குள் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீகிருஷ்ணனின் பால ரூபத்தின் லீலைகளை நினைத்து, அவருக்கு ஆனந்தக் கண்ணீரே வந்தது. தியான பரவசத்தில் அவரது மனம் த்வாபரத்திற்கு சென்றது. இவ்வாறு சிந்தித்தது. இங்கு ஸ்ரீனிவாஸனாக நின்ற ஸ்ரீகிருஷ்ணனின் அந்த பால ரூபத்தை கண்ணாரக் காண வேண்டும். அந்தக் குழந்தையை எடுத்து தூக்கிக் கொஞ்ச வேண்டும். இத்தகைய பரவச நிலையில் நின்றிருந்த தாசர், இவ்வாறு பாடத் துவங்கினார்: வெங்கடரமணனே பாரோ, சேஷாசல வாசனே பாரோ.

வெங்கடாசலமே சேஷாசலம். ஆகையால், வெங்கடரமணனே, சேஷாசல வாஸன். ஏழு தலை கொண்ட சேஷனே இந்த ஸப்தாத்ரி. இத்தகைய மலையின் மேல், சேஷஷாயியான நாராயணனின் இருப்பிடம் என்பது பக்தர்களின் நம்பிக்கை.

தேவதாத்மகமான 'திருவெங்கட'த்தின் சிந்தனையினாலேயே பாவங்கள் தூர விலகுகின்றன. இவ்வாறு இருக்கையில், வெங்கடத்தின் தலைவனை நினைத்தால் அதன் பலனை தனியாகவும் சொல்ல வேண்டுமா?. ஆழ்வார்களின் பாசுரங்களும் இந்த வேங்கடத்தின் மகிமையை அற்புதமாக வர்ணித்திருக்கின்றன. வெங்கட என்றால் தமிழில் பாவங்களை போக்குவதானது என்று சொல்வதுண்டு. சம்ஸ்கிருதத்திலும் வெங்கட பதத்திற்கு அதே அர்த்தத்தை சொல்வதுண்டு.

வேம் பாபம் கடதே யஸ்மாத்
தஸ்மாத் வேங்கட உச்யதே ||

வேம் என்றால் பாவங்களை; கட என்றால் சுடுவது. ஆகையால், இந்த மலைக்கு வெங்கடகிரி என்ற பெயர் வந்தது.

இன்னொரு நம்பிக்கையின்படி, த்வாபரத்தில் இந்த மலையின் பெயர் சேஷாசலம். கலியுகத்தில் வெங்கடாசல. மொத்தத்தில் இந்த மலை, இந்த தெய்வம், மிகவும் பழைய காலத்திலிருந்து பக்தர்களின் ஆன்மாவை இழுத்து, ஆராதனை செய்ய வைத்துக் கொண்டிருக்கிறது என்பது முக்கியமான விஷயம் ஆகும். ஆகையாலேயே தாசர் கிரியின் பாவனமான இரு நாமங்களையும் சிந்தித்து அந்த மலையின் அதிதெய்வத்தை அழைக்கிறார்.

வெங்கடரமணனே பாரோ சேஷாசல வாஸனே பாரோ

ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் சேஷத்தில் படுத்திருக்கும் மூர்த்தியே, இங்கு சேஷாசலத்தில் நிலைத்திருக்கிறது என்பதை சொல்வதாக அடுத்த பத்தி இருக்கிறது.

பங்கஜனாபனெ பரமபவித்ரனெ ஷங்கரமித்ரனே பாரோ ||

நீயே அனந்தஷயனனான பத்மனாப. நீயே திருவனந்தபுரத்தில் நிலைத்திருக்கும் பத்மனாப. நீயே உடுப்பியின் அனந்தேஷ்வரத்தில் நிலைத்திருக்கும் அனந்தாஸன. நீயே ஸ்ரீரங்கத்தில் ரங்கனாதன் என்று அழைக்கப்படும் சேஷஷாயியான பத்மனாப. இவ்வாறு திருப்பதியில் நின்ற தாஸர், அனைத்து திவ்ய க்ஷேத்திரங்களின் ரூபங்களையும் நினைத்து அழைக்கிறார். ‘பங்கஜனாபனே பாரோ’.

பங்கஜனாபனே - என்பதே வழக்கத்தில் இருக்கும் பாடம் என்றாலும், ‘பரம பவித்ரனே’ ‘ஷங்கர மித்ரனே’ என்னும் அடுத்த பெயர்களை அழைக்கும்போது ‘பங்கஜனாபனே’ என்பதற்கு பதில், பங்கஜ நேத்ரனே என்பது சரியாக இருக்குமோ என்று தோன்றுகிறது. புண்டரிகாக்ஷனின் ஸ்மரணை அதே அர்த்தத்தை கொடுக்கக்கூடிய பங்கஜனேத்ர என்னும் சொல், சரியாக பொருந்துகிறது என்று தோன்றுகிறது.

உன் ஸ்மரணையாலேயே நம்மை பவித்ரமாக்கும் பரம பவித்ர தத்வம் நீ. விஷ்ணுசஹஸ்ர நாமத்தில் துவக்கத்தில் பீஷ்மர் இதையே கூறுகிறார்.

பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களானாம் ச மங்கலம்

அந்த நாராயணன் பவித்ரங்களைவிட பவித்ரம்; பரம பவித்ரன்; மங்கலங்களுக்கும் மங்கலம்; பரம மங்கலம்; பரம் பவித்ரம் - என்பது விஷ்ணுவின் 1000 நாமங்களில் ஒன்று. பவித்ரம் மங்கலம் பரம்.

கங்காதி தீர்த்தங்கள் - ஸ்னானத்தினால், எடுத்துக் கொள்வதால் பவித்ரமாக்குபவை; அக்னி - ஸ்பர்ஷத்தினால் பவித்ரமாக்குபவை; பகவந்தன் ஒருவனே அவனை நினைத்த நொடியில் பவித்ரமாக்குபவன். ஆகையால், அவன் பவித்ரங்களுக்கும் பவித்ரன். பரமபவித்ரன். கங்காதிகளில் இருக்கும் பவித்ரமாக்கும் சக்தியானது, இவனுடைய சன்னிதான ஆவேசத்தினாலேயே வந்ததாகும். ஆகையால், உண்மையான பவித்ர தத்வ, பகவந்தன் ஒருவனே. அதற்காகவே சாஸ்திரங்கள் சொல்கின்றன.

அபவித்ர: பவித்ரோ வா ஸர்வாவஸ்தாம் கதோऽபிவா |
ய: ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸ பாஹ்யாப்யந்தர: ஷுசி: ||

பவித்ரனோ, அபவித்ரனோ, எந்த நிலையில் இருந்தாலும், தாமரைக் கண்ணனான பகவந்தனை நினைப்பவன், அகமும் புறமும் எப்போதும் பவித்ரனே ஆகிறான். தண்ணீரில் குளித்தால், புறத்தில் மட்டுமே சுத்தம் ஆகிறது. அகமும் புறமும் சுத்தம் ஆகவேண்டுமெனில், பகவந்தனின் ஸ்மரணை என்னும் ஸ்னானம் ஒன்றே வழியாகும்.

அதிநீலகனஷ்யாமம் நளினாயக லோசனம் |
ஸ்மராமி புண்டரீகாக்ஷம் தேன ஸ்னாதோ பவாம்யஹம் ||

கருப்பு மேகத்தைப் போன்ற தேகம். தாமரை போன்ற மலர்ந்த கண்கள். இவற்றைக் கொண்ட புண்டரிகாக்ஷனை நான் சிந்திக்கிறேன். இந்த ஹரி ஸ்மரணை என்னும் ஸ்னானத்தினால் நான் எப்போதும் பவித்ரம் ஆகிறேன்.

இத்தகைய ஸ்னானத்தினால் தேகம், மனம் ஆகியவற்றை சுத்தமாக்கிக் கொண்டு நின்ற தாசர், அந்த பாவன சக்தி எப்போதும் தன்னில் நிலைத்திருக்குமாறு பிரார்த்திக்கிறா. பரம பவித்ரனே பாரோ.சைவ வைஷ்ணவ பேதத்தினால் சமூகத்தில் நிகழும் குழப்பங்களைக் கண்டு நொந்த தாசர், இன்னொரு சிறப்பான நாமத்தினால் பகவந்தனை அழைக்கிறார். ஷங்கர மித்ரனே பாரோ.

சைவர்கள் மற்றும் வைஷ்ணவர்கள் தத்தம் ஸ்வாமிகளின் பெயர்களில் சண்டை போட்டுக் கொள்கிறார்கள். ஆனால், சிவ மற்றும் விஷ்ணு இருவரும் நண்பர்கள். சிவனுடன் பாதி தேகம் கொண்டு நின்றவரான நாராயணனே, சிவனுக்கு மிகவும் பிடித்ததான தத்வம். இவ்வாறு அவர்கள் இருவரும் ஒரு தேகத்தில் சேர்ந்துகொண்டு நட்பாக இருக்கையில், அவர்களின் பக்தர்கள் சண்டை போட்டுக் கொள்கிறார்களே என்னும் வேதனையை இவ்வாறு கூறுகிறார் தாசர். ஷங்கரனுடன் பாதி தேகத்தை பகிர்ந்து கொண்ட ஷங்கர நாராயணனே, ஷங்கரமித்ரனே பாரோ.

தாசர் பகவந்தனை 'ஷங்கரமித்ரனே பாரோ' என்று அழைத்தபோது நாராயண பண்டிதாசார்யரின் ஷிவஸ்துதி அவருடைய மனதில் வந்திருக்கலாம்.

தவ ப்ரியதமாததி ப்ரியதமம் ஸதெய்வாऽந்தரம்
பயஸ்யுபஹிதம் க்ருதம் ஸ்வயமிம ஶ்ரீயோவல்லபம் ।
விபித்ய லகுபுத்தய: ஸ்வபரபக்ஷலக்ஷாயிதம்
படந்தி ஹி லுடந்தி தே ஷடஹ்ருத: ஷுசா ஷுண்டிதா: ।।

(ஹே ஷங்கரனே, ஸ்ரீரமணனான நாராயணன், தனக்கு பரம ப்ரியமான தத்வ. உன் அந்தரங்க உறவினன். பாலுக்குள் வெண்ணெய் இருப்பதைப் போல, உனக்குள் அவன் இருக்கிறான். இதனை அறியாத கெட்ட புத்தியைக் கொண்ட மக்கள், இரு பட்சத்திலும் நின்று வாதம் புரிகிறார்கள். சண்டை போடுகிறார்கள். இந்த கெட்ட செயலால், அவர்கள் துக்கத்தை அனுபவித்து, நரகத்தில் வீழ்கிறார்கள்).

தங்கள் மதத்திற்கு உட்பட்டு, பரதத்வத்தை த்வேஷிக்கும் இத்தகைய மக்களை விஷ்ணுவும் காப்பாற்ற மாட்டான். சங்கரனும் அருள மாட்டான். ஆகவே தாசர் பாடினார் - ஷங்கரமித்ரனே பாரோ.ஷங்கரன் - மனதின் அபிமானி தேவதை. நீ அவனுடைய நண்பன். என்ற பிறகு, நீயும் என் மனதில் நிலைக்கக்கூடாதா என்று அன்புடன் கேட்கிறார் தாசர். ஷங்கரமித்ரனே பாரோ.

இவ்வாறு பகவந்தனை அழைத்த தாசர், தாம் அழைத்த நோக்கத்தை, தம் மனதின் விருப்பத்தை, பகவந்தனின் முன் வைக்கிறார்.

முத்துமுகத மகுவெ நினகெ முத்துகொடுவெனு பாரோ ।
நிர்தயவேகோ நின்னொளு நானு பொந்தித்தேனெ பாரோ ।।

பக்தர்கள் உன்னை அழைத்தால், அதனை காது கொடுத்துக் கேட்காமல், மலையில் மலையாக, நிஸ்சல மூர்த்தியாக நின்றால் எப்படி? பாலகிருஷ்ணனாக கொல்லதியர்களின் வீட்டிற்கெல்லாம் போகவில்லையா நீ? நான் என்ன தவறு செய்தேன்? என் வீட்டிற்கும் செல்ல குழந்தையாக வரக்கூடாதா? ஒரு முறை குழந்தை ரூபத்தில் வந்தால் போதும், உன் அழகான முகத்தை நான் கண் நிறைய காண வேண்டும். பார்த்து, உன்னை தூக்கிக் கொள்ள வேண்டும். தூக்கிக் கொண்டு கொஞ்ச வேண்டும். முத்தம்

கொடுக்க வேண்டும் என்னும் ஆசை எனக்கு இருக்கிறது. உன் பக்தனின் இந்த சிறிய ஆசையை நிறைவேற்றக் கூடாதா?

முத்துமுகத மகுவெ நினகெ முத்துகொடுவெனு பாரோ |

இவ்வாறு தாசர் தமது விருப்பத்தை இந்த இரு வரிகளில் கூறுகிறார்.

ஸ்ரீனிவாஸன் பாலகிருஷ்ணனாக தன்னிடம் நடந்து வருவதில்லை. ஸ்ரீனிவாஸனின் மூர்த்தி அப்படியே நின்றுவிட்டது. அய்யோ ஸ்ரீனிவாஸனே, இவ்வளவு முறை பக்தியுடன் அழைத்தாலும், நீ அதனை கேட்காதவனைப் போல, கல்லாக நின்றிருக்கிறாயே? இத்தகைய கல் நெஞ்சம் உனக்கு ஏன் வந்ததோ? பக்தர்களின் அழைப்பிற்கு உடனடியாக வரும் கருணாமூர்த்தி அல்லவா நீ? நான் உனக்கு தேவையில்லையா? எனக்கு மட்டும் ஏன் இத்தகைய நிராகரிப்பு? நிர்தயவேகோ, பாரோ.

என் நிலை பற்றி நீ அறியாதது ஒன்றும் இல்லை. வாழ்க்கையின் அனைத்து பாக்கியங்களையும் துறந்து, ஐஹிக செல்வங்களையும் துறந்து, உன்னிடம் நான் சரணடைந்திருக்கிறேன். இது உனக்கும் தெரிந்தேயிருக்கிறது. நீயே கதி என்று பக்தி பாவத்துடன் உன் காலடியில் விழுந்திருக்கிறேன். உன் ஒருவனை நம்பியே அனைத்தையும் துறந்து வந்த என்னை நீ கைவிட்டால் என் பாடு என்ன? எனக்கு வேறு யார் கதி?. தயவு செய்து அப்படி செய்யாதே. அவ்வளவு நிர்தயனாக இருக்காதே. நம்பி வந்த பக்தனை கைவிடாதே. ஹே வெங்கடரமணனே, நான் உன்னிடம் சரணடைந்திருக்கிறேன். வாராய். ஒரு முறை உன் கருணை முகத்தினை காட்டுவாய்.

கிருஷ்ணனின் பாலலீலைகளை சொல்லி, புகழும் நடையில் அடுத்த பத்தி வந்திருக்கிறது.

மந்தரகிரியனெத்தி தா னந்தமூர்த்தியே பாரோ |
நந்தனகந்த கோவிந்த இந்திரெயரஸனே பாரோ ||

உன்னை சரணடைந்தவர்களை காப்பாற்றுவது உன் வழக்கமாக இருக்கிறது. த்வாபரத்தின் சம்பவம் எங்களுக்கு தெரியாதா?. இந்திரோத்ஸவத்திற்குப் பதில், கோவர்த்தனோத்ஸவ செய்யுங்கள் என்று நீ கோபாலகர்களுக்கு கூறினாய். இதனால் இந்திரன் கோபம் கொண்டான். கோகுலத்தின் மேல் தொடர் மழையினை பெய்வித்தான். மழையில் சிக்கி தவித்த கோபாலகர்கள், பசுக்கள் உன்னை சரணடைந்தபோது, நீ கோவர்த்தன மலையை தூக்கிப் பிடித்து, ஒரு வார காலம் வரை அவர்களை மழையிலிருந்து காத்தாய். என் மேல் மட்டும் உனக்கு கருணை இல்லையா? வாராய். கோவர்த்தன என்னும் மந்தரகிரியை தூக்கிய கருணாமூர்த்தியே.

அடுத்து, பாற்கடல் கடையும் சமயத்தில், மந்தரமலை கடலில் மூழ்கியது. அப்போது நீ கூர்மனாக அந்த மலையை உன் முதுகில் தூக்கிப் பிடித்தாய். ஏன் அப்படி?. கடலிலிருந்து வந்த அமிர்தத்தைக் குடித்து நீ அமரர் ஆகவேண்டியிருந்ததா? சரணடைந்த தேவதைகளைக் காப்பதைவிட உன்னுடைய இத்தகைய லீலைகளுக்கு வேறு என்ன காரணம் இருக்கமுடியும்?

இவை மட்டுமல்ல. உன் எந்த லீலையும், உன் சுயநலத்திற்காக அல்ல. ஏனெனில், நீ ஸ்வயம் ஆனந்தமூர்த்தி. உன் அனைத்து அவதாரங்களும் அனைத்து லீலைகளும் பக்தர்களின் நலனுக்காகவே. பக்தர்களுக்கு மகிழ்ச்சியை கொடுப்பதற்காகவே. இப்படி இருக்கையில், இந்த பக்தனின் மேல் மட்டும் உனக்கு ஏன் இந்த புறக்கணிப்பு?. வேண்டாம், அப்படி செய்யாதே. பக்தவத்ஸல என்னும் விருதிற்கு குறை வராமல் இருக்கட்டும். வாராய் - மந்தரகிரியனெத்திதானந்த மூர்த்தியே பாரோ.
வஸுதேவனின் மகனாக பிறந்து, நந்தகோபனின் வீட்டை அடைந்து 'நந்தன கந்த'னாக வளர்ந்தாய். அனைவருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் கந்தனாக இருந்தாய். நந்தகோகுலத்தில் பசுக்களை காத்து, 'கோவிந்த' எனப்பட்டாய். இவ்வாறு அன்று அந்த வ்ருந்தாவனத்தில் அனைவருடன், அதாவது மக்களுடன், பசுபக்ஷிகளுடன், வளர்ந்து, அனைவரையும் சிரிக்க வைத்து, தானும் சிரித்து வளர்ந்த ஹே இந்திரெயரஸனே, ஹே ருக்மிணி நாயகனே, ஹே ஸ்ரீனிவாஸனே, நான் வந்தால் மட்டும் ஏன் நிஸ்சல

பிரதிமையாக நின்று விடுகிறாய்?. வாராய், 'நந்தனகந்த கோவிந்த இந்திரெயரஸனெ பாரோ'. ருக்மிணியும் பார்த்து மயங்கிய, ஆசார்ய மத்வருக்கு தரிசனம் அளித்த, உன் பால ரூபத்தின் அழகான முகத்தை காட்டுவாய்.

பகவந்தன் கருணாமூர்த்தி என்ற பிறகு, தன்னைப் பற்றி அவன் நிர்தயன் ஆகமாட்டான் என்னும் முடிவுடன், பாடலை நிறைவு செய்கிறார்.

காமனய்ய கருணாளு ஷ்யாமலவர்ணனெ பாரோ |
கோமலாங்க ஸ்ரீபுரந்தரவிட்டலனெ ஸ்வாமிராயனே பாரோ ||

நீ காமனய்ய - காமனின் தந்தை. எனக்குள் காமன் வந்து அமர்ந்திருக்கிறான். அதாவது, உன்னை காணவேண்டும் என்னும் காம. இவன் இங்கு இருக்கையில், இவனின் தந்தையான நீ ஏன் வந்து அமரவில்லை?

உன்னை காணவேண்டும் என்னும் விருப்பத்தை என்னில் பிறக்கச் செய்தவன் நீயே என்றபிறகு, அந்த விருப்பத்தை நிறைவேற்றுவதும் காமனய்யனான உன் பொறுப்பே அல்லவா?. உன் இந்த விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக வாராய் - காமனய்ய பாரோ.

நீ மகாகருணாளு. உன்னைப் போன்ற கருணாளு நீ ஒருவனே என்று கேள்விப்பட்டிருக்கிறேன். உன் அஷ்டோத்தர ஷத நாமாவளியில் உன்னை 'தயாநிதி' என்றும் 'கருணாநிதி' என்றும் அழைக்கிறார்கள்.

புண்ய ஷ்லோகஸ் தீர்த்தபாதோ வேதவேத்யோ தயாநிதி:
(கிருஷ்ண அஷ்டோத்தர ஷத நாம)

த்ரிவிக்ரமஸ் த்ரிகாலக்ஞ: த்ரிதாமா கருணாகர:
(நாராயண அஷ்டோத்தர் ஷத நாம)

உன் கருணைக்கு சாட்சியாக உன்னை 'அக்ரூர வரத, அஜாமிள வரத, அம்பரீஷ வரத, அஹல்யா வரத, கஜேந்திர வரத, த்ருவ வரத,

பிரகலாத வரத, பாஞ்சாலி வரத, முசுகுந்த வரத, ருக்மாங்கத வரத' என்றெல்லாம் கொண்டாடுகிறார்கள். நம்பியவர்களை கைவிடாமல், கை கொடுத்து காக்கும் கருணாளு என்னும் உன் இந்த பெயர், ஸார்த்தகம் ஆகவேண்டாமா? அப்படியெனில், என் மேலும் உன் கருணையைக் காட்டு. வாராய் 'கருணாளு பாரோ'. மழைமேகம் போல 'ஷ்யாமலவர்ணனெ பாரோ' - ஷ்யாமல வர்ணனான உன் அந்த திவ்ய ரூபத்தை எனக்கு காட்டுவாய்.

பக்தர்கள் உன்னை இவ்வாறு துதிக்கிறார்கள்.

கல்யாணாத்புதகாத்ராய காமிதார்த்த பிரதாயினே |
ஸ்ரீமத் வெங்கட நாதாய ஸ்ரீனிவாஸாய தே நம: ||

உன்னுடையது கல்யாணமய தேகம். திவ்ய மங்கள விக்ரகம். உன்னுடையது அப்ராக்ருதமான அற்புத தேகம். அதனை வர்ணிக்க இயலாது. ஆனாலும், ஷ்யாமல வர்ண. அது ப்ராக்ருத வர்ணங்களிலிருந்து அப்பாற்பட்டது. ஆனாலும், அப்ராக்ருதமான ஷ்யாமல வர்ணத்தினால், ஜீவ ஸ்வரூபத்திற்கு தெரியக்கூடியது.

சாணூராதி மல்லர்களை, கம்ஸ, ஜராசந்தாதிகளை, வென்ற வஜ்ராங்கன் நீ. ஆனால், கொல்லதி பெண்களும் வெட்கம் கொள்ளுமாறு 'கோமலாங்க'த்தைக் கொண்டவன். இத்தகைய அற்புதத்தை நான் வேறு எங்கு சென்று பார்க்கட்டும்?.

ஹே ஸ்ரீபுரந்தரவிட்டலனே, ஹே என் ஸ்வாமிராயனே, உலகிற்கெல்லாம் ஸ்வாமி ராயனே, ஒரு முறை என்னிடம் வாராய்.

பகவந்தனை இவ்வளவு உரிமையுடன் பேசி, அழைக்கும் தாசர், கடைசியில் அவனை 'ஸ்வாமிராயனே பாரோ' என்று அழைக்கிறார். இது மிகவும் சிறந்த வாக்கு. இது சாதாரண வாக்கு அல்ல. பகவந்தன் என் அந்தரங்கத்தின் ஸ்வாமி என்னும் நம்பிக்கையுடன் பேசிய பேச்சு. இது ஸாதனையில் முக்கியமான வாக்கு.

ஸ்வாமி மே விஷ்ணுரித்யேவ நித்யதோஷாஸ்யமஞ்சஸா

(அனுவியாக்யான 4.1.3)

அனைத்து உபாசனையிலும், விஷ்ணுவே என் ஸ்வாமி என்னும் பாவம், நிரந்தரமாக இருக்க வேண்டும்.

ஸத், சித், ஆனந்த, ஆத்ம என்னும் சதுர்குணோபாஸனையில் வந்திருக்கும் ஆத்ம பதத்தின் அர்த்தமும் இதுவே ஆகும். யார் அந்தர்யாமியோ, யார் ஸ்வாமியோ அவனே ஆத்ம. இந்த உபாஸனையின் ரகசியத்தை குறிப்பதற்காகவே, பத்யத்தின் கடைசியில் ‘ஸ்வாமிராயனே’ என்னும் பெயர் வந்திருக்கிறது.

பெரியவர்களை ‘ராயரு’ என்பது வழக்கத்தில் இருப்பதே ஆகும். ராய என்றால் ராஜ, தலைவன்,. அவன் தலைவன். நான் அவனுடைய தாஸன் என்னும் குறிப்பினை இந்த வாக்கியங்கள் சொல்கின்றன.

***

## அபய ரக்ஷை

வெங்கடேஷ தயமாடோ வேதவேத்யனே ||ப

பங்கஜாக்ஷ அபயவித்து பேகென்ன ரக்ஷிஸய்யா ||அப

சித்த சஞ்சலவ பிடிஸோ மத்தெ க்ரோதவ ஓடிஸோ
ப்ராந்தி விஷயங்களு பேட கந்துபித நாராயண ||1

ஸ்ருஷ்டி மூரரொளகு நீனே கஷ்ட படிஸூவரேனோ
நஷ்ட தனவ நோடபேடோ த்ருஷ்டிஸி நோடோ தயாளோ ||2

பாள அபராதி நின்ன ஒளிகெ பந்தெ நானு
ஒலிது என்ன ரக்ஷிஸய்யா மேலுகிரி புரந்தரவிட்டலா ||3

சம்சார சுழற்சியிலிருந்து விடுதலை வேண்டும். அதற்காக பகவந்தனின் பாதத்தின் அபய ரக்ஷை வேண்டும். இவ்வாறு பகவந்தனின் அபய ரக்ஷையை வேண்டியவாறு, தாஸர், ஒவ்வொரு க்ஷேத்திரமாக அலைந்தார். அப்படியே திருப்பதிக்கும் வந்தார். வெங்கடேஷனின் முன் நின்று இவ்வாறு பிரார்த்திக்கிறார்.

வெங்கடேஷ தயமாடோ வேதவேத்யனே

வெங்கடகிரியின் தலைவனை பெயர் சொல்லி அழைத்து, தாஸர் அவனை ‘தய மாடோ’ என்று பிரார்த்திக்கிறார். ‘பக்தியுடன் நடந்துகொள்வது என் கடமை. அப்படியே பக்தர்களின் மேல் கருணை காட்டுவது உன் கடமை அல்லவா?’ என்று கேட்கிறார்.

‘தய மாடோ’ என்பதற்கு இரு அர்த்தங்கள் உண்டு. என் மேல் கருணைப் பார்வையைக் காட்டு - என்பது ஒரு அர்த்தம். என்னிடம் வா - என்பது இன்னொரு அர்த்தம். இரண்டும் இங்கு பொருந்துகின்றன. தயமாடிஸி - என்கிறோம். இரண்டிற்கும் அர்த்தம் ஒன்றே. பாவம் (சிந்தனை) வேறு. பா (வா) என்பதில் அவமரியாதை என்பது இல்லை. ஆனால், மரியாதை கொடுக்கும் விதமாகவும் அது இல்லை. மாறாக உரிமையின் குரலாக அது இருக்கிறது. தய மாடு என்பதில் நான் அழைக்கும் பொருளின்

முன் நான் மிகவும் சிறியவன் என்னும் கருத்து இருக்கிறது. அதனுடனேயே, தய மாடோ என்னும் ‘ஓ’காரத்தின் ஒருமையில் அழைப்பதில், பக்தியின் உரிமையும் தெளிவாக தெரிகிறது.

இவ்வாறு தாசர், நட்பின் உரிமையினால் நண்பர்களை அழைப்பதைப் போல, பாரய்யா, பாரோ - என்கிறார். சில முறை பக்தியின் உரிமையினால், தலைவனை அழைப்பதைப் போல, தய மாடோ என்கிறார். இந்த இரண்டிலும் உரிமை மட்டுமே தெளிவாக நிரம்பியிருக்கிறது என்பது தெரிகிறது.

முதலில் நீ என் மேல் கருணை காட்ட வேண்டும். அது இருக்கிறது என்றால், பிறகு நீ என் மேல், எனக்குள் கருணை காட்ட வேண்டும். இது ஒரு பிரார்த்தனை வழியாகும்.

ஏன் வரவேண்டும் என்பதை குறிக்கும் சொல் பின்னால் வருகிறது - வேதவேத்யனே தயமாடோ.

அவன் அனைத்து வேதங்களாலும் அறியப்படக்கூடியவன். வேதங்களால் மட்டுமே அறியப்படக்கூடியவன். அவனை பிரத்யட்சமாக காண்பதற்கு இல்லை. அவன் முன் தர்க்கங்கள் தோற்கின்றன. ஆகையால், அவனைப் பற்றிய அறிவைக் கொடுக்கும் சக்தி, வேதங்களுக்கு மட்டுமே உள்ளது. இதனை வேதமே கூறுகிறது. ‘நேந்த்ரியாணி நானுமானம் வேதாஹ்யேவைனம் வேதயந்தி தஸ்மாதாஹுர்வேதா இதி’. (இந்திரியங்களை அவனை அறியாது. தர்க்க அவனைத் தொடாது. வேதங்கள் மட்டுமே அவனை அறிய முடியும். ஆகையாலேயே அவற்றை வேதங்கள் - அதாவது ‘அறிய வைப்பவை’ என்று அழைக்கிறார்கள்).

அப்படியெனில், தாஸர் ஏன் எனக்கு தயமாடோ என்று பிரார்த்தனை செய்கிறார்?. கண்ணிற்கு தெரியாதவன் என்று வேதங்களால் சொல்லப்பட்ட அவனை கண்ணால் காண வேண்டும் என்று தாசர் ஏன் விருப்பப்படுகிறார்?. இந்த கேள்விக்கும் இந்த வாக்கியத்திலேயே பதில் இருக்கிறது. வேதவேத்யனே தய மாடோ.

தாசர் கூறுகிறார்: நீ கண்ணிற்கு புலப்படாதவன் என்று வேதங்கள் சொல்கின்றன. அந்த விஷயம் எனக்கு தெரியும். ஆனால், நீ விரும்பியவர்களுக்கு, அவர்களின் அகக் கண்களுக்கு தரிசனம் அளிக்கிறாய் என்றும் அதே வேதம் சொல்கிறது.

யமேவைஷ வ்ருணுதே தேன லப்ய:

அவன் யாரை தன்னவர்கள் என்று ஏற்றுக் கொள்கிறானோ, அத்தகையவர்களின் பக்திக்கு மகிழ்ந்து, அவர்களுக்கு தரிசனம் அளிக்கிறான்.

ஆகையால் மகிழ்ந்தவர்களின் முன் நிற்கிறான் என்று வேதங்களால் சொல்லப்படும் ஹே வேத வேத்யனே. உன் முன் நிற்கும் என் மேலும் தயமாடோ, கருணை காட்டி தரிசனமும் அளிப்பாயாக.

பகவந்தனைக் காணும் விருப்பம் எவ்வளவு ஆழமானது என்பதை அடுத்த பத்தியில் இவ்வாறு கூறுகிறார்.

பங்கஜாக்ஷ அபயவித்து பேகென்ன ரக்ஷிஸய்யா

ஹே பங்கஜாக்ஷனே, ஹே தாமரைக் கண்களைக் கொண்ட அழகான மூர்த்தியே, தயமாடோ. 'பங்கஜாக்ஷ' என்று சொல்வதால், தாசர் இங்கு இரு அர்த்தங்களை சொல்கிறார். பகவந்தனின் எல்லையற்ற ஸௌந்தர்யம் மற்றும் எல்லையற்ற கருணை.

கண்கள் ஸௌந்தர்யத்தின் இருப்பிடம். பங்கஜாக்ஷ - தாமரைக் கண்ணன் என்னும் சொல், கண்களின் அழகினை மட்டும் குறிப்பிடுவதல்ல. மொத்த தேகத்தின் அழகினையும் இந்த சொல் குறிக்கிறது.

கவிஞர்கள் பெண்களை வர்ணிக்கும்போது 'மான் போன்ற கண்கள்' என்கின்றனர். இதிலிருந்து நாம் கண்களின் அழகினை மட்டும் சிந்திக்கக்கூடாது. மாறாக மொத்த தேகத்தின் அழகினையும் சேர்த்து சொல்வதாகவே எடுத்துக் கொள்ள வேண்டும். அனைத்து ஸௌந்தர்யங்களின் கேந்திரமாக இருப்பது - கண். ஏனெனில்,

பகவந்தன் வாமனனாக கண்களில் நிலைத்திருக்கிறான். ஆகையாலேயே, கண்ணிற்கு திரை போட்டு கட்டிவிட்டால், மொத்த ஸௌந்தர்யமும் கெட்டுப் போகிறது. இவ்வாறு தாஸர், பகவந்தனின் எல்லையற்ற ஸௌந்தர்யத்தைக் காணும் விருப்பத்தில் இவ்வாறு கூறுகிறார் : பங்கஜாக்ஷனெ தயமாடோ.

இதன் இன்னொரு அர்த்தம் இவ்வாறு: பங்கஜாக்ஷ - தாமரையைப் போன்ற மலர்ந்த கண்களைக் கொண்டவன். மலர்ந்த கண், அன்பின் வாத்ஸல்யத்தின் குறியீடு. நாம் அன்பினால் கண்கள் மலர்ந்து பார்க்கிறோம். வாத்ஸல்யத்தினால் பார்க்கிறோம். பகவந்தனும், அன்பினால், வாத்ஸல்யத்தினால், தன் கண்களைத் திறந்து, பார்க்க வேண்டும். என்னும் விருப்பத்தினால் தாசர் அழைக்கிறார் - பங்கஜாக்ஷ தயமாடோ.

நீங்கள் கண்டிப்பாக வரவேண்டும். அத்தகைய சந்தர்ப்பம் வந்திருக்கிறது. அப்படி என்ன அவசியம்? - அபயவித்து - பேகென்ன ரக்ஷிஸய்யா.

நீ கருணை காட்டியே ஆகவேண்டும். ஏனெனில், இந்த சம்ஸாரத்தின் ஆபத்துகளால் சூழப்பட்டு நான் பயந்திருக்கிறேன். இதிலிருந்து தப்பிக்க வழி தெரியாமல் தவிக்கிறேன். அதற்காக, அந்த ஆபத்துகளிலிருந்து கரை சேர்க்கக்கூடிய படகோட்டியாகி, தயமாடோ. உன் அருட்பார்வை என்னும் அபயம் கொடு. அபய ஹஸ்தத்தைக் கொடுத்து என்னை இந்த ஆபத்துகளிலிருந்து வேகமாக காப்பாற்றுவாயாக.

எவ்வளவு சீக்கிரம் சாத்தியமோ அவ்வளவு வேகமாக அருள்வாயாக. இனிமேலும் தாமதம் செய்தால், அந்த ஆபத்துகளிலிருந்து தப்பித்துக் கொள்ள என்னால் முடிவதில்லை. ஆகையால், வேகமாக, முழுவதுமாக முழுகும் முன்னர் வந்து காப்பாற்று. அதற்காக - பேகனே தயமாடோ.

அத்தகைய ஆபத்துகளின் பட்டியலை சொல்லி, அவற்றிலிருந்து காப்பாற்றுமாறு சொல்வதே அடுத்த பத்தி.

சித்த சஞ்சலவ பிடிஸோ மத்தெ க்ரோதவ ஓடிஸோ
ப்ராந்தி விஷயங்களு பேட கந்துபித நாராயண ||1

மனஸ் புத்தி அஹங்காரத்திற்குப் பிறகானது - சித்த. மனஸ் விரும்புகிறது. புத்தி தீர்மானிக்கிறது. அஹங்கார தனது முத்திரையை பதிக்கிறது. சித்த - சம்பவங்களை நினைவாக பதிக்கிறது. ஆயிரக்கணக்கான பிறவிகளின் வரலாற்றின் நினைவுகள் இந்த சித்தத்தில் அடங்கியிருக்கின்றன. பகவந்தனின் ஸ்மரணை, தியானங்கள்கூட இந்த சித்தத்திலேயே நடக்கிறது. சித்தத்தின் திரையை திறக்காதவனுக்கு தியான யோகம் சாத்தியம் இல்லை. நிலையான சித்த மட்டுமே நிலையான தியான யோகத்திற்கு இருப்பிடமாக இருக்க முடியும்.

மனஸ் என்பது சஞ்சலமானது. அதனால் எதையும் தீர்மானிக்கவே முடியாது. அது வேண்டும் - வேண்டாதவற்றை நம் முன் வைக்கிறது. வேண்டுமா, வேண்டாமா என்னும் கேள்வி கேட்டு, அதன் பதிலுக்காக நம்மையே பார்க்கிறது. இத்தகைய சந்தர்ப்பத்தில் இது சரி, இது தவறு என்று, இது வேண்டும், இது வேண்டாம் என்று முடிவெடுத்து, நமக்கு வழிகாட்ட வேண்டியது - புத்தி. ஆனால், துர்பலமான புத்தி, திடமான முடிவினை எடுக்கமுடியாமல், நம்மை சஞ்சலத்தில் தள்ளிவிடுகிறது. இந்த தவறினை திருத்திக் கொள்ளமுடியாமல், நம் அஹங்காரம் தடுக்கிறது. இவ்வாறு மனஸ் புத்தி அஹங்காரங்கள் நம்மை கைவிட்டபோது, சித்தமும் ஸ்திரமான தியானயோகத்தில் நிலை கொள்ளாமல் தானும் சஞ்சலமாக இருந்துவிடுகிறது. அதற்காகவே தாசர் முதலில் பகவந்தனில் வேண்டுவது இதையே - சித்த சஞ்சலவ பிடிஸோ.

முதலில் மனோ புத்திகள் வசம் ஆகவேண்டும். அஹங்காரத்தை வெல்ல வேண்டும். அதன் மூலம் சித்த தன் சாஞ்சல்யத்தை களைந்து, ஸ்திரமான தியான யோகத்தில் நிலைக்க வேண்டும். இந்த நிலையை நானே அடைவேன் என்னும் அஹங்காரம் எனக்கு இல்லை. நீயே இந்த சித்தத்தின் சாஞ்சல்யத்தை விடுவித்து, ஸ்திரமான சித்தத்தின் மூலம் உன் அகண்ட ஸ்மரணை - தியானம் சாத்தியம் ஆகுமாறு அருள்வாயாக. அதற்காக, என்

மனதினையும் சுத்தமாக்குவதற்காக நீயே என் மனதில் வந்து நிலைப்பாயாக. தயமாடோ வெங்கடேஷ.

சித்த என்னும் பதத்தின் சிறப்பு அர்த்தத்தில் இந்த பாடலில் பின்னணியை பார்த்தாயிற்று. இப்போது சித்தத்தையும் மனதினையும் ஒன்றாக்கி, சாமான்ய அர்த்தத்தில் இந்த பத்யத்தின் அர்த்தத்தை பார்க்கலாம்.

சித்த - அதாவது மனஸ், சஞ்சலமானது. அது தண்ணீரினைப் போல ஓரிடத்தில் நிற்காமல், அலைபாய்ந்து கொண்டே இருக்கிறது. சஞ்சலம் ஹி மன: கிருஷ்ண: - பார்ப்பதை விரும்புவது; விரும்பியதை அடைவதற்கு முயல்வது அதன் ஸ்வபாவம். ஆயிரம் விருப்பங்கள்; ஆயிரம் ஆசைகள். இவ்வாறு இந்த சித்த. இந்த மனஸ் காமத்தின் இருப்பிடமாக இருக்கிறது. உன்னை தியானிப்பதற்கு பதில், வேறு ஆயிரம் விஷயங்களைப் பற்றி சிந்திக்கிறது. அவற்றைப் பற்றி ஆயிரம் கற்பனைகளை சிந்திக்கிறது. ஆகையால், முதலில் இந்த - சித்த ஸஞ்சலவ பிடிஸோ.

ஆயிரம் விஷயங்களைப் பற்றி சிந்தித்து, சஞ்சலம் கொண்ட மனஸ், அதற்கு பதில், உன்னை மட்டுமே சிந்தித்து தியானிப்பதாகட்டும். விரும்புவது மனதில் சகஜ குணம். ஆனால், அது சஞ்சலத்திற்கு காரணமான உலகின் விருப்பங்களாக இல்லாமல் இருக்கட்டும். திடத்திற்கு காரணமான உன் விருப்பமாகட்டும். அதற்காக என் மனதில் வந்து நிலைப்பாயாக. தயமாடோ வெங்கடரமணா.

மனதினை வெல்லும் நிலைகளில் அடுத்த படி: 'மத்தெ க்ரோதவ பிடிஸோ'. முதலில் சித்த சஞ்சலத்தை விடுவி. பின்னர் க்ரோதத்தை விடுவி.

விருப்பம் - முதல் படி. காமத்திலிருந்து குரோதம் பிறக்கிறது. 'காமாத் க்ரோதோsபிஜாயதே'. இது இரண்டாம் படி. முதலில் விருப்பம் பிறக்கிறது. விருப்பம் நிறைவேறாதபோது, கோபம் வருகிறது. ஆகையால், கோபம், காமத்தின் குழந்தை. காமம் இல்லாதபோது, கோபம் இல்லை. இந்த கிரமத்தை

குறிப்பதற்காகவே முதல் பத்தியில் காமத்தை வெல்வதான பிரார்த்தனை - 'சித்த ஸஞ்சலவ பிடிஸோ'. இரண்டாம் பத்தியில் கோபத்தை வெல்வதான பிரார்த்தனை - 'மத்தெ க்ரோதவ பிடிஸோ'.

காமம் மனதில் இருப்பது. க்ரோதம் அங்கு இருப்பதில்லை. அது வெளியிலிருந்து வருவது. எப்போதும் இருக்கும் காமத்தை ஓட்டும் கேள்வியே இல்லை. இது இருக்க வேண்டியது. அதனை வேறு பக்கமாக திருப்புவதே சரி. உலகின் பக்கத்திலிருந்து, கடவுளின் பக்கமாக திருப்பிவிட்டால், அது விரும்பத்தக்க காமமாக ஆகிறது. ஆகையால் இருக்கும் காமம், நல்லதாக இருக்கட்டும். வரும் க்ரோதம் மட்டும் வராதிருக்கட்டும். அதற்காகவே தாசர் பாடினார் - 'க்ரோதவ பிடிஸோ'.

தாசருக்கு யார் மேலாவது க்ரோதம் இருந்தால், அது க்ரோதத்தின் மேல் மட்டுமே. ஆகவே அவர் பாடுகிறார் : இருக்கும் காமத்தை உன்னிடம் திருப்பிக் கொள். வந்து துன்புறுத்தும் க்ரோதத்தை வராதவாறு தூரம் விலக்கு.

ஸாதகர்களின் முதல் கடமை - காம கிரோதங்களை வெற்றி கொள்ளுதல். ஏனெனில், இந்த காம கிரோதங்களே அனைத்து அனர்த்தங்களின் மூலம் ஆகும். காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ: (கீதை 3.37).

காமகிரோதங்கள் ரஜோகுணத்தின் பரிணாமம் ஆகும். ரஜோ குணத்தை வென்றபோது, காம கிரோதங்கள் மாயமாகி, மனஸ் ஸத்வ மயமாகிறது. அத்தகைய சித்தத்தில் பகவந்தன் வந்து நிலைக்கிறான். ஆகையால், தாஸர் பிரார்த்திக்கிறார். சித்த சஞ்சலத்தை விடுவித்து, காமத்தை பரிசுத்தமாக்கு. க்ரோதத்தை ஓட்டு. மற்றும் பரிசுத்தமான மனதில் வந்து நில். தயமாடோ வெங்கடரமண.

இதையே பகவத்கீதை சொல்கிறது.

காம க்ரோதவியுக்தானாம் யதீனாம் யதசேதஸாம் |
அபிதோ பிரம்ம நிர்வாணம் ஸர்வத்ர விதிதாத்மனாம் ||(கீதை 5-26)

காம க்ரோதங்களை வென்று, சித்தத்தை ஸ்திரமாக்கி, ஸாதன மார்க்கத்தில் ஈடுபடும் ஞானிகளுக்கு அனைத்து இடங்களிலும் அப்ராக்ருதமான பிரம்ம ஸ்வரூபம் தெரிகிறது.

ஆறு எதிரிகளில் காம க்ரோதங்களே முக்கியமானவை. இந்த இரண்டினையும் வென்றால், அகத்தின் அனைத்து எதிரிகளையும் வென்றதைப் போலவே ஆகும். ஆனால், இதனை வெல்லும் வழி என்ன?. காமத்தின் வேர் எது? க்ரோதத்தின் வேர் எது?

ப்ராந்தி விஷயங்களு பேட கந்து பித நாராயண ||

இந்த உலகின் தற்காலிக சுகங்களே, புருஷார்த்தங்கள் என்னும் மயக்கம். அந்த விஷயங்களைப் பற்றியே தொடர்ந்து சிந்தனை. சிந்தனையிலிருந்து முயற்சி. பின், அதனைப் பெற வேண்டும் என்னும் காமம். காமம் நிறைவேறாதபோது க்ரோதம்.

த்யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்கஸ்தேஷோப ஜாயதே |
ஸங்காத் ஸஞ்சாயதே காம: காமாத் க்ரோதோபி ஜாயதே ||
(கீதை 2.62)

விஷயங்களின் சிந்தனையிலிருந்து அவற்றில் விருப்பம் வருகிறது. விருப்பத்திலிருந்து காம பிறக்கிறது. காமத்திலிருந்து க்ரோதம் வருகிறது.

அதற்காக இந்த இத்தகைய மயக்கமானது என்னிடம் வரவேண்டாம். இத்தகைய மயக்கத்தைக் கொடுக்கும் விஷயங்கள் என்னை துன்புறுத்துவது வேண்டாம். இந்த விஷயத்தை அடைதலே பரம புருஷார்த்தம் என்னும் சிந்தனையே வேண்டாம். குருடான கண்ணிற்கு இந்த மயக்கத்தை தரக்கூடிய விஷயங்கள் வந்து சேர்வது வேண்டாம் என்கிறார் தாசர். ப்ராந்தி விஷயங்களு பேட நாராயண. ஹே நாராயணனே, இந்த விஷய மயக்கத்தை விடுவி.

நீ விடுவிக்காமல் வேறு யார் இதனை விடுவிப்பார்கள்? ஏனெனில், நீ கந்து-பிதன். காம ஜனகன். காமனை பிறக்க வைத்த தந்தை நீ. எங்களில் காமனைகளை (விருப்பங்களை) உருவாக்குபவனும்

நீயே. ஆகையால், இந்த காமத்தை வெல்ல வேண்டுமெனில், ‘கந்துபித’னான காமஜனகனான நீயே, கருணை காட்ட வேண்டும். விருப்பங்களை பிறக்கச் செய்த நீயே, இப்போது அவற்றை அழித்து, என் மனதில் வந்து அமரவேண்டும். இவ்வளவு நாட்களாக காமம் இங்கு இருந்தது போதும். இன்னும் காமபிதனான நீ வந்து அமர். அமர்ந்து என்னை ஞானத்தின் வழியில் நடத்து. ஸத்வ குணத்தின் ஸத் பதத்தில் நடத்து.

ஆகையாலேயே, நீ ‘நாராயண’. அர என்றால் தோஷம். நார என்றால் காம கிரோதாதி தோஷங்களை வென்ற தீரர். சஜ்ஜனர்கள். அவர்களுக்கு நீ அயன - கதி. என்னையும் அத்தகைய சஜ்ஜனர்களின் வழியில் நடத்து. எனக்கும் கதியைக் கொடு. நாராயணன் ஆகு.

ஸ்ருஷ்டியின் பந்தனத்திலிருந்து விடுவிக்கும் பகவந்தனின் கருணைப் பார்வையின் பிரார்த்தனை அடுத்த பத்தியில் வருகிறது.

ஸ்ருஷ்டி மூரரொளகு நீயே கஷ்ட படிஸுவரேனோ |
நஷ்ட தனவ நோடபேகோ த்ருஷ்டிஸி நோடோ தயாளோ ||

ஜீவகோடிகளின் ஸ்ருஷ்டி மூன்று வகையாகும். ஸாத்விக, ராஜஸ மற்றும் தாமஸ. ஞானத்தை தேடும் ஜென்மம் - ஸாத்விக ஜென்மம். அஞ்ஞானங்களின் தாக்கத்தினால் அஹங்காரத்தைக் கொண்ட ஜென்மம் - ராஜஸ ஜென்மம். அஞ்ஞானத்தைக் கொண்ட ஜென்மம் - தாமஸ ஜென்மம். இந்த ஜீவனை குண த்ரயங்களால் கட்டிப்போட்டு, மூன்று வித ஸ்ருஷ்டியிலும் நியாமகனாக நீயே இருக்கிறாய்.

ஸாத்விக ஜென்மத்தில் ஞானத்தின் வெளிச்சம் இருக்கிறது. ஸுகத்தின் குளிர்ச்சி இருக்கிறது. ஆனால், அதுவும் ஒரு பந்தனத்தின் சுகமே. ஏனெனில், இந்த ஞானத்தின் வெளிச்சத்துடனேயே அஞ்ஞானத்தின் நிழலும் இருக்கிறது. சுகத்தின் குளிர்ச்சி உடனேயே துக்கமும் சேர்ந்து இருக்கிறது. ஆகையால், ஸ்ருஷ்டியின் பந்தனத்தையே விடுவிக்க நினைப்பவர்களுக்கு, ஸத்வத்தின் பந்தனமும் பிடிப்பதில்லை.

துக்கத்திற்கு மூலமான ஸ்ருஷ்டியின் மூன்று வித பந்தனத்தையும் மீறி நிற்பதற்கு அவன் விரும்புகிறான்.

தாசருடையது இத்தகைய விருப்பமே. ஆகவே அவர் சொல்கிறார். ‘ஸ்ருஷ்டி மொரகொளகு நீனெ’ நிரம்பியிருக்கையில், உன்னை நம்பி சரணடைந்தவர்களை இதிலிருந்து தப்பிக்க விடுவதை விட்டு, யாராவது திரும்பத்திரும்ப இந்த ஸ்ருஷ்டி சக்கரத்தில் தள்ளி ‘கஷ்டபடிஸுவரேனோ’.

ஸ்ருஷ்டியின் மூன்று வகையை இன்னொரு விதத்திலும் பார்க்கலாம். ஸ்தாவர ஜன்ம, ப்ராணி ஜன்ம மற்றும் மனுஷ்ய ஜன்ம. இதையே சாஸ்திரங்களில் இந்த ஜன்மத்தின் ஸ்வபாவத்தை குறிப்பிடும் பெயர்களால் இவ்வாறு சொல்வதுண்டு.

ஊர்த்வ ஸ்ரோதஸ் ஜன்ம: மரம், செடி, கொடிகள்
திர்யக் ஸ்ரோதஸ் ஜன்ம: பசு, பறவைகள்
அர்வாக் ஸ்ரோதஸ் ஜன்ம: மனிதர்கள்

இந்த பெயர்களுக்கு அனேக சாஸ்திரிய விவரங்கள் இருந்தாலும், மேலோட்டமாக நமக்குத் தெரியும் அர்த்தங்களை மட்டும் பார்ப்போம்.

கீழிலிருந்து மேல், காலிலிருந்து தலைக்கு, வேரிலிருந்து கிளைக்கு என ஆகாரங்களை எடுக்கும் மரங்களின் ஸ்ருஷ்டி - ஊர்த்வ ஸ்ரோதஸ் (மேல் நோக்கி வளர்வன). குறுக்கு மார்க்கமாக ஆகாரம் எடுக்கும் பிராணிகளின் ஸ்ருஷ்டி திர்யக் ஸ்ருஷ்டி. மேலிருந்து கீழாக - தலையிலிருந்து கால் வரை ஆகாரம் எடுக்கும் மனிதர்களின் ஸ்ருஷ்டி - அர்வாக் ஸ்ரோதஸ்.

இவ்வாறு மூன்று குணங்களால் மூன்றையும் மூன்று விதத்தில் நியந்த்ரணம் செய்பவன் நீயே. இதையே தாசர் குறிப்பிடுகிறார். கீதையிலும் இதே வாக்கு வந்திருக்கிறது.

ந ததஸ்தி வினா யத் ஸ்யாத் மயா பூதம் சராசரம். (கீதை 10.39)

சராசராத்மகமான அனைத்து ஸ்ருஷ்டியிலும் நான் நிரம்பியிருக்கிறேன். என் விருப்பம், ரக்ஷை இல்லாமல் எந்த ஜீவியும் இருப்பதில்லை.

இவ்வாறு நீயே நமக்குள் இருந்து, இவ்வாறெல்லாம் பற்பல யோனிகளில் நம்மை தள்ளி துன்புறுத்தலாமா என்று தாசர் கேட்கிறார். கஷ்டபடிஸுவரேனோ?

துக்கதூரனான நீயே உள்ளே இருந்தாலும், நம்மை மட்டும் நம் பிராரப்த கர்மத்திற்கு ஏற்றவாறு ஸ்ருஷ்டியின் துக்கத்தில் தள்ளுகிறாயே? இது சரியா? யாராவது பக்தர்களை இவ்வாறு - கஷ்டபடிஸுவரேனோ?.

நாம் செய்ததை அனுபவிக்க வேண்டும். அதற்காக பகவந்தனை திட்டி என்ன பலன்? 'நா மாடித கர்ம பலவந்தவாதரெ நீ மாடுவுதேனோ தேவ'. இது சரிதான். நீ மனது வைத்தால் இந்த கஷ்டமும் பரிகாரம் ஆகிறது என்கிறார் தாசர் அடுத்த பத்தியில். - நஷ்டதனவ நோடபேகோ.

புத்தி நாசமே ஆத்ம நாசம். 'புத்தினாஷாத் வினஷ்யதி'. பகவந்தனை மறந்து வாழ்வதே வாழ்க்கையின் மிகப்பெரிய நஷ்டம். என்னில் இத்தகைய கீழ்மை இருந்திருக்கலாம். ஏதேதோ பிறவிகளில் நான் உன்னை மறந்து வாழ்ந்திருக்கலாம். அவ்வளவு ஏன்? இந்த பிறவியிலேயே நான் வைர வியாபாரி ஆனபோது, காசு சம்பாதிக்கும் நோக்கத்தில், உன்னை மறந்து மிகப்பெரிய நஷ்டம் அடைந்தேன். அந்த முன்னர் இருந்த தேகத்தை பார்க்காதே ஐயா. இப்போது புதிய பிறவியைப் பெற்று, உன்னை சரணடைந்திருக்கிறேன். வாழ்க்கையின் உண்மையான நோக்கம் என்ன என்பதை இப்போது நான் கண்டுகொண்டிருக்கிறேன்.

இரண்டாம் பத்தியின் கடைசி வரி: த்ருஷ்டிஸி நோடோ தயாளோ.

இப்போது நான் காசுக்காக ஆசைப்படும் நாயக் அல்ல. பக்தியை விரும்பும் தாசன். என் இந்த மாற்றத்தை, நீ கவனித்து பார்க்க வேண்டாமா? ஆகையால், முன்னர் நடந்த அனைத்தையும் மறந்துவிடு. தாஸத்வத்தின் புதிய பிறவியைப் பெற்று வந்த

என்னை, ஒரு முறை கருணையுடன் - த்ருஷ்டிஸி நோடோ தயாளோ.

வெறும் பார்ப்பது இல்லை. வேண்டுமோ வேண்டாமோ என்று பார்ப்பது இல்லை. தொடர்ந்து வேண்டியவாறு நின்ற இந்த பக்தனை மிகவும் அன்புடன் பார்க்க வேண்டும். அதற்காகவே தார் திரும்பத்திரும்ப வேண்டிக் கொள்கிறார் : த்ருஷ்டிஸி நோடோ.

ஒரு முறை நினைத்தால் போதும். அனைத்து பிறவிகளின் பாவங்களையும் போக்கும் பரம தயாளு நீ என்று கேட்டதுண்டு. அத்தகைய தயாளுவான நீ என்னையும் கருணைப் பார்வையினால் பார்க்க வேண்டாமா?. இல்லையெனில் 'தயாளு' என்னும் உன் விருதுக்கு என்ன அர்த்தம் என்று சொல்லி, பகவந்தனிடம் முறையிடுகிறார். தயாளோ, த்ருஷ்டிஸி நோடோ.

பாடலில் கடைசி பத்தி:

பாளி அபராதி நின்ன பளிகெ பந்தெ நானு |
ஒலிது என்ன ரக்ஷிஸய்யா மேலுகிரி புரந்தர விட்டலா ||

எனக்குத் தெரியும். நான் 'பாள அபராதி'. வாழ்க்கை முழுவதும் அபராதியாகவே வாழ்ந்திருக்கிறேன். அதுவும் அப்படி இப்படியான தவறுகள் இல்லை. பற்பல தவறுகள் என் மூலமாக நடந்திருக்கின்றன. மன்னிக்கவே முடியாத தவறுகளும் இருக்கலாம். நான் இல்லை என்பதில்லை. ஒப்புக் கொள்கிறேன். - பாள அபராதி நானு.

என் தவறுகள் எவ்வளவு பெரியது என்பது உனக்கு நன்றாகவே தெரியும். உன்னைத் தவிர வேறு யாரும் என் இந்த தவறுகளின் கடலை தாண்ட வைக்க முடியாது என்பதும் உனக்கு தெரியும். அதற்காகவே வேறு யாரின் தயவையும் வேண்டாமல், நேரடியாக உன்னிடமே வந்திருக்கிறேன். இனி சரணாகதன் ஆகவேண்டியது மட்டுமே உன்னுடைய வேலை.

ஒலிது என்ன ரக்ஷிஸய்யா மேலுகிரி புரந்தரவிட்டலா.

மேலுகிரி - மலைகளிலெல்லாம் பெரியதான மலை. வெங்கடாசலம். இத்தகைய சிறந்த மலையில் வந்து நின்ற புரந்தரவிட்டலனே, உன்னை சரணடைந்த இந்த பக்தனின் வேண்டுதலுக்கு தரிசனம் கொடுப்பாயாக. என்ன ரக்ஷிஸய்யா.

***

## பிற்சேர்க்கை

ராக: ஷங்கராபரண. தாள: சாபு

தூகிரெ ரங்கன தூகிரெ கிருஷ்ணன
தூகிரெ அச்யுதானந்தன ||ப

தூகிரெ வரகிரி அப்ப திம்மப்பன
தூகிரெ காவேரி ரங்கய்யன ||அப

இந்திரலோகதொளு உபேந்திர மலக்யானெ
இந்து முகியரெல்ல தூகிரெ |
இந்திர கன்னிகெயரு சந்ததி பாடுத
நந்தனகந்தன தூகிரெ ||1

நாகலோகதல்லி நாராயண மலக்யானெ
நாககன்னிகெயரு தூகிரெ |
நாகவேணியரு நால்குனேணனு பிடிது
பாக்யவந்தனெந்து தூகிரெ ||2

ஜலதியொளாலத எலெயல்லி மலகித
சலுவன தொட்டில தூகிரெ |
ஸுலபதேவரதேவ பலிபந்த மோசக
எளெயன தொட்டில தூகிரெ ||3

ஸூஸுவ மடுவினோள் காளியன துளிதிட்ட
தோஷ விதூரன தூகிரெ |
ஸாஸிரநாமத ஸர்வோத்தமனெந்து
லேஸாகி தொட்டில தூகிரெ ||4

அரளெலெ மாகாயி கொரள பதக ஸர
தரளன தொட்டில தூகிரெ |
உரகாத்ரிவாஸ ஶ்ரீபுரந்தரவிட்டலன
ஹருஷதி பாடுத தூகிரெ ||5

***

மங்களம் ஜய மங்களம்
மங்களம் ஶுப மங்களம் ||ப

அக்ரூரகொலித த்ரிவிக்ரமகெ
நக்ரனகெலித பராக்ரமிகெ |
ஷக்ரன கர்வாபஹாரவ மாடித
ஶுக்ரன சிஷ்யன கெலிதவகெ ||1

கங்கெய படெத ஶ்ரீரங்கனிகெ
ரங்குமாணிக்ய துங்குரதவகெ |
ப்ருங்ககுந்தளெயர வ்ரதவனெ கெடஸித
அங்கஜனய்ய ஶுபாங்கனிகெ ||2

தரெயொளதிக வெங்கடாசலதி
ஸ்திரவாகி புஷ்கரிணியலி நெலஸிஹகெ |
பரதர ஶ்ரீபுரந்தரவிட்டலகெ
வரவெங்கட ஶ்ரீநிவாஸனிகெ ||3

***

## ஶ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***